மஹாகவி காளிதாசரின்

# ரகுவம்சம்

**(1 முதல் 6 சருக்கங்கள்)**

தமிழ்த் தெளிவுரை

ஸ்ரீவித்யானந்தா
டாக்டர் C. R. ஆசார்யா

1991

முதற் பதிப்பு : 1991





ஸ்ரீவித்யானந்தா,
டாக்டர் C. R. ஆசார்யா
நெ. 3, நேரு நகர்,
திருத்தணி - 631209.
செங்கை அண்ணா மாவட்டம்,
தமிழ்நாடு

அச்சிட்டோர் : ஸ்ரீ கிருஷ்ணசித்ரா பிரிண்டர்ஸ்,
நெ. 4, நாகேஸ்வரன் ரோடு.
தி நகர் சென்னை - 600 017.
போன் : 441286

# முகவுரை

உலகறிந்த மாபெரும் கவிஞர்களுள் ஒருவர் காளிதாசர். இவரது வரலாற்றைப் பற்பலவாகப் பேசிவருகின்றனர். தன்வந்தரி க்ஷபணகர், அமரசிம்மர், சங்கர், வேதாளபட்டு, கடகற்பரர், காளிதாசர், வராகமிகிரர், வரருசி ஆக ஒன்பதுபேர்களும் விக்ரமார்க்க மன்னரின் அவையை அலங்கரித்து இருந்தனர் என்பர். இவர்களே 'நவரத்தினங்கள்' என வழங்கி வந்தனர்.

இவர்களுள் 'தன்வந்தரி' என்பவர் ஆயுர்வேத மருத்துவ நூலை இயற்றியவர். க்ஷபணகர் எந்தநூலை இயற்றினதும் தெரியவில்லை. 'அமரம்' என்னும் பெயரால் நாடெங்கும் புகழ் வாய்ந்த வடமொழி நிகண்டு 'நாமலிங்காநுசாஸணம்' எனப்படும். நூலை இயற்றியவரே அமரசிம்மர். சங்கரைப் பற்றி வரலாறேதெரியவில்லை. வேதாளபட்டரின் நூல்களும் காண முடியவில்லை. கடகற்பரர் பிராக்ருத மொழியில் சில நூல்களை இயற்றியுள்ளார் என்று கூறுகின்றனர். காளிதாசர் ரகுவம்சம், குமாரசம்பவம், மேகசந்தேசம் என்னும் மாபெருங் காப்பியங்களையும், அபிஜ்ஞான சாகுந்தலம், விக்ரமோர்வசீயம், மாளவிகாக்னிமித்ரம் என்னும் மூன்று நாடகங்களையும் வடமொழியில் இயற்றினார். வராகமிகிரர் சோதிட வல்லுநராய்த் திகழ்ந்தார். 'ப்ரீஹத்ஸம்ஹிதை', 'ப்ரிஹஜ்ஜாதகம்' என்னும் இரு சோதிட நூல்களை இயற்றியுள்ளார். வரருசி என்பவர் இலக்கண நூல்களை இயற்றியுள்ளார். இவ்வொன்பது பேர்களையும் உண்மையில் 'நவரத்தினங்கள்' என்றே சொல்ல வேண்டும். இவர்களுள் காளிதாசர் தலைசிறந்தவர் என்பதில் ஐயமில்லை. இவர் விக்ரமார்க்கமாமன்னன் அவையில் இருந்தார் என்று சொல்லப்பட்ட போதிலும், 'தாரா' என்னும் நகரத்தை ஆண்டுவந்த 'போஜமன்னனுக்கும் இவருக்கும் மிகவும் தொடர்பு உண்டு. இதற்குப் பற்பல சான்றுகள் உள்ளன. 'உவமை காளிதாசருக்கே உரியது' என்று கூறுவர். 'கவிதல குருஹ் காளிதாஸோ விலாஸஹ'—என்று ஜெயதேவ மகாகவி கூறியுள்ளார்.

மகாகவிகளை எண்ணும்போது இவர் சுண்டுவிரல்மீது நிற்பார். இவரைப் போன்ற கவீசுவரர் இவருக்கு முன்பு இருந்தது இல்லை; பின்பும் பிறந்ததுமில்லை. இவ்வளவு புகழ்வாய்ந்த ஒரு மாபெரும் கவிஞரின் வாழ்க்கை வரலாறு நமக்குக் கிடைக்காதது மிக மிக

விருந்தத் தக்கது. இவரைப் பற்றி கூறிக் கொள்ளும் கதைகள் வெறுங் கற்பனைகளாகவே இருக்கலாம். எனினும் அவை சுவை மிக்கவை. ஆனதால், மக்களிடையே வழங்கப்பெற்று வருகின்றனர். அவை சுவையாக உள்ள போதிலும், அவருடைய வாலைப் பருவம் பற்றிய கூற்றுகள் நம்பத் தக்கவையாக தோன்றுவதில்லை. எவை எப்படி இருந்த போதிலும், நமக்குத் தேவையை மட்டும் தற்போது கவனிப்போம்.

கால நிச்சயம்: —

காளிதாசர் விக்ரமார்க்கரின் காலத்தவராயின் அவர் கி. மு. 56ஆம் ஆண்டிலிருந்ததால், 2,000 ஆண்டுகட்கு முற்பட்டவராக இருந்திருக்க வேண்டும், சில அறிஞர்கள் இவர் குப்த வம்சத்தரச ரான சந்திரகுப்த விக்ரமாதித்திய மன்னன் காலத்திலிருந்தவ ரென்றும் கூறுவர். அவ்வாறாயின் கி. பி. 350 ஆம் ஆண்டுக்குப் பின் வாழ்ந்தவராயிருக்க வேண்டுமென்பது—அதாவது 1600 ஆண் டுகளுக்கு முன்பு வாழ்ந்திருக்க வேண்டும். உலக வழக்கில் உள்ள படி காளிதாசர் போஜமன்னரின் அவையில் இருந்திருந்தால், அவர் கி.பி. 1000 முதல் 1050 வரை 900 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்து வந்தவர் எனக் கூறுதல் வேண்டும்.

காளிதாசர் பெயரில் இருவர் வாழ்ந்து வந்ததாக சில அறிஞர்கள் கூறுவர். அவ்வாறாயின் விக்கிரமார்க்க மன்னரின் காலத்தில் ஒரு வரும், போஜமன்னர் அவையில் மற்றொரு காளிதாசரும் இருந் தாரோ; தெரிய முடியவில்லை. இவர் கௌடநாட்டவர் என்றும், கௌண்டின்ய கோத்திரத்தவர் என்றும் கூறுவர். இக்கூற்றுகட்கு தக்கச் சான்றுகள் கிடையா. இதற்கு காரணம் இவர் பிற கவிகள் தங்கள் கவிகளில் தங்களைப் பறறிக் கூறிக் கொண்டதுபோல், தன்னைப் பற்றிய விளக்கம் யாதொன்றும் எந்த காப்பியத்திலும் கூறிக் கொள்ளாததே ஆகும்.

காளிதாசரைப் பற்றி சில இழிவான கதைகள் கூறப்பட்டுள்ள[illegible] அவர் சிறுவயதில் ஆடுகளை மேய்த்து வந்தாரென்று ஒரு க[illegible] யிலும், இன்னும் இழிவாக, கழுதையை மேய்த்து வந்தார் என ம[illegible] மோர் கதையிலும் கூறியதையும் காணலாம். திருமணம் ஆன பின்பு காளிகாம்பாள் அருள் பெற்று சிறந்த கவியானாரென்று கதைகளின் கூற்று. கதைகள் எவ்வாறிருப்பினும், அவர் மேற்கூறிய நீசமான தொழில்கள் செய்திருந்து வந்தால் விரைவில் பேரறிஞராவதற்கு முடிந்திருக்காது. ஒருவேளை கல்லாதவராய் திரிந்து கொண்டிரிந் திருக்கலாம்; பிறகு திருந்தி காளி பகதனாய் காளிதாசராக மாறி

இருக்கலாமென்பது ஒப்புக்கொள்ளத்தக்க கருத்தாகும். இளமையில் இவ்வாறு கல்லாது திரிந்த பிறகு பெரிய புலவராக மாறிய தெலுங்கு புலவர்-'சின்னய சூரி' என்பவரும் ஒருவராகும். அதுபோல் இவரும் மாறி இருக்கலாமன்றோ!

இவர் ஹர்ஷசரித்திர மியற்றிய பாணர் வாழ்ந்த காலத்தில்-அதாவது கி.பி. 634ல் இருந்ததாக அண்மையில் கண்ட சில தகவல்கள் கூறுகின்றன. பாரவி போன்ற புகழ்மிக்க கவிஞராகவும் அவருக்குச் சம காலத்தவரென்றும், 7-ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் இருந்தவரென்றும் தெரியவருகிறது.

ரகுவம்ச காப்பியத்தையொட்டி அவர் கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் இருந்தாரெனக் கீழ்கண்ட சான்றுகளையொட்டி கூறலாகும். (1) ரகுவம்சத்தில் 4 மற்றும் 6-ம் சருக்கங்களில் கூறப்பட்ட அரசியல் நிலைமைகள் 6-ஆம் நூற்றாண்டில் இருந்த நிலைகளைக் குறிக்கின்றன. (2) மேகசந்தேச மென்னும் நூலில் 6-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திங்நாகர் என்னும் பௌத்த தார்க்கிகரைப்பற்றி கூறப்படுவதால் அந்த நூற்றாண்டில் வாழ்ந்தவராக அறியலாம், (3) 5-ஆம் நூற்றாண்டின் கடைசியில் வாழ்ந்து, வடமொழியில் கிரேக்கரின் வான சாத்திரத்தை எழுதிய ஆர்யபட்டரின் நூலிலிருந்து சிற்சில விஷயங்களை எடுத்துக் கூறுவதாலும் இவர் 6-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்றும் கூறுவர். ஆனால் எந்த கூற்றும் தகுந்த, ஆதாரங்களைக் கொண்டு நிச்சயமாக கூற முடிவதில்லை.

5 ஆம் நூற்றாண்டில் இருந்தவரென்பதற்குச்சிற்சில சான்றுகள், (1) இவர் தம் நூலில் குப்த மன்னர்கள் காலத்தில் செய்துவந்த காரியங்களையும், அக்காலத்தில் நாடு இருந்த மேன்மை நிலையைக் குறித்தும், இந்துமதத்தின் உச்ச நிலையையும் குறிம்பிடுவதாலும். (2) தமது மாளவிகாக்னி மித்ரமெனும் நூலில் அசுவமேத யாகத்தைப்பற்றியும், ரகுமன்னனால் திக்விஜயம் செய்ததைப்பற்றி ரகுவம்சத்தில் கூறுவதாலும், மற்றும் விக்ரமோர்வசீயத்தில் குப்த மன்னர் காலத்து சம்பவங்களைப் போன்றவற்றைக் குறிப்பிட்டிருப்பதாலும், (3) வத்சபட்டி என்பவரின் கி.பி. 74 கல்வெட்டுகளில் சிலவரிகள் காளிதாசரின் கவிதைகளைப் போல் உள்ளதாலும் 5-ம் நூற்றாண்டில் இருந்துவந்திருக்கலாமென கூறுவர். கீழ்த்திசைப் புலவர்கள் பெரும்பாலும் மேற்படி 3-ஆம் கூற்றே உண்மையானதென ஒப்புக்கொள்கின்றனர்.

இவர் அசுவ கோஷரை அனுசரித்து வந்தார் என்பதற்குத் தக்க சான்றுகள் உண்டு. அசுவகோஷர் தமக்கு முன்பு இருந்த சம்ஸ்கிருத கவிஞர்களை ஒட்டி புத்த சரிதத்தை சம்ஸ்கிருதத்தில் எழுதினார். காளிதாசர் இராமாயணத்தை எழுதியதில் பல விடங்களில் அசுவ கோஷரை தழுவியுள்ளார். அசுவகோஷர் கி.பி. 1-வது நூற்றாண்டில், விக்ரமசகம் ஆரம்பத்தில் இருந்தவரென்பார்கள். காளிதாசர் தமது மாளவிகாக்னிமித்திரத்தில் அக்கினி மித்திரனைப் பற்றிக் கூறியுள்ளதாலும். அக்கினிமித்திரர் கி பி. 2-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்ததாலும், இவர் 2-ம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தவராக கூறுவதற்கில்லை.

இவர் மாளவ மன்னனாகிய போஜனுடைய அவையில் இருந்து வந்ததாக நம்பவேண்டியுள்ளது. இவரைப் பற்றிய நாடகங்களும் "போஜ—காளிதாசன்" என்ற பெயரில் நடிப்பதைக் காண்கின்றோமே யன்றி, 'விக்ரமார்க்கன்-காளிதாசன்' என்ற பெயரில் நடிப்பதை நாம்காண்கிலம். ஆகையால, காளிதாசர் போஜராசனின் காலத்தவரே என்று துணிந்து கூறிவிடலாம்.

ஆந்திரப் பிரதேசத்தில் 'தெனாலி'யில் பிறந்து விகடகவியாக விளங்கியவரும் அந்திர போஜன் என்ற புகழ்ப் பெற்று, கவியும் மன்னவனுமாய் விளங்கிய விஜய நகரத்தரசன், கிருஷ்ணதேவ ராயரின் அவையில் கவிவாணராகத் திகழ்ந்து வந்த, தெனாலி ராமகிருஷ்ண கவிராயரைப் பற்றிய நகைச்சுவை யூட்டும் கதைகள் மக்களிடையே பரவி வந்திருப்பதுபோல், காளிதாசரைப் பற்றிய கதைகளும் பல உள்ளன. இதை விளக்கி, திரு. சிலகமர்த்தி. லக்ஷ்மீ நரசிம்மம் என்னும் புலவர் தெலுங்கில் ஓர் நூலை வெளியிட்டிருக்கிறார்.

இவர் அம்பாள் வரம்பெற்று, அவர்மீது சுலோகங்களும், தண்டகங்களும் பாடியுள்ள போதிலும், தாமியற்றிய நூல்களுக்காதியில் சிவனைப் பற்றிய துதிப்பாடல்களே உள்ளன,

'வாகர்த்தாவிவ—பார்வதீ பரமேஶ்வரௌ"—என்று சிவனைக் குறித்த துதிப்பாடல் ரகுவம்ச காப்பியத்தில் இயற்றினார். நாடகங்களுட் சிறந்ததும், பலரால் போற்றப்பட்டு நடித்துவருவதுமான 'அபிஜ்ஞான சாகுந்தலமென்னும் நாடகத்திலும், முதற் பாடலில், 'யாஸ்ரிஷ்டி—ரஷ்டாபி ரீஶ்வர:' என்று ஈசுவரனையே துதி செய்துள்ளார். 'விக்ர மோர்வசீய' மென்னும் நாடகத்தின் முதற் பாடலிலும் 'வேதாந்தேஷு—யஸ்மினீஸ்வர—யாஸ்துவ:' என்று

சிவத்துதியே செய்துள்ளார். மேலும், 'மாளவி காக்னிமித்ர' மெனும் நாடகத்தின் முதலிலும், 'ஏகைஶ்வர்யே—ஸ்தித்தி மீஶஃ' என்று சிவத்துதி செய்து நூல் துவங்கியுள்ளார்.

மேலும் இவர் சைவத்தைத் தழுவிய 'குமார சம்பவம்' என்னும் முருகக் கடவுளின் பிறப்புப் பற்றிய நூல் ஒன்றையும் இயற்றியுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது. இதில் அம்மையப்பன், அம்மையார் கட்கு முருகன் பிறத்தல், அவனால் செய்யப்பட்ட சூரசங்காரம் ஆகிய வனைத்தும் அடங்கியுள்ளன.

இப்படி அம்பாளிடம் வரம்பெற்று எல்லா நூல்களின் முதன் முத லில் சிவனைப் பற்றியே பாடியுள்ளமைக்கு, இவருடைய அபேத தரிசனம் (அதாவது சிவனுக்கும் சக்திக்கும் வேறுபாடின்மை) என்பது மிகவும் பொருந்தும். இதையே மறைநூல்களும் 'அபேத தர்சனம் ஜ்ஞானம்'' என்று ஞானத்தைப் பறைசாட்டிக் கூறுகின் றன போலும்! ஆதலால், இவர் பற்பல விஷய சுகங்களில் ஈடுபட்டி ருந்த போதிலும் ஒரு ஞானியாகவே திகழ்ந்து வந்தார் என்பதில் யாதொரு ஐயப்பாடும் தேவையில்லை.

இவர் காப்பியமியற்றுவதில் சமத்காரம் :=

இவர் தம் மனைவியுடன் படுக்கையறையிலிருந்தபோது அவள் கேட்ட 'அஸ்தி கஶ்சித் வாக்விசேஷஃ' (அதாவது 'தங்கள் வாக்கு விசேடம் ஏதேனும் உண்டா?') என்று கேட்ட கேள்விக்கு இவ ருடைய கல்லாமையால், அப்போது, பதில் கூறமுடியாமல் திகைத்தாராம். பிறகு அவளை விட்டுச் சென்று, அம்பிகை வரம் பெற்று, மறுபடியும் திரும்பிவந்தயிவர், மேற்கூறிய கேள்விகட்குப் பதிலாக—'அஸ்தி, கஶ்சித், வாக், விசேஷஃ' என்ற நான்கு சொற் களில் ஒவ்வொன்றை, ஒவ்வோர்காப்பியத்தின் முதலில் பயன்படுத்தி அக்காப்பியங்களை இயற்றினாரென்று அறிஞர்கள் கூறுகின்றனர், 'அஸ்தி' என்ற சொல்லை குமாரசம்பவத்திலும், 'கஶ்சித்' என்ற சொல்லை மேகஸந்தேஶத்திலும், 'வாக்' என்பதை ரகுவம்சத்தி லும் பயன்படுத்தி, சிவத்துதி பாடியுள்ளார். 'விஶேஷஃ' என்னும் சொல்லை எக்காப்பித்தில் பயன்படுத்தினாரென்பது தெரிய தெரியவில்லை.

காளிதாசரின் பிற நூல்கள் :—

இதுவரை கூறிவந்த மூன்று காவியங்கள், மூன்று நாடகங்கள் அன்றி, இவர் 'ருதுசம்ஹாரம்' என்னும் காவியத்தையும் இயற்றி யுள்ளார். ஒருவருடத்தில் நிகழும் ஆறு ருதுக்க (காலங்க)ளைப்

பற்றி இதில் நன்கு வர்ணித்திருக்கிறார். அவருடைய கற்பனைகள் பூராவும் இதில் கண்டு மகிழலாம். இதுவுமன்றி 'ரோலம்ப ராஜீயம்' என்னும் மருத்துவ நூலையும், 'சந்த்ராலோக'மெனும் இலக்கண நூலையும், 'தாராவளி', 'காலாம்ரிதம்' என்னும் இரண்டு சோதிட நூல்களையும், 'பிரபாகர'மெனும் இலக்கண நூற்பகுதியையும் தன் பெயரால் இயற்றியுள்ளார் என்பது தெரியவருகிறது ருதுஸம்ஹாரத்தை இவர் இயற்றியதே என்று அறிஞர்கள் ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் 'ரோலம்ப ராஜீயம்' போன்ற பிறநூல்களை இத்த காளிதாசர் இயற்றியவன்று, அவற்றை மற்றொரு காளிதாசர் இயற்றியிருக்க வேண்டுமென்று சில ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். 'நலோதய'மென்னும் நூலும் இக்காளிதாசருடையதே என்று கூறுவாருமுளர். ஆனால், அதில் தோன்றும் சமத்காரங்களின் போக்கால் இதனை இவர் இயற்றியது அன்று என மற்றும் சிலர் கூறுவர்.

மேற்படி நூல்களில் எது முன், எது பின் பியற்றியவை என்று வரிசைப்படுத்திக் கூறுவதற்குச் சாத்தியமாயில்லை. ஆனால் கவிதைகளுக்கு முன்பே நாடகங்கள் இயற்றப்பட்டனவெனலாம். அவற்றில் ருது சம்ஹாரம் முதலில் இயற்றப்பட்டதாயிருக்கவேண்டும். நாடகங்களில் மாளவி காக்னிமித்ர மென்பது முதலில் இயற்றப்பட்டதென்று துணிந்து கூறிவிடலாம்- அபிஜ்ஞான சாகுந்தல மென்பது கடைசியாக இயற்றிய நாடகமாகவே இருக்கவேண்டும். கவிதைகளில் மேக சந்தேசம் முதலில் இயற்றப்பட்டதாகவும், குமார சம்பவம் கடைசியில் இயற்றியதாகவும் இருக்கின்றன.

ரகு வம்சத்தைப்பற்றி :

அவருடைய கவிதைகள் நயமிக்கவை, எளிமையும், திராட்சைப் பாகு போன்று இருக்கும். இவர் கவிதைகளில் யமகம் சிலேடை முதலியன இல்லை என்று சிலர் இவரைக் கேலி செய்தனர். அதனால், இவர் அப்படிப்பட்ட இலக்கியங்களடங்கிய சித்திரக் கவிதை யடங்கிய சிலேடை நூலை இயற்றும் சாமர்த்தியம் தனக்குள்ளதென்று எடுத்துக் காட்டுவதற்கு முன்பே, ஒரு வேசியின் சூழ்ச்சியில் சிக்கி துர்மரணமடைந்தார்.

ரகுவம்சமென்பது 19 சருக்கங்களடங்கிய ஒரு இதிகாசகாப்பியம் இதில் ரகு என்பவரைத் தொடர்ந்து சூரிய வம்சத்து அரசர்களின் சரிதத்தைக் குறிக்கும் காப்பியமாகும். ஒரு மகா காப்பியம் என்பது பண்டைய இதிகாசம் அல்லது புராணங்களை ஆதாரமாகக்

கொண்டதாக இருத்தல் வேண்டும். இது சில அதிகாரங்களாகவோ பகுதிகளாகவோ பிரிக்கப்பட்டிருக்க வேண்டும். இதில் அரசரை அல்லது வீரரைப்பற்றிய பிறப்பு, வீரம், உன்னத குணங்கள் முதலியன அடங்கி இருத்தல் அவசியம். கூடுமானவரை கீழ்க்கண்ட குறிப்புகள் அடங்கியும் இருக்க வேண்டும்; அதாவது:—(1) ஒரு பட்டணம் அல்லது நகரத்தைப் பற்றிய விளக்கம் (சருக்கம் 16) கடலைப்பற்றி (சருக்கம் 13) மலை, காலங்கள் பற்றி (சருக்கம் 4 மற்றும் 16) தோட்டம் அல்லது நீரில் விளையாடல் (சருக்கம் 8 மற்றும் 16), பானமருந்தல், காதல், விழாக்கள்; பிரிதல், இணைதல் காதலர் திருமணம் (சருக்கம் 8, 12 மற்றும் 7) மகவு பிறத்தல் (சருக்கம் 3) அவை விளக்கம்: சருக்கம் 8 மற்றும் 15) தூது (சருக்கம் 5) அரசன் (சருக்கம் 16, 12 மற்றும் 4) மேலும் போர்ச் செயலும் வெற்றியும் (சருக்கம் 2, 7 மற்றும் 12) குறிக்கப்பட்டிருக்க வேண்டும்.

ரகுவம்ச காப்பியத்தில் புராணங்களிலிருந்து சூரிய மற்றும் சந்திர வம்சத்து அரசர்களைப் பற்றிய கதைகள் எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளன. ஆனால் இராம சரிதம் 10 முதல் 15 சருக்கங்களில் உள்ளவை ராமாயணத்தை ஆதாரமாகக் கொண்டவை.

காளிதாசர் இயற்றிய இந்த ரகுவம்சம் 19 சருக்கங்களோடு நிறுத்தப்பட்டதா அல்லது மேலும் தொடர்ந்து இயற்றப்பட்டதா? என்பது சந்தேகத்திற்கு இடமளிப்பதாகவே உள்ளது. ரகுவுடன் துவங்கி 28 வீரர்களை மட்டும் குறிப்பதாக இருக்கிறது. இதில் சிங்காரம், வீரம், கருணை முதலிய குணங்களைத் தகுந்த இடங்களில் உள்ளடக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் சுருக்கம் கீழ்க்கண்டவாறு :—

1ம் சருக்கம்: திலீபமன்னன் வசிட்டரிடம் சென்று தனக்கு மகவில்லாமைக்கு காரணம் அறிதல்.

2ம் சருக்கம்: திலீபமன்னன் நந்தினீ என்னும் பசுவுக்குக் கோசேவை செய்து மகவு உண்டாக வரம் பெறுதல்.

3ம் சருக்கம்: ரகுவின் பிறப்பும் அவர்தம் குழந்தைப்பருவமும் வாலைப் பருவமும்.

4ம் சருக்கம்; ரகுவின் பட்டாபிஷேகம், மற்றும் திக்விஜயம்.

5ம் சருக்கம்: ரகுவின் மகன் அஜனின் பிறப்பு, விதர்ப்பநாட்டு இளவரசி இந்துமதி சுயம்வரத்திற்கு போதல்

6ம் சருக்கம்: இளவரசி இந்துமதி அஜனை மணத்தல்.

7ம் சருக்கம்; அஜனுடைய திருமணம்; அவனை எதிர்த்த அரசர்களைக் வெல்லுதல்.

8ம் சருக்கம்: தசரதன் பிறப்பு, மற்றும் இந்துமதி மரணம்.

9ம் சருக்கம்: தசரதர் வேட்டைக்குப் போய் ரிஷிசாபம் பெறுதல்.

10ம் சருக்கம்: மஹாவிஷ்ணு தசரதருக்கு மகன்களாய் பிறத்தல்.

11ம் சருக்கம்: இராமர் சிவன்வில்லை ஒடித்து சீதையை மணத்தல், மற்றும் பரசுராமனை கருவபங்கம் செய்தல்.

12ம் சருக்கம்: இராமரின் வனவாசம், சீதையை இராவணன் எடுத்துப் போதல், இராவண வதம்.

13ம் சருக்கம்: இராமர் புஷ்பக விமானத்தில் இலங்கையை விட்டு அயோத்தி அடைதல்.

14ம் சருக்கம் சீதையை காட்டில் விட்டுவிடுகிறான் இலக்குவன். வான்மீகி முனிவர் ஆச்சிரமத்தில் சீதை அடைக்கலம்.

15ம் சருக்கம்: குசலவர்களின் பிறப்பு அவர்கள் இராமருடன் கலத்தல், சீதை பூமியில் மறைதல்.

16ம் சருக்கம்: குசன் அயோத்தி அடைதல். அவன் குமுத்வதியை மணத்தல்.

17ம் சருக்கம்: குசனின் மகன் அதிதிக்குப் பட்டமளித்தல், அதிதி அயோத்தியை ஆளுதல்.

18ம் சருக்கம்: அதிதியின் மகன் நிஷதன் முதலாக இருபத்தோரு அரசர்களைப் பற்றி சுருக்கமான விளக்கம்,

19ம் சருக்கம் : அக்னி வர்ணனுடைய சிற்றின்ப வாழ்க்கை விளக்கம். அக்னிவர்ணன் நோய்வாய்ப்படுதல், அவனுடைய ராணி அரசை ஏற்றல்.

இந்த நூலில் பல பொருள்கள் (Subject matters) காணலாகும் எடுத்துக்காட்டாக அரசாட்சி, துறவு; அரசன், துறவு மகுடாபிஷேகம், தவம்; படையெடுப்பு, நாடு கடத்தல்; வேட்டையும் விளையாட்டும்; திருமணமும், அந்தி சடங்கு; தீரம், சிற்றின்பம், இயற்கையானதும் அதீதமானதுமான செய்கைகள்; மற்றும் அவரது கூறிய வருணனைகள் அதாவது அரண்மனைக்கோ அல்லது காட்டிற்கோ சம்மந்தமானவை; நல்லார் அல்லது தீயார் நட்பு பற்றியோ; சண்டை அல்லது சமாதானம் ஆகிய அனைத்தைப் பற்றியும் இதில் காணாதது ஒன்றுமிராது. இவற்றையெல்லாம் கவனிக்கும்போது அவருடைய சீரிய அறிவுத் திறனும் பறந்த மனப்பான்மையையும் நமக்குத் தெளிவாகாமல் போகாது. இவையாவும் அவரை சிறந்த வராக உயர்த்தி விட்டது என்பதில் ஐயமில்லை.

அவருடைய நீண்ட வருணனைகள் மற்றும் சுருங்கக் கூறுதல்; (உதாரணமாக சருக்கம் 12-இல் இராமாயணத்தின் 5 காண்டங்களை சுருக்கமாகக் கூறியது) போன்றவற்றைக் கவனிக்கும்போது இவருடைய மேதை எவ்வளவு பெரியதென்பது தெள்ளத் தெளிவு.

காளிதாஸர் உவமைகளை அளிப்பதில் வல்லவர், ஒவ்வொரு சுலோகமும் உவமையுடன் உள்ளதென்பதை நாம் காணலாம், ஒவ்வொரு உவமையும் சுயமானவை. அவருக்கு முன்பு வாழ்ந்தவர் எவராலும் கூறப்படாதவைகளே ஆகும்.

(குமார சம்பவத்தில் ஒரு வீரனைமட்டும் கூறினார். ஆனால் ரகுவம்சத்தில் சூரியகுல வீர மறபையே கூறினார். சிலவிடங்களில் நீண்ட வருணனைகளை செய்து இராமர் கதைக்கு வந்தபோது எவ்வளவு குறுகக் கூறலாமோ அவ்வளவும் குறுக்கினார். இவ்வாறு செய்ததில் ரகுவம்சத்தார் அனைவர்களைப்பற்றியும் கூறி முடித்தல் வேண்டுமென்ற அவா கொண்டு அவ்வாறு செய்து முடித்ததாகவும் கருதலாம். இவர் வான்மீகியைப் போல் விரிவாகக் கூற விரும்பவில்லையெனினும் அவர் பயன்படுத்திய சொற்கள் பலவிடங்களில் பயன்படுத்தியதும் காணலாகும்.

இப்படிப்பட்ட மாபெரும் காப்பியமானது தேவ நாகரிலிபியில் உள்ளதால் தமிழ் அன்பர்கள் வாசிக்க முடியாமலும், மொழியினை சுவைக்க உதவாமலும் இருப்பதை ஊகித்த நான் இதனை, தமிழ்

எழுத்துக்களையே சில மாற்றம் செய்வித்து ஸம்ஸ்கிருதத்தை வாசிக்க இயலும் அளவுக்கு transliteration செய்ய முயன்றேன்; முடிக்கவும் செய்தேன்.

என் முயற்சிக்கு ஊன்று கோலாக அச்சு வேலையை ஏற்று தம்மிடமில்லாத டைப்புகளைப் புதுசாய் வார்படம் செய்வித்து, கால தாமதத்தையும் பொருட்படுத்தாது சிரமத்தைப் பொருமையுடன் ஏற்று இந்நூலை சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த ஸ்ரீகிருஷ்ண சித்ரா பிரிண்டர்ஸ் அவர்களுக்கும், உற்சாகத்துடன் இவ்வேலையை முடிக்க துரிதமாக பாடுபட்ட அச்சகத்து பணியாளர்களுக்கும் நான் மிகவும் நன்றி செலுத்தக் கடமைபட்டுள்ளேன். முகப்பு படம் போட்டு தந்த ஓவியருக்கும் எனது மனமார்ந்த நன்றி.

## வாசகர்கள் கவனத்திற்கு ஒரு குறிப்பு

நண்பர்கள் இம்மகா காப்பியத்தில் உள்ள வடமொழி சுலோகங்களை உள்ளவை உள்ளபடியே உச்சரிப்பில் பிழையின்றி எளிதில் வாசிக்க உதவக் கூடிய சிலகுறிப்புகள் இங்கு வழங்கப்பட்டுள்ளன. கிரந்த எழுத்துக்கள், தேவநாகரி எழுத்துக்கள் எதுவும் கற்காமலேயே, தமிழ் எழுத்துக்களைக் கொண்டே உச்சாரணையில் பிழையின்றி இந்நூலை வாசிக்கும் எளிய முறை ஒன்று transliteration கையாண்டு இந்நூலை அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது. இதிலுள்ள குறிப்புகளை நன்கு மனதில் பதிய வைத்துக்கொண்டு வாசித்தால், நன்றாய் பொருள் விளக்கும்,

தமிழில் அழுத்தி ஒலிக்கும் எழுத்துக்கள் இல்லை. இடத்தைப் பொருத்து 'க'வை 'க' Ka வாகவும், Ga வாகவும் உச்சரிக்க வேண்டும். ஆனால் 'க' என்னும் தமிழ் எழுத்துக்கு மேல் ஒரு '1' நெடுங் கோடு (stoke) பயன்படுத்தி 'க' Kha ஆக இந்நூலில் எழுதப்பட்டுள்ளது. ஆகையால் 'க'வுக்கும் 'க$^{1}$'வுக்கும் உள்ள வித்தியாசம் இதனால் விளங்கும். இதுபோல் Ga என்னும்போது 'க'வுக்குமேல் ஒரு '$^{2}$' இரண்டுபோல் குறியிட்டு 'Ga' வாகவும், '$^{3}$' என்ற குறியிட்டு Ghah வாகவும் உச்சரிக்க வழி செய்யப்பட்டுள்ளது. இதனால் க, க$^{1}$, க$^{2}$, க$^{3}$ (Ka Kha Ga Ghah) என்ற நான்கு எழுத்துக்களின் வித்தியாசம் நன்கு அறிவிக்கப்பட்டது. இதுபோன்று ச, ச$^{1}$வும் (Cha Chcha) அறியப்பட வேண்டும். ஏற்கனவே, தமிழில் கிரந்த எழுத்து ஆகிய 'ஜ' வுள்ளதால் 'ஜ' வை அவ்வாறே உச்சரித்து இதில் அழுத்தி உச்சரிக்கும் Jhah வை மட்டும் 'ஜ'$^{1}$ என்று 'ஜ'வுக்கு

மேல் ஒரு சிறு கோடு (stroke) இட்டு, 'ஜ'$^{1}$ (Jhah) வாக்கப்பட்டுள்ளதை அறியவேண்டும். ஆகையால், 'ச ச$^{1}$' ஜ, ஜ$^{1}$ (Cha, ChCha, Ja JhJha) என்ற ஒலிகள் உண்டாக்கப்பட்டுள்ளன. தமிழில் உள்ள 'ட'கரத்துக்கு முன் 'ட'கரமெய்வரும்போது 'ட்ட' (tta) என்று ஒலிக்கிறோம். எடுத்துக்காட்டாக, பட்டம், மட்டம் முதலியன. இதில் அவ்வாறின்றி 'ட$^{1}$' (ttah) என்றும் குறிக்கப்பட்டுள்ளது. da என்பதற்கு 'ட$^{2}$' என்று குறியிட்டும், இதை அழுத்தி ஒலிக்கும் போது அதாவது ddah 'ட$^{3}$' என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆக இவற்றுள் (ட, ட$^{1}$, ட$^{2}$, ட$^{3}$ ta, ttah, da, dhah) என நான்குவகை ஒலிகளும் விளங்கும். இதுபோன்று த, த$^{1}$, த$^{2}$, த$^{3}$ tha, ttha, dha, dhdhah) என்னும் நான்கு ஒலிகளின் வித்தியாசங்கள் தரப்பட்டுள்ளன. இதுபோலவே ப, ப$^{1}$, ப$^{2}$, ப$^{3}$, (pa, ppah, ba, bbah), என்னும் ஒலிகளின் வித்தியாசங்களும் வழங்கப்பட்டுள்ளன. தமிழில் உள்ள'டண்ணகரம்' அவ்வாறே ஒலிக்கும். வடமொழியில் தந்நகரம், றன்னகரம் வெவ்வேறாக கிடையாது. ஆகையால், ஒரு தந்நகரமே எல்லாவிடத்திலும் பயன்படுத்தப்பட்டது. மற்ற எழுத்துக்களெல்லாம் தமிழ் எழுத்துக்களாகவே உள்ளவை உள்ளபடியே பயன்படுத்தப் பட்டுள்ளன. வடமொழியில் 'ழ' வும் 'ற' வும் இல்லை. 'ஸ, ஷ, ஹ, க்ஷ' க்கள் ஏற்கனவே உண்டு இவையாவும் சேர்ந்து அதாவது-உயிரெழுத்துக்கள், உயிர் மெய் யெழுத்துக்கள் யாவும் சேர்ந்து வடமொழியில் 51, எழுத்துக்கள் உள. வடமொழியில் எ, ஒ' என்னும் குறில்கள் இல்லை. 'ஏ, ஓ' என்னும் நெடில்கள் மட்டும் உண்டு. அவையாவும் கீழ்க்கண்டவாறு;-''அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ரி, ரீ, லு, லூ, ஏ, ஐ, ஓ, ஔ, அம், அঃ- என்பன உயிரெழுத்துக்கள். 'அঃ' என்பதை 'அஹ' என்று உச்சரிக்க வேண்டும்.

உயிர் மெய்யெழுத்துக்கள்:- க, க$^{1}$, க$^{2}$, க$^{3}$, ங, ச, ச$^{1}$, ஜ, ஜ$^{1}$, ஞ, ட, ட$^{1}$, ட$^{2}$, ட$^{3}$, ண, த, த$^{1}$, த$^{2}$, த$^{3}$, ந, ப, ப$^{1}$, ப$^{2}$, ப$^{3}$, ம, ய, ர, ல, வ, ஶ, ஷ, ஸ, ஹ, ள, க்ஷ - என்பன. சில சமயங்களில் ல' வுக்குப் பதில் 'ள' வும் வரலாம்; தவறில்லை. இவற்றுள் 'ஶ' என்பதே புதிதாகத் தோன்றும். ஆனால், இதுவும் புதிதன்று. கிரந்த எழுத்தே ஆகும். இது 'ஸ' வுக்கும் 'ஷ' வுக்கும் இடைப்பட்ட ஒலியைக் குறிக்கும். உதாரணம் 'ஶாந்தி' முதலியன.

'ঃ' இந்த இரு சுழிகட்கு 'விஸர்க$^{2}$ம்' என்று பெயர். இது பொதுவாக, ஒரு சொல்லின் கடைசியிலேயே வரும். சிற்சில சொற்களுக்கு இடையிலும் வருவதுண்டு. எடுத்துக்காட்டாக-'துঃக$^{1}$ம்'- இதை துக்கம் என்றுரைக்காமல் 'துஹ்க'ம்' என்று ஒலிக்க வேண்டும்

இது (':') எந்த உயிர்மெய் யெழுத்தைத் தொடர்ந்து வருமோ அவ்வுயிர் மெய்யெழுத்தில் கலந்துள்ள உயிரெழுத்துடன் சேர்த்து 'ஹ'கரமாக உச்சரிக்க வேண்டும். அதாவது 'க:' என்பதனை 'கஹ' என்னும், 'பூ$^{3}$:' என்பதை 'பூ$^{3}$ஹு' என்றும், 'தை:' என்பதை 'தைஹி' என்றும் - ஹ, ஹி, ஹு, ஹெ, ஹ், என்றும் அந்தந்த எழுத்துக்களில் உள்ள உயிரெழுத்தைப் பொருத்து உச்சரித்துக் கொள்ளல் வேண்டும். ஒலிகளைப் பற்றிய ஐயம் இனி இராதென்றே நினைக்கிறேன்.

இதற்காக கிரந்த எழுத்துக்களையோ, அல்லது தேவநாகரி எழுத்துக்களையோ நண்பர்கள் கற்கவேண்டிய அவசியமில்லை. இனி ஸம்ஸ்கிருதம் நன்கு வாசிக்கலாம்.

THIS BOOK IS PUBLISHED UNDER THE KIND FINANCIAL AID OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS OF TIRUPATI, UNDER THEIR SCHEME OF 'FINANCIAL AID TO AUTHORS' AS PER THE R. O. C. NO EDIT. S.I/58/89 DATED 14-11-90 AND I AM THANKFUL TO THEM FOR HAVING SANCTIONED THE SAME.

AUTHOR

ஓம் ஐம் நம:

# ரகுவம்ச மகா காவியம்

## முதலாம் சுருக்கம்

சுலோகம் : வாக$^2$ர்த$^1$ாவிவ ஸம்ப்ரிக்தௌ வாக$^2$ர்த$^1$ப்ரதி பத்தயே ।
ஜக$^2$த : பிதரௌவந்தே$^2$ பார்வதீ பரமேஶ்வரௌ ॥ 1

பதவுரை : வாக் அர்தா$^1$விவ = சொல்லின் பொருளைப் போல்; ஸ்ம்ப்ரிக்தௌ = ஒன்றோடொன்று இழைந்திருப்பது போன்று; (அதாவது வீழ்ச்சியிலாத் தொடர்புள்ள), ஜக$^2$த : = உலகிற்கு; பிதரௌ = தாயுந் தந்தையுமாகிய; பார்வதீ பரமேஶ்வரௌ = பார்வதி அம்மையையும், பரமசிவனாரையும்; வாக$^2$ர்த$^1$ ப்ரதிபத்தயே = வாக்கில் வெளிப்படும் பொருள்களின் அறிவுக்காக; வந்தே$^2$ = தொழுகிறேன்.

(கருத்துரை) : உலகத்திற்குத் தாய்த் தந்தையர்களாய், எழுத்துக்களடங்கிய சொற்களும், அவற்றின் பொருளும் எவ்வாறு ஒன்றுடன் மற்றொன்று வேறுபடாமல் உள்ளனவோ அதுபோன்று பாதிமடவரல் உருகொண்டு, ஒருவரையொருவர் பிரியாதிருக்கும், பார்வதி பரமசிவனார்களை, சொல், சொல்லின் பொருள்களின் ஞானம் பெறும் பொருட்டு வணங்குகிறேன். (ஒன்றற்கொன்று தவியணி)

சு॥ க்வ ஸூர்ய ப்ரப$^3$வோ வம்ஶ: க்வசால்ப விஷயாமதி: ।
திதீர்ஷுர் து$^2$ஸ்தரம்மோஹா து$^2$டு$^2$பே நாஸ்மி ஸாக$^2$ரம் 2

(ப-ரை) : ஸூர்யப்ரப$^3$வ : = சூரியனைக் காரணமாகக் கொண்ட; வம்ஶ: = குலம் (மறபு); க்வ = எங்கே; அல்பவிஷயா = சொற்பமாயறியத்தக்க பொருளையுடைய; மதிஶ்ச = அறிவு; க்வ = எங்கே; (தத$^1$ாபி = ஆயினும்); து$^2$ஸ்தரம் = கடக்க முடியாத; ஶாக$^2$ரம் = கடலை; மோஹாத் = அஞ்ஞானத்தால்; உடு$^2$பேந = தெப்பத்தால்; திதீர்ஷு = தாண்ட எண்ணியவன்; அஸ்மி = ஆகின்றேன்,

(க-ரை) உலகத்தைக் காக்கும் பரிதியே கூடஸ்தனாகக் கொண்ட இந்த ரகுவம்சம் எங்கே ? பொருளறியா என் புத்தி எங்கே? அற்பபுத்தியுடைய நான் ரகுவம்சத்தைப் பற்றி விளக்கு வதற்கு முயலுதல் என்பது: மடமையால், தாண்ட முடியாத மாக் கடலை தெப்பத்தின் வாயிலாக கடக்க முயற்சித்தல் போன்று உளது. அஃதெவ்வாறு முடியாதோ அவ்வாறே இதுவும் முடியாதா தாகும். (உவமை மற்றும் காரண வணி)

சு:॥ மந்த³: கவியஶ: ப்ரார்தீ¹ க³மிஷ்யாம் யபஹாஸ்யதாம் ।
ப்ராம்ஶுலப்⁴யே ப¹லேலோப³ா து³த³பாஹுரிவ வாமந: ॥ 3 ॥

(ப-ரை) மந்த³: = மூடனே ஆயினும்; கவியஶ: ப்ரார்தீ¹ = கவிஞர்களின்; காப்பியம் பாடுதலால் உண்டாகும் புகழை அடை யத்தக்க; ப்¹லே = பலனைக் கருதி; லோப³ாத் = வெஃகுதலால்; உத³ப³ாஹு: = மேலே தூக்கிய கைகளுடைய; வாமாத்இவ = குள்ளனைப்போல்; அபஹாஸ்யதாம் = ஏளனத்துச்கு ஆளாவதை; க³மிஷ்யாமி = அடைவேன்.

(க-ரை) உயரமானவர்களால் அடையத்தக்க ஒரு மரத்தி லிருக்கும் பழங்களை எட்டிப் பிடிக்கத்தன் கைகளை உயர்த்தி யுள்ள குள்ளனைக் கண்டு எவ்வாறு மக்கள் கேலியாக சிரிப்பார் -களோ, அவ்வாறு மூடனாகிய நான் மகாகவிகள் காப்பியங்களை இயற்றுவதால் அடையும் புகழைப் பெற விழையும் என்னைக் கண்டு ''இம்மூடனாவது இக்காப்பியத்தை இயற்றுவதாவது விந்தையாக இருக்கிறதே'' என என்னைக் கண்டு ஏளனஞ் செய் வார்கள். (முழுதுவமையணி)

சு॥ அத்¹வா க்ரிதவாக்³த்³வாரே வம்ஶேஸ்மிந் பூர்வஸூரிபி³: ।
மணௌ வஜ்ர ஸமுத்கீர்ணே ஸூத்ரஸ்யே வாஸ்திமே க³தி:॥ 4

(ப-ரை) அத்¹வா = அவ்வாறாயினும்; பூர்வஸூரிபி³: = முன்பு இருந்த வான்மீகி முதலிய வித்வான்களால்; க்ரித = செய்யப்பட்ட; வாக் = ராமாயணாதி பிரபந்த உருவில் உள்ள இலக்கியமே; ³த்வாரே = அறிமுகத்துக்கு, உபாயமாக உள்ள; அஸ்மிந் = இந்த; வம்ஶே = பரிதியின் மறபில்; வஜ்ரஸமுத்கீர்ணே = வஜ்ஜிரமென்னும் மணிக்குத் துளைப்போடும் ஒருவித ஊசியால் குத்தப்பட்ட; மணௌ = ரத்தினத்தில்; ஸூத்ரஸ்யேவ = நூலைப்போன்று; மே = எனக்கு; க³தி: = வழி; அஸ்தி = ஆகின் (இருக்கின்)றது.

(க-ரை) நான் ஏளனத்துக்குரியவனாகயிருக்கலாம். எவ்வா றெனில் வஜ்ஜிரத்தால் துளை செய்யப்பட்ட ரத்தினங்களில் நூல் அல்லது மெல்லிய கம்பி நுழைவதுபோல், வான்மீகி முதலிய மாபெருங் கவிஞர்களால் காட்டப்பட்ட வழியில் நான் செல்கின் றேன். அதாவது அவர்கள் சென்ற வழியையொட்டி நான் செல் கின்றேன் (விரியுவமையணி)

சு॥ ஸோஹமாஜந்ம ஶுத்3தா3நாம் அப1லோத2ய கர்மணாம் ।
ஆஸமுத்3ர க்ஷிதீஶாநாம் ஆநாக ரத1வர்த்மநாம் ॥ 5

(ப-ரை) ஸோஹம்=அப்படிப்பட்ட நான்; ஆஜந்மஶுத்3த3 நாம்=பிறந்தது முதல் தூய்மையானவர்களும்; அப1லோத2ய கர் மணாம்=பிரயோஜனம் உண்டாகும் வரையில் தொழில்களைக் கொண்டவர்களும்; ஆஸமுத்3ர க்ஷிதீஶாநாம்=கடல்கள்வரை பரவி யுள்ள நிலங்களுக்கு அரசர்களாயினாரும்; ஆநாக=புத்தேளுலகு வரை; ரத1வர்த்மநாம்=தேர் செல்லும் பாதை உடையவர்களும்; (ஆகிய) ரகூ3ணாம்=ரகுவம்சத்தில் பிறந்த அரசர்களின்; அந்வயம்=வமிசத்தைக் குறித்து; வக்ஷ்யே=சொல்லப்போகிறே னென்று (ஆறாம் சுலோகத்துடன் தொடரும்.)

(க-ரை) மேலே குறிப்பிட்டபடி உள்ளநான், பிறந்தது முதல் தூய்மையாய் உள்ளவர்களும், தொடுத்த தொழிலை கடைசி வரை செய்து முடிப்போரும் கடல் சூழ்ந்த நிலத்துக்கு அதிபர் களும் தேவலோகம் வரை தேர்மீது செல்லக் கூடியவர்களும்; (பலபடப்புனைவணி)

சு॥ யத1ாவிதி3 ஹுதா1க்3நீநாம் யத1ா காமார்சி தார்தி1 நாம்
யத1ாபராத3 த3ண்டா3நாம் யத1ா கால ப்ரபோ3தி3 நாம்॥ 6

(ப-ரை) யத1ாவிதி3=சாத்திரங்களின் கூற்றுகட்குட்பட்டு; ஹுத அ3கநீநாம்=வேட்கப்பட்ட க3ார்ஹபத்யம், ஆஹவநீயம், த3க்ஷிணம் என்னும் வன்னிகளை உடையவர்களும்; யத1ாகாம= விழைவை மிஞ்சாதபடி; அர்சித அர்தி1நாம்=தொழும்பிச்சைக் காரர்களை உடையவர்களும்; யத1ாபராத1 = தண்டனையைத் தாண்டாதபடி; த3ண்ட3நாம்=தண்டணையை உடையவர்களும்; யத3ாகால=நேரத்தைக் கடக்காமல்; ப்ரபோ3தி3நாம்=விழித்துக் கொள்பவர்களும்.

(க-ரை) மறைகளில் உள்ளபடி வேள்விகளைச் செய்வோரும்; அண்டினோர்கட்கு வேண்டிய மட்டும் உதவுவோரும், தப்புகளுக்குத் தக்கவாறு தண்டனை அளிப்போரும், குறித்தக் காலத்தில் குறிப்பிட்ட தொழில்களைச் செய்து முடிப்போரும், காலங்கடத்தாமல் விழித்தெழுவோர்களும்; (பலபடப்புனைவணி)

சு॥ த்யாக²ாய ஸம்ப்³ரி தார்த²ா நாம் ஸத்யாய மிதப³ாஷிணாம் ।
யஶஸே விஜிகீ²ஷீணாம் ப்ரஜாயை க்²ரிஹமேதி³ நாம்॥ 7

(ப-ரை) த்யாக²ாய = உரியவர்கட்குக் கொடுப்பதற்காக; ஸம்ப்³ரித அர்த²ாநாம் = தேடப்பட்ட பொருள் கொண்டுள்ளவர்களும்; ஸத்யாய = வாய்மைக்காக; மிதப³ாஷிணாம் = சொற்பமாய்ப் பேசும் சுபாவம் உள்ளவர்களும் யஶஸே = புகழ்ப்பெறற்கு; விஜிகீ²ஷிணாம் = பிறரை வெல்ல விழைவோரும் ப்ரஜாயை = மக்க (பிள்ளைக)ளைப் பெற க²ிஹமேதி³நாம் ; = இல்லறம் பூண்டவர்களும்,

(க-ரை) உரியவர்களுக்குக் கொடுக்க வேண்டி பொருள் சம்பாதிப்போரும்; அதிகம் பேசினால் என்ன கேடுவருமோவென அஞ்சிமிதமாய் பேசுவோரும்; புகழ்ப் பெறவேண்டி பிற மன்னர்களை வெல்ல நினைப்போரும்; தென்புலத்தாரின் விடுதலைக்காக மக்களைப் பெற திருமணஞ் செய்துக் கொள்வோரும்; (பலபடைப்புனைவணி)

சு॥ ஶைஶவே஽ப்³யஸ்த வித்²யாநாம் யௌவநே விஷயைஷிணாம் ।
வார்த⁴கே முநிவ்ரித்தீநாம் யோகே² நாந்தே தநுத்யஜாம் ॥ 8

(ப-ரை) ஶைஶவே = வாலைப் பருவத்தில்; அப்³யஸ்த வித்²யாநாம் = கற்கப்பட்ட கல்வி கேள்விகள் உடையவர்களும்; யௌவநே = இளமையில்; விஷய ஏஷிணாம் = புணர்ச்சியை விரும்புவோரும்; வார்த⁴கே = முதுமையில் முநிவ்ரித்தீநாம் = தவசித் தொழில் மேற்கொள்வோரும்; அந்தே = கடைசியில்; தநுத்யஜாம் = உடலை விடுவோரும்;

(க-ரை) வாலைப் பருவத்தில் கல்வி கேள்விகள் உடையவர்களும், இளமையில் இல்லறம் கொள்வோரும்; முதுமையில் வாநப்ரஸ்தம் என்னும் தவவேடம் ஏற்போரும் அந்திய காலத்தில் யோகத்தால் உயிர் விடுவோரும்; (பலபடைப்புனைவணி)

ஸு॥ ரகூ³ணா மந்வயம் வக்ஷ்யே தநுவாக்² விப³வோ²பி ஸந் ।

தத்³³குணை: கர்ணமாக³ த்ய சாபலாய ப்ரசோதி³தம் ॥ 9

(ப-ரை) ஸோஹம். அப்படிப்பட்ட நான்; தநு=சொற்பமாய்; வாக் = வார்த்தைகளின்; விப³வோ²பி = ஆக்க முடையவனாயினும்; தத்³கு³ணை: = அந்த ரகுவம்ஶத்தரசர்களின் பிறவி முதற் கொண்ட தூய குணங்களை; கர்ணம் = எனது செவிகள்; ஆக³த்ய=பெற்று; சாபலாய = சிந்தனையற்ற தொழில்களைச் செய்யும் சபலமான புத்தியால்; ப்ரசோதி³தஸ்ஸந்=தூண்டம் பட்டவனாய்; ரகூ³ணாம் = ரகுவம்சத் தரசர்களின்; அந்வயம்=மறபைச் சார்ந்த பிரபந்தத்தை; வக்ஷ்யே= மொழிகிறேன்.

(க-ரை) சொறறிறன் அதிகமில்லாதவனாயினும் அந்த ரகு வம்சத் தரசர்களின் குணம் போன்று, என்னை ஊக்குவிப்பதால், வாலை சபலத்தால் ரகுவம்சம் என்னும் இப்பெருங் காப்பியத்தை இயற்ற நான முயற்சித்தேன். (பிரிதாராய்ச்சியணி)

ஸு॥ தம் ஸந்த ஶ்ரோது மர்ஹந்தி ஸத³ஸத்³ வ்யக்தி ஹேதவ; ।

ஹேம்நஸ் ஸம்லக்ஷ்யதே ஹ்யக்³நௌ விஶுத்³தி³ ஶ்யாமி -

காபிவா॥ 10

(ப-ரை) தம்=அந்த ரகுவம்சம் என்னும் பிரபந்தத்தை; ஸத³ஸத் வயக்தி ஹேதவ:=குற்றங் குறைகள் ஆராய்வதில் தேர்ந்தவர்களாகிய; ஸந்த: = அறிஞர்கள்; ஶ்ரோதும் = கேட்பதற்கு; அர்ஹந்தி = தகுந்தவர்களாக உள்ளனர்; (தத³ாஹி = அது பொருந்தும்);ஹேம்ந: = பொன்னானது; விஶுத்³தி³: = குற்ற மற்றதாயினும்; ஶ்யாமிகாபிவா= பிற உலோகங்களின் கலப்பால் குற்றமுற்றிருப்பினும்; அக்³நௌ=வன்னியிடம்; ஸம்லக்ஷ்யதே = காணப்படுகிறது.

(க-ரை) தங்கத்தின் தூய்மையும், அத்துடன் பிற உலோகங் களின் கலப்பினால் உண்டாய குற்றங்களும் அக்கினியால் அறியப் படுவது போல், குற்றங்குறைகள் கண்டறியக் கூடிய அதிகார முடைய அறிஞர்கள் குற்றங்களை விமரிசனம் செய்து, இந்தப பிரபந்தத்திலுள்ள குற்றங்களைக் குறித்து மகிழ்வடையும்படி விழை கிறேன். (தொடர் முழுதுவமையணி)

அவதாரிகை: வம்சவிளக்கம் தொடங்குகிறது.

ஸூ॥ வைவஸ்வதோ மநுர்நாம மாநநீயோ மநீஷிணாம் ।
ஆஸீந் மஹீக்ஷிதா மாத்³ய: ப்ரணவ ஶ்ச²ந்த³ஸாமிவ ॥ 11

(ப.ரை) மநீஷிணாம் = அறிஞர்களுக்கு; மாநநீய: = தொழப்படுவோனும்; ச²ந்²தஸாம் = வேதங்களுக்கு; ப்ரணவ: இவ = ஓம் என்னும் எழுத்தைப் போன்று; மஹீக்ஷிதாம் = அரசர்களுக்கு; ஆத்³ய: = முதன்மையானவ னாகிய; வைவஸ்வதோ நாம = வைவஸ்வதன் என்னும் புகழ்வாய்ந்த; மநு: = மனுமகாராஜன்; ஆஸீத் = இருந்தான்.

(க-ரை) அறிஞர்களுள் மேன்மை பொருந்தியவனாய்; வேதங்களுக்கு ஓங்காரம் போன்று அரசர்களுக்கு முதன்மையானவனாய்; வைவஸ்வதன் என்னும் பேரரசன் இருந்தான், (உவமையணி) (விவஸ்வன் = சூரியன்; வைவஸ்வதந் = சூரியனின் மகன்)

ஸூ॥ தத³ந்வயே ஶுத்³தி⁴மதி ப்ரஸூதஶ் ஶுத்³தி⁴மத் தர: ।
தி³லீப இதி ராஜேந்³து ரிந்³து க்ஷீரநிதா⁴ விவ ॥ 12

(ப ரை) ஶுத்³தி⁴மதி: = குற்றமற்ற: தத் அந்வயே = அந்த மனுவென்னும் பேரரசனுடையமறபில்; ஶு²த்³திமத்தர³: = மிகுந்த தூய்மையானவனாகிய; ²திலீப இதி = திலீபன் என்னும் புகழ் வாய்ந்த; ராஜேந்²து: = அரசர்களுள் ஒளிமிக்கவன்; க்ஷீரநித⁴ா = பாற்கடலில்; இந்²து: இவ = சந்திரனைப் போன்று; ப்ரஸூத: = பிறந்தான்.

(க-ரை) பாற்கடலில் மதிஉதயம் போன்று அத்தூய மறபில் மிகுந்த பரிசுத்தனான திலீபன் என்னும் அரசரேறு பிறந்தான். (விரியுவமையணி)

கீழ்க் கண்ட மூன்று சுலோகங்களால் அவரைப் பற்றி விளக்கப்படுகின்றது.

ஸூ॥ வ்யூடோ⁴ர ஸ்கோ வ்ரிஷஸ்கந்த⁴: ஸாலப்ராம்ஶுர் மஹாபு⁴ஜ: । ஆத்மகர்ம க்ஷமம் தே²ஹம்க்ஷாத்ரோ ⁴தர்ம இவாஶ்ரித : ॥ 13

(ப-ரை) வ்யூட⁴உரஸ்க: = அகன்ற மார்புடையவன்; வ்ரிஷ = எருதின்; ஸ்கந்த⁴: = முதுகு போன்ற முதுகை உடையவன்;

ஸாலப்ராம்ஶு: = சாலம் (Sal tree) என்னும் மரம் போன்று உயரமானவனும்; மஹாபு³ஜ: = நீண்ட தோள்கள் உடையவனும்; ஆத்ம = தன்னுடைய; கர்ம = தொழிலுக்கு, க்ஷமம் = ஏற்ற; தே²ஹம் = உடலை; ஆஶ்ரித: — அடைந்த; க்ஷாத்ர: — க்ஷத்திரியர் (அரசர்) கட்குகந்த; த³ர்ம இவஸ்தி¹த: = வலிமை உடையவனாக தோன்றி;

(க-ரை) அகன்ற மார்பும் எருது போன்ற முதுகும் சால் மரம் போன்று உயரமும், முழங்கால்களைத் தொடும் நீண்ட புயங்கள் பெற்றவனாய், அரசர்களின் வீறே ஆண் மகனாய் பிறந்தானோவென பிரமை உண்டாக்கும் உடலுடையவனாக இருந்தான். (தொகையுவமையணி)

சு॥ ஸர்வாதிரிக்த ஸாரேண ஸர்வ தேஜோ பி³ ப³ாவிநா ।
ஸ்தி¹தஸ் ஸர்வோந்நதே நோர்வீம் க்ராந்த்வா
மேருரிவாத்மநா ॥ 14

(ப-ரை) ஸர்வ அதிரிக்த ஸாரேண = எல்லா பூதங்களை விட அதிக வலிவுடையதும்; ஸர்வதேஜ : = எல்லா ஒளிகளையும் அபி³ப³ாவிநா = இகழக் கூடியதும்; ஸர்வ உந்நதேந = எல்லாவற்றைவிட மேன்மையான; ஆத்மநா = உடலுடன்; மேரு: இவ = மேருவெனும் மலையைப்போல்; உர்வீம் = பூமியை; க்ராந்த்வா = வளைத்துக் கொண்டவனாய்; ஸ்தி¹த: = இருக்கின்றவனும்;

(க.ரை) எல்லாம் பூதங்களைவிட வலிவும் ஒளியும் பொருந்தியவனாய், மாந்தர் அனைவர்களைவிட உயரமான உருவாய், மேருபருவதம் பூமி அனைத்தையும் ஆக்கிரமித்து நிற்பது போன்றவனும் (தொடர் முழுதுவமையணி)

சு॥ ஆகார ஸத்²ரிஶப் ரஜ்ஞு: ப்ரஜ்ஞயா ஸத்²ரிஶாக³ம: ।
ஆக³மைஸ் ஸத்²ரிஶாரம்ப³: ப்ராரம்ப³ஸ் ஸத்²ரிஶோத³ய:॥ 15

(ப-ரை) ஆகார: = உடலுக்கு; ஸத்²ரிஶ: = சமமாய; ப்ரஜ்ஞ: = அறிவாற்றலுடையவனும்; ப்ரஜ்ஞயா = அறிவுக்கு; ஸத்ரி²ஶ ஆக³ம: = நிகரான நூலாராய்ச்சியுடையவனும்; ஆக³மை: = சாத்திரங்களோடு; ஸத்²ரிஶஆரம்ப³: = சமமாகவுள்ள தொழில்கள் உடையவனும்; ப்ராரம்³ப: = தொழில்களோடு; ஸ்த்²ரிஶ: உத³ய: = நிகராய பலனையும் அடைந்தவனாய்.

(க-ரை) உருவத்திற்குத் தகுந்த அறிவும், அறிவுக்கேற்ற நூலாராய்ச்சியும், நூலாராய்ச்சிக்கு நிகரான தொழில்களும், தொழில்களுக்குச் சமமான பலன்களுடையவனும் (அரதன மாலையணி)

சு॥ பீ[3]ம காந்தைர் ந்ரிபகு[2]ணைஸ் ஸப[2]பூ[3]வோப ஜீவி நாம் ।
அத்[3]ரிஷ்ய ச்சாபி[3]க[2]ம்யஸ்ச யாதோ ரத்நை ரிவார்ணவ: ॥ 16

(ப-ரை) ஸ: = மேலே கூறிய குணநலங்களை உடைய அந்த திலீப மகாராஜன்; [3]பீம காந்தை: = அச்சங் கொடுக்கக் கூடியதும், மனதுக்கு உகந்ததுமான; ந்ரிபகு[2]ணை: = அரசர்களின் ஒளி ஆற்றல் முதலியவற்றால்; (குடி, சீலம். கண்ணோட்டம் முதலியவற்றால்); உபஜீவ நாம் — அண்டி வருவோருக்கு; யாதோ[2] ரத்நை: = நீர்வாழ்ப் பிராணிகளாலும், மணிகளாலும்; அர்ணவ இவ = கடலோன் போன்று; அத்[2]ரிஷ்யஸ்ச = அலட்சியப்படுத்தப் படாதவனும்; அபி[3]க[2]ம்யஸ்ச = அண்டக் கூடியவனும்; ப[2]பூ[3]வ = ஆனான்)

(க-ரை) கடலோன் தன்னையண்டி வருவோருக்கு, திமிங்கலம் முதலிய கொடிய பிராணிகளால் அச்சமூட்டுபவனும், முத்து, பவழம் முதலியவற்றால் எவ்வாறு ஆசிரயிக்கக் கூடியவனாகி இருக்கின்றானோ, அது போல் திலீபமகாராசனும் தன்னை யண்டினோருக்கு ஒளி ஆற்றல் முதலியவற்றால் அச்சம் தரவல்லவனாகவும்; தயவு, கண்ணோட்டம் முதலியவற்றால் இன்றியமையாது அண்டக் கூடியவனாகவும் ஆனான் (முறையிற் படர்ச்சியணி)

சு॥ ரேக[1]ா மாத்ரமபி க்ஷுண்ணா த[2]ாமநோர் வர்த்மந:பரம் ।
ஸ வ்யதீயு: ப்ரஜாஸ் தஸ்ய நியந்துர் நேமிவ்ரித்தய: ॥ 17

(ப-ரை) நியந்து: = பயிற்சியாளனும். சாரதியுமாகிய; தஸ்ய = அந்த திலீப ராசனுடைய; நேமி = சக்கரங்களின் அச்சுகளைப் போன்று; வ்ரித்தய: தொழில்கள் உடையவனும்; ப்ரஜா: = குடிகள்; ஆமநோ: = மனுவரசனைத் தொடங்கி; க்ஷுண்ணாத் = கற்கப்பட்ட; வர்த்மந: = ஒழுக்கமுறையைவிட; பரம் = அதிகமாக; ரேக[1]ா மாத்ரமபி = ஒரு கோட்டளவு: நவ்யதீயு: = தாண்டினாரல்லர்.

(க-ரை) கைதேர்ந்த ஓட்டுநர், தேரின் சக்கரங்கள் நடந்து தேயந்த வழியினின்று சற்றேனும் விலகிப் போகாமல் எவ்வாறு தேரை நடத்திச் செல்வானோ, அவ்வாறே நன்கு பயின்ற திலீப மகாராசன் தன் குடிகளை மனுமுதற்கொண்டு ஏற்பட்ட ஒழுக்கங்களினின்று இம்மியளவும் வழுவாது காத்து வந்தான். (விரிபுவமையணி)

சு ॥ ப்ரஜா நாமேவ பூ³த்யர்த்¹ம் ஸ தாப்³யோ ப²லிமக்³ரஹீத் ।
ஸாஹஸ்ரகு³ண முத்ஸ்ரஷ்டு மாத³த்தேஹி ரஸம்ரவி: ॥ **18**

(ப-ரை) ஸ:= அந்த திலீப மகாராசன்; ப்ரஜாநாம் = குடிகளுடைய; பூ³த்யர்த¹மேவ = அபிவிருத்திக்கே; தாப்³ய:= அக்குடிகளால்; ப²லிம்=ஆறில் ஒரு பங்கான வரியை; ஆக்³ரஹீத்= பெற்று வந்தான் (ததாஹி = அதாவது) ரவி: = சூரியன்; ஸாஹஸ்ர கு³ணம் யத¹ா ததா¹ா= பற்பல குணங்கள் பெறுவது போன்று; உத்ஸ்ரஷ்டும் = விடுவிக்கும் பொருட்டு; ரஸம்= தண்ணீரை; ஆத³த்தே = பெற்றுக்கொள்கிறான்.

(க-ரை) அந்த திலீபவரசன் குடிகளிடமிருந்து ஆறில் ஒரு பங்கு வரியை (காணிக்கையை)ப் பெற்றுக் கொண்டு வந்தான். ஆதவன் ஆயிரம் மடங்குகள் விடுவதற்கன்றோ தண்ணீரைப் பெறுகிறான். (புகழ்பொருளுவமையணி)

அவ ॥ அவருடைய புத்திகூர்மை முதலியவை விளக்கப் படுகிறது.

சு॥ ஸேநா பரிச்ச¹த³ஸ் தஸ்ய ³த்வயமேவார்த¹ ஸாத³ நம் ।
ஶாஸ்த்ரே ஷ்வவ்யாஹதா பு³த்³தி³ர் மௌர்வீ த³நுஷிசாததா॥ **19**

(ப-ரை) தஸ்ய=அந்த திலீப மன்னனுக்கு; ஸேநா= படைகள் நான்கு பரிச்ச¹த³:= உபகரணங்கள்; பபூ³வ=ஆயின; அர்த¹ஸாத³நம்=பிரயோஜனத்தின் சாதனையோ; ஶாஸ்த்ரேஷு= நூல்களில்; அவ்யாஹதா=தடையற்ற; புத்³தி³:=புத்தியும், த³நுஷி=வில்லேந்துவதில்; ஆததா=தொடுக்கப்பட்ட; மௌர்வீ= நாணும்; த்³வயமேவ=இரண்டே.

(க-ரை) அந்த திலீப மன்னனுக்குப் படைகள் துணைப் பொருட்களாகத் திகழ்ந்தனவே யன்றி பிரயோசனங்களை நிறை

வேற்றிக் கொள்வதற் கன்று. அவ்வாறாயின் பிரயோசனங்களை எவ்வாறு சாதித்துக் கொண்டான் எனின், சாத்திரங்களில் நிக ரில்லா புத்திகூர்மையும் வில்லில் நாணேற்றுதல் என்னும் இவ் விரண்டு சாதனங்களால் (கருத்துடையடையணி)

அ ॥ ஆனால் எங்ஙனம் ஆண்டு வந்தான் என்பது கூறப் படுகிறது.

சு॥ தஸ்ய ஸம்வ்ரித மந்த்ரஸ்ய கூ²டா³காரேங்கி²தஸ்யச ।
ப¹லாநுமேயா : ப்ராரம்ப³ா: ஸம்ஸ்காரா: ப்ராக்தநா இவ ॥ 20

(ப-ரை) ஸ்ம்வரித = மறைக்கப்பட்ட; மந்த்ரஸ்ய = மந்திரங் களை உடையதும்; கூ²டா³கார = உள்ளடங்கிய; ஆகார = மகிழ்வு முதலியன அறிவிக்கும் கண்புருவம் முகபாவனை முதலியவைக் கொண்ட உருவமும்; இங்கி²தஸ்ய = மனத்துளடங்கிய; ப்ராரம்ப³ா = சாமம் முதலிய உபாயங்களை ஆளுதல்; ப்ராக்தநா: = முன் பிறவி யில் பிறந்த ஸம்ஸ்கார இவ = குணங்கள் போன்று ப¹லாஅநு மேய: = தொழில்கள் நடத்துவதில் பயன்படுத்தப்படக் கூடியவை களாய்; ஆஸந் = ஆயின.

(க-ரை) அத்திலீபவரசன் தான் செய்யுந் தொழில்களை மகிழ்வு முதலியவற்றை அறிவிக்கும் செய்கைகளால் பிறர் அறியா வண்ணம் செய்து வந்தான். பிறர் அறிந்துக் கொள்வது எங்ஙன மெனிலோ நிகழும் பிறப்பில் நுகர்ந்து வரும் நன்மை தீமைகள் பொறுந்த முற்பிறவியில் இவ்வாறு நடந்திருக்குமென ஊகித்து அறிவது போன்றே= ''இதற்கு இவ்வாறு செய்திருக்கலா'' மென்று ஊகித்துத் தெளிதல், வாயிலாகவே, என அறிய வேண்டிய தாயிற்று (சொற்பொருட் பின்வருவிளக்கணி)

அ ॥ அவனது குணங்கள் விளக்கப்படுகின்றன.

சு ॥ ஜுகோபாத்மாந மத்ரஸ்தோ பே³ஜேத³ர்ம மநாதுர: ।
அக²ரித்³நு ராத²தே² ஸோர்த்¹ மஸக்தஸ் ஸுக¹மந்வபூ³த் ॥ 21

(ப. ரை) ஸ:= அந்த திலீபமன்னன்; அத்ரஸ்தஸ்ஸந் = அச்சமில்லாதவனாகவே; ஆத்மாநம் = உடலை; ஜுகோ²ப = காத்து வந்தான்; அநாதுர: = நோய்வாய்ப்படாமலேயே; த³ர்மம் = புண்ணியத்தை; பே³ஜே = சம்பாதித்தான்; அக்³ரித்³நு =

விழைத இல்லாமலேயே; அர்த²ம் = பொருளை (பணம்); ஆத³தே³ = பெற்று வந்தான்; அஸக்த:= பற்றற்றவனாகவே; ஸுக²ம் = சுகங்களை; அந்வபூ⁴த் = அனுபவித்து வந்தான்.

(க-ரை) அந்த திலீபமன்னன் தன்னுடலைப் பேணிவந்தது அறம்பொருளின்பங்களை நிறைவேற்றவேயன்றி உடல் வீழுமென்றஞ்சியன்று; அவன் நோயற்றவனாக இருந்து புண்ணியம் செய்து வந்தான்; போர் முனையில் பொருள் சம்பாதித்தாலும் பொருளீட்டும் பற்றுக் கொண்டன்று. அவன் சுகபோகங்கள் அடைந்திருப்பினும் அவற்றின் மீதுள்ள பற்றாலன்று, (அதாவது அவனுக்குப் பயம், நோய்களின்றி, பொருள்மீது பற்றின்மை; சுக போகங்களிலும் பற்றுவைக்காமலிருந்தான் (அரதனமாலையணி)

அ॥ ஒவ்வொரு குணத்திற்கும் எவ்வாறு இயங்கி வந்தான் என்பது,

சு॥ ஜ்ஞாநே மௌனம் க்ஷமாஶக்தௌ த்யாகே² ஶ்லாக⁴ா
விபர்யய: । கு³ணா கு³ணாநு ப³ந்தி³த்வாத் தஸ்ய ஸப்ரஸவா
இவ ॥ 22

(ப-ரை) ஜ்ஞாநே=பிறர் குணங்கள் அறிந்திருந்தும்; மௌனம் =கட்டுப்பாடுடைய பேச்சும்;ஶக்தௌ=பதிலுக்குத் தீங்குசெய்யும் ஆற்றலிருந்தபோதிலும்; க்ஷமா: பொருமையும்; த்யாக² = ஈதல் உள்ளபோதிலும், ஶ்லாக⁴ா விபர்யய:= போற்றப் படுதலைக் காண்பது அரிது; தஸ்ய= அப்பேரரசனுடைய; கு³ண: = ஞானம் முதலிய குணங்கள்; குண அனுப³ந்தி³த்வாத் = எதிர்மாறான மௌனம் முதலிய குணங்களோடு சேர்ந்துள்ளமையால்; ஸப்ரஸவாஇவ= உடன் பிறந்தவை போன்றே; அபூ⁴வந் = ஆயின.

(க-ரை) உலகத்தாருடைய குணங்களை அறியுந்தன்மையிருந்தும், பிறரின் கெட்டகுணங்களை விளம்பரப்படுத்தாமலும்; தீங்கு அல்லது உதவிக்குமாறு செய்யும் திறனிருந்த போதிலும், பிறருடைய கெடுதிகளைப் பொறுத்தருளுதல்;ஈயுங்குணமிருப்பினும், பிறரால் போற்றப்படுதலை எதிர்பாராதும்; தியாகம் இருந்தும், ஆகுலமில்லாமலிருப்பது ஒரு மனிதனுக்கு அரிது. ஒருவனிடம் காண முடியாத இவ்விரட்டைக் குணங்கள் இந்த திலீபமன்னனிடம் காணப்பட்டன. (ஒற்றைமணிமாலையணி)

அ!! திலீபனுக்கு எது முதுமை என்பது பற்றி விளக்கப்படு கிறது.

சு ॥ அநாக்ரிஷ்டஸ்ய விஷயைர் வித்³யாநாம் பாரத்³ரிஶ்வந: ।
தஸ்ய த³ர்ம ரதே ராஸீத் வ்ரித்³த³த்வம் ஜரஸா விநா ॥ 23

(ப-ரை) விஷயை: = கேள்வி முதலியவற்றால்; அநாக்ரிஷ்டஸ்ய = தன்வயப்படுத்திக் கொள்ளாதும்; வி³த்³யாநாம் = மறைகள் அவற்றின் அங்கங்கள் ஆகியவற்றின் கல்விகளின்; பாரத்³ரிஶ்வந: = முடிவு காணும்படியான; த³ர்மரதே: = அறத்தில் ஊக்க முண்டாகிய; தஸ்ய = அந்த திலீப மன்னனுக்கு; ஜரஸபவிநா = முதுமை தவிர்த்து; வ்ரித்³த³த்வம் = மூப்பு; ஆஸித் = ஆயிற்று.

(க-ரை) புலன்களை வென்றவனும், எல்லாக் கல்விகளிலும் கரை கண்டவனும், அறநெறியாளனும் ஆகிய திலீப மன்னனுக்கு மூப்பைத் தவிர மற்ற எல்லாவகையான்வற்றிலும் மூப்பு அதாவது மேன்மை உண்டாகி இருக்கிறது. (பெருமையணி)

சு॥ ப்ரஜாநாம் விநயாத³ாநாத்²ரக்ஷணாத்² ப³ரணாத³பி ।
ஙபிதா பிதரஸ் தாஸாம் கேவலம் ஜந்மஹேதவ: ॥ 24

(ப-ரை) ப்ரஜாநாம் = மக்களுடைய; விநய = கற்பித்தலின்; ஆத³ாநாத் = செய்தலாலும்; ரக்ஷணாத் = ஆபத்துக்களை தடுப்பதாலும்; ப³ரணாத³பி = உண்டி முதலியன அளித்து காப்பாற்றுதலாலும்; ஸ: = அந்த திலீப மன்னன்; பிதா = தகப்பன்; அபூ³த் = ஆனான்; தாஸாம் = அந்த குடிமக்களின்; பிதரஸ்து = தகப்பன் மார்களோ; கேவலம் = மிகுந்த; ஜன்மஹேதவ: = பிறப்பிப்பதற்கு மட்டுமே கர்த்தாக்கள்; அபூ³வந் = ஆயினர்.

(க-ரை) அந்த திலீப மன்னன் குடிகளை நன்நெறியில் நடத்திச் செல்வதாலும், அச்சம் நீக்கிக் காத்தலாலும், உண்ண உணவு முதலியனவளித்துக் காப்பாற்றுவதால் அவர்களுக்குத் தந்தையானான்; அவர்களின் தந்தைமார்கள் அவர்களுக்குப் பிறவி தரக்கூடிய கர்த்தாக்கள் மட்டுமே ஆயினர். (வீறுகோளணி)

சு ॥ ஸ்தி¹த்யை த³ண்டயதோ த³ண்ட்யாந் பரிணேது ப்ரஸூதயே
அப்³யர்த்¹ காமா தஸ்யாஸ்தம் த³ர்மாயைவ மநீஷிண : ॥ 25

(ப-ரை) ²தண்டயாநேந = தண்டனைக்குத் தகுந்தவர் களாகியவர்களே; ஸ்தி²த்யை = உலகு நிலை பெறுவதற்கு

த²ண்டயத: = தண்டனையளித்துவரும்; ப்ரஸூதயே = மக்களைப் பெறுவதற்கு; பரிணேது = மனைவியை ஏற்கும்படியான; மநீஷிண: = அறிஞனான; தஸ்ய = அந்த திலீபவரசனுக்கு; அர்த²காமாபி = பொருளும் காமங்களுக்கும்; த⁴ர்மாயை அறத்துக்கே; ஆஸ்தாம் = ஆயின.

(க-ரை) அறிவுமிகுந்த திலீபராஜன் தண்டிக்கக்கூடியவர்களை தண்டித்தும், மக்களைப் பெற்றெடுக்க மனைவியை மணந்தும் வந்தான். அதனால், அவன் செய்த துட்டர்களை அடக்குதல், நல்லவர்களைக் காத்தல் முதலியவற்றால் அவனுக்கு கிடைத்து வந்த செல்வமும் மனைவியை மணத்தலும் அறஞ் செய்து முடிக்கவே ஆயின; அதாவது; அவனின் பொருளீட்டல் நியாயத்துடன் கூடியாவாயிற்று. அதாவது அவன் உரியகாலத்தில் தனது இல்லாளை அடைந்ததும் அறம்பொருட்டே ஆயிற்று. (தன்மை நவிற்சியணி)

சு ॥ து³தே³ாஹக³ாம் ஸயஜ்ஞாய ஸஸ்யாய மக⁴வாதி³வம் ।
ஸம்பத்² விநிமயே நோபெ⁴ள த⁴த⁴துர் பு⁴வநத்³வயம் ॥ 25

(ப-ரை) ஸ: = அந்த திலீபன்; யஜ்ஞாய = வேள்வி செய்தற் பொருட்டு; க³ாம் = நிலத்தை; து³தே³ாஹ = கறந்தான்; மக⁴வா = தேவேந்திரன்; ஸஸ்யாய = பயிர்களைப் பெருக்கும் பொருட்டு; தி³வம் = சுவர்கலோகத்தை; து³தே³ாஹ = கறந்தான்; உபெ⁴ள = திலீபனும் தேவர்கோனும்; ஸம்பத = ஆக்கங்களின்; விநிமயேந பகுத்துக் கொடுப்பதாலும்; பு⁴வநத்³வயம் = விண்மண்ணுலகங் களின்; த்³வயம் = இரண்டினையும் = த⁴த⁴து: = காப்பாற்றி னார்கள்.

(க-ரை) திலீபகன்னன் சிற்றரசர்களிடம் கப்பமெனப்படும், நிலந்தனிலுள்ள பொருள்களை ஏராளமாகப் பெற்றுக்கொண்டு, வேள்விகள் நடத்திவைத்தல் வாயிலாக உம்பர்களை மகிழ்வித்து மனநிறைவு உண்டாக்கி தேவருலகையும்; உம்பர்கோன் தேவலோகத்திலிருந்து நிலஉலகுக்கு மழைபெய்வித்து பயிர்விளைச்சல் பெறுகச்செய்து பூமியையும், இவ்வாறு ஒருவர் உலகந்தை மற்றவராக இருவுலகங்களையும் காப்பாற்றி வந்தனர். (உயத்துணர் வணி)

ஸு ॥ நகி[1]லாநு யுயஸ் தஸ்ய ராஜாநோ ரக்ஷிதுர் யஶ: ।
வ்யாவ்ரித்தா யத் பரஸ் வேப்[3]ய: ஶ்ரிதௌ தஸ்கரதா
ஸ்தி[1]தா ॥ 27

(ப-ரை) ராஜாந: = மற்றுமுள்ள அரசர்கள்; ரக்ஷிது: = அச்சத்தால் ஆண்டு வந்ததால்; தஸ்ய = அந்த திலீபமன்னன் போன்று; யஶ: = புகழை; நாநுயயு: = தொடர்ந்து பெற்றாராயினரல்லர்; யத் = எக்காரணத்தால் தஸ்கரதா = களவு; பரஸ்வே[3]ப்ய: = பிறர் பொருள்களாலும்; வ்யாவ்ரித்தா ஸதி = புறக்கணிக்கப்பட்டவையாயின்; ஶ்ரிதௌ = சொல்லளவில்; ஸ்தி[1]தா = இருந்து வந்தது.

(க-ரை) குடிகளைக் காப்பதில் பிறவரசர்கள் திலீப பேரரசனுக்கு நிகரானவனென்ற நற்புகழைப் பெற்றனரல்லர். ஏனெனறால், திலீபனுடைய அரசில் கள்ளத்தனம் என்பது சொல்லளவில் அறியப்பட வேண்டி இருந்ததேயன்றி செயலளவில் காணப்பட முடிந்ததில்லைஅதாவது: திருடு அறவே இல்லையென்பதாம். (கருத்துடையடைகொளியணி)

ஸு ॥ த[2]வேஷ்யோபி ஸம்மத ஶிஷ்டஸ் தஸ்யார்தஸ்ய யதௌ[1]ஷத[3]ம் ।
த்யாஜ்யோ து[2]ஷ்ட: ப்ரியோ஽ஸ்யாஸீ த[2]ங்கு[2]ஷீவோரக[2]
க்ஷதா ॥ 28

(ப-ரை) ஶிஷ்ட: = தகுதியுள்ள பெரியார்கள்; த்[2]வேஷ்யோ உபி = பகைவராயினும்; ஆர்தஸ்ய = நோயாளிக்கு; ஔஷத[3]ம் யத[3]ா = மருந்து எவ்வாறோ அவ்வாறே; தஸ்ய = அந்த திலீப மன்னனுக்கு; ஸம்மத: = உடன்பாடு; ஆஸீத் = ஆயிற்று; து[2]ஷ்ட:- குற்றஞ்செய்வோர்கள்; ப்ரியோ பி = அன்பு கொள்ள வேண்டியவர்களே ஆயினும்; உரக[2]க்ஷதா = அரவத்தால் கடியுண்ட; அங்கு[2]ளிஇவ = விரல் போன்று; த்யாஜ்ய = விடத்தக்கது; ஆஸீத் = ஆயிற்று;

(க-ரை) அந்த திலீப சக்கரவர்த்திக்கு நல்லார்கள் தம் பகைவரே ஆயினும், நோயாளிக்கு மருந்து வெறுப்பதே ஆயினும் எவ்வாறு விரும்புவானோ அவ்வாறாயினர். துட்டர்கள் தமக்கு அன்பர்களே ஆயினும் பாம்பால் கடியுண்டவிரல் எவ்வாறு வெட்டியெடுக்கப்பட்டு விடுமோ அதுபோல் விடத்தக்கவர்கள் ஆயினர். (வினை முதல் விளக்கணி)

அவ ॥ அவனுடைய பரோபகாரம் விளக்கப்படுகிறது.

சு ॥ தம்வேத$^{3}$ா வித$^{2}$தே$^{3}$ நூநம் மஹாபூ$^{3}$த ஸமாதி$^{3}$நா ।
தத$^{1}$ாஹி ஸர்வே தஸ்யாஸந் பரார்தை$^{1}$க ப$^{1}$லாகு$^{2}$ணா: ॥ 29

(ப-ரை) வேத$^{3}$ா:= பிரமன்; தம் = அந்த திலீப மன்னனை: மஹாபூ$^{3}$த: = நிலம் முதலிய பெரும் பூதங்களின்; ஸமாதி$^{3}$நா= காரணக் கூறுகளால்; வித$^{2}$தே$^{3}$ = உண்டாக்கினான்; நூநம்= உண்மை; தத$^{1}$ாஹி = அதுசரிகயே; தஸ்ய = அந்த திலீப மன்னன்; ஸர்வே = எல்லா; கு$^{2}$ணா: = குணங்கள்; பர = பிறர் களுடைய; அர்த$^{1}$ = நன்மையையே = ஏகப$^{1}$லா = இன்றி யமையாத பலன்களாக ஆஸீத் = ஆயின.

(க-ரை) பிரம்மா அந்த திலீப மன்னனை மேன்மையான நிலம் முதலிய ஐம்பெரும் பூதங்களின் காரணக் கூறுகளைக் கொண்டு உண்டாக்கினான். எவ்வாறெனின். அவனின் குணங்கள்; அனைத்தும் பிறர் சுகத்திற்கே நிலையாய் வைத்தான் (அவை யிலொற்றுமையுருவகவணி)

சு॥ ஸவேலா வப்ர வலயாம் பரிகீ$^{1}$க்ரித ஸாக$^{2}$ராம் ।
அநந்ய ஶாஸநா முர்வீம் ஶஶாஸைக புரீமிவ ॥ 30 ॥

(ப-ரை) ஸ:= அந்த திலீப மஹா ராஜா; வேலா = கடற் கரையை; வப்ரவலயாம்= அண்டையாய் சுற்றும் பெற்ற; பரிகீ$^{1}$க் ரித = அகழிகளாகச் செய்த; ஸாக$^{2}$ராம் = கடல்கள் உடையதும்; அநந்யஶாஸநாம் = பிறவரசர் ஆணையின்றி உள்ள; உர்வீம்= பூமியை; ஏகபுரீமிவ= ஒரே நகரம் போன்று; ஶஶாஸ=கற்பித்தான் (ஆண்டான்)

(க-ரை) அந்த திலீப மஹாராஜா நிலம் அனைத்தும் ஓர் குடையின்கீழ் ஒரே நகரம் போன்று ஆண்டு வந்தான்.
(தற்குறிப்பணி)

சு ॥ தஸ்ய த$^{2}$ாக்ஷிண்ய ரூடே$^{3}$ந நாம்நா மக$^{2}$த$^{3}$ வம்ஶஜா।
பத்நீ ஸுத$^{2}$க்ஷிணே த்யாஸீ த$^{2}$த்$^{3}$வரஸ்யேவ த$^{2}$க்ஷிணா ॥ 31

(ப-ரை) தஸ்ய = அந்த திலீப மன்னனுக்கு; மக$^{2}$த$^{3}$= மகத நாட்டுமன்னனுடைய; வம்ஶ = குலத்தில்; ஜா = பிறந்த; த$^{2}$ாக்ஷிண்ய

ரூடே³ந = பிறர்க்குக் கண்ணோடுவதில் புகழ் வாய்ந்த; நாம்நா = பெயரால்; ஸுத³க்ஷி²ணேதி = சுதக்ஷிணை என்கின்ற; பத்நீ = மனைவி அத்³வரஸ்ய = வேள்விக்கு; தக்ஷிணா இவ = தக்ஷிணா என்னும் மனைவி போன்று; ஆஸீத் = ஆனாள்.

(க-ரை) திலீப மன்னனுக்கு உயர்ந்த மகதவம்சத்தில் பிறந்தவளும், தாக்ஷிண்யம் என்னும் குணத்தால் நற்புகழ்வாய்ந்தவளும், தக்ஷிணை என்னும் பெயருள்ள மனைவி தன் பெயருக் கேற்றவாறு, வேள்விக்கு தக்ஷிணாக்னி என்பது துணையாவது போல் அவனுக்கு மிகநேசமுள்ள மனைவியானாள். (பெருமை மற்றும் ஸிரியுவமையணி)

சு ॥ களத்ரவந்த மாத்மாநம் அவரோதே³ மஹத்யபி ।
தயா மேநே மநஸ்விந்யா லக்ஷ்ம்யாச வஸுத³ாதி³ப: ॥ 32

(ப-ரை) ! வஸுத³ாதி³ப: = அரசனாகிய திலீபன்; அவரோதே³ அந்தப்புரப் பெண்கள்; மஹத்யபி = அதிகமாயிருந்த போதிலும், மநஸ்விந்யா = திடமான மனதுடைய தயா = அந்த சுதக்ஷிணா தேவியாலும்; லக்ஷ்ம்யாச = நிலமெனும் திருமகளாலும்; ஆத்மாநம் தன்னை; களத்ரவந்தம் = மனைவியுடையவனாகவும்; மேநே = எண்ணினான்.

(க-ரை) அந்த திலீபமன்னன் பல அந்தர்புரத்து மகளிர் இருந்தும், பேரழகியும் மனோகரியுமான, சுதக்ஷிணாதேவியாலும் நாடென்னும் திருமகளாலும், தன்னையோர் நல்லில்லாளனாக எண்ணினான் (தன்குணமிகையணி)

சு॥ தஸ்யா மாத்மாநுரூபாயா மாத்மஜந்ம ஸமுத்ஸுக: ।
விலம்பி³த ப¹லை: காலம் ஸ விநாய மநோரதை¹: ॥ 33

(ப-ரை) ஸ: = அந்த திலீப மன்னன்; ஆத்மாநு ரூபாயாம் = தனக்கு நிகரானவளும்; தஸ்யாம் = அந்த சுதக்ஷிணாதேவியிடம்; ஆத்மஜந்ம = மகனிடம்; ஸமுத்ஸுகஸ்ஸந் = பற்றுடையவனாய்; விலம்பி³த = தாமதமான; ப¹லை: = பலனுண்டாய; மநோரதை¹: = ஆசைகளால்; காலம் = காலத்தை; விநாய = கடத்தினான்.

(க-ரை) திலீப மன்னன் தனக்கு நிகராய சுதக்ஷிணாதேவிக்கு மகன் பிறக்க வேண்டுமென்ற எண்ணங் கொண்டவனானான். அவ்வாறு சிறிது காலம் கடந்தது. (நிகழ்வினவிற்சியணி)

ஸு॥ ஸந்தா நார்த$^{1}$ாய வித$^{3}$யே ஸ்வபு$^{3}$ஜா த$^{2}$வதாரிதா ।
தேநதூ$^{3}$ர் ஜக$^{2}$தோ கு$^{2}$ர்வீ ஸசிவேஷு நிசிக்ஷிபே ॥ 34

(ப-ரை) தேந = அந்த திலீப மன்னவனால்; ஸந்தாந = மகப்பேறே; அர்த$^{1}$ாய = பிரயோசனமாகக் கொண்ட; வித$^{3}$யே ஒழுக்கமுறையாக; ஸ்வ = தனது; பு$^{3}$ஜாத் = தோள்களிலிருந்து அவதாரிதா = இறக்கப்பட்ட; ஜக$^{2}$த: = உலகத்தின்; கு$^{2}$ர்வீ = அதிகமான; தூ$^{3}$: = பளுவை; ஸசிவேஷு = அமைச்சர்களிடம்; நிசிக்ஷிபே = வைக்கப்பட்டது.

(க-ரை) திலீப மன்னன் தனக்கு மகப்பேறு உண்டாகும் பொருட்டு, அதற்காற்ற வேண்டிய நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டியிருந்தமையால், தானேற்றுவந்த அரசாண்மையென்னும் பளுவை அமைச்சர்களுக்கு ஒப்படைத்தான் (உருவகவணி)

ஸு॥ அத$^{1}$ா ப்$^{3}$யர்ச்ய வித$^{3}$ாதாரம் ப்ரயதௌ புத்ரகாம்யயா ।
தௌ த$^{2}$ம்பதீ வஸிஷ்டஸ்ய கு$^{2}$ரோர் ஜக்$^{2}$மது ராஶ்ரமம் ॥ 35

(ப-ரை) அத$^{1}$ = அவ்வாறு தன் அரசு பாரத்தை ஒப்படைத்த பிறகு; புத்ரகாம்யயா = மகப்பேற்றை விழைந்தவனாய்; தௌ = அந்த; த$^{2}$ம்பதீ = சு$^{2}$தக்ஷிணா திலீபர்கள்; ப்ரயதௌ ஸந்தௌ = பரிசுத்தமானவர்களாய் ; வித$^{3}$ாதாரம் = பிரம்மதேவனை; அப்$^{3}$யர்ச்ய = தொழுது; கு$^{2}$ரோ: = தமது குலகுருவாய; வஸிஷ்டஸ்ய = வசிட்டருடைய; ஆஶ்ரமம் ஆச்சிரமத்தை நோக்கி; ஜக்$^{2}$மது: = புறப்பட்டுச் சென்றனர்.

(க-ரை) அதன் பிறகு திலீப மன்னனும் சுதக்ஷிணாதேவியும் மகப்பேறு பெறும் பொருட்டு அதற்குண்டான நியமங்களைக் கடைப் பிடித்தவர்களாய், அயனைத் தொழுது, தமது குல குருவாகிய வசிட்டமா முனிவருடைய ஆசிரமத்தை நாடிச் சென்றனர், (எளிதின் முடிபணி)

ஸு॥ ஸ்நிக்$^{2}$த$^{3}$ க$^{2}$ம்பீர நிர்கோ$^{3}$ஷ மேக$^{3}$ஸ்யந்த$^{2}$ந மாஶ்ரிதௌ ।
ப்ராவ்ரிஷேண்யம் பயோவாஹம் வித்$^{2}$யுதை$^{2}$ராவதாவிவ ॥ 36

(ப-ரை) ஸ்நிக்$^{2}$த$^{3}$ = இனிமையானதும்; க$^{2}$ம்பீர = பெரும்; நிர்கோ$^{3}$ஷம் = ஓசையுள்ள; ஏகஸ்யந்த$^{2}$நம் = ஒரேதேரை; ப்ராவ்ரிஷேண்யம் = மாரிக்காலத்தில் பிறந்த; பயோவாஹம் = முகிலும்; வித்$^{2}$யுத் ஐராவதா இவ = மின்னலும் வெள்ளையானை,

கள் போன்று; ஆஸ்தி¹தௌ ஸந்தௌ = ஏறியவர்களாய், ஜக்²மது: = சென்றனர்.

(க-ரை) அந்த திலீபரும் சுதக்ஷிணா தேவியும் பேரொலி செய்யும் ஓர் தேரையேறிக் கொண்டவர்களாய் சென்றனர். அவர் களில் வெண்ணிறமான திலீபனும், பசுமையான சுதக்ஷிணா தேவியும் கறுநிறமுள்ள அத்தேரில் போவது எவ்வாறுளதெனில், கார்மேகத்தின் மீது ஐராவதமெனும் வெள்ளையானையும் மின்னலும் ஒன்று கூடி செல்வது போன்று இருந்தது (தொகை யுவமையணி)

ஸு॥ மாபூ⁴த³ஶ்ரம பீடே²தி பரிமேய புரஸ்ஸரௌ ।
அநுப⁴ாவ விஶேஷாத்து ஸேநா பரிவ்ரிதா விவ ॥ 37

(ப-ரை) ஆஶ்ரம = ஆச்சிரமத்திற்கு; பீட²ா = துன்பம்; மாபூ⁴த் = நிகழவேண்டியதில்லை; இதி = இது காரணத்தால்; பரிமேய = சொற்பமான; புரஸ்ஸரௌ = ஏவலாட்கள் உடையவர்களாயிருப்பினும்; அநுப⁴ாவ = ஒளியின்; விஶேஷாத்து = பெருக்கால் ஸேந = படைகளால்; பரிவ்ரிதா விவஸ்தி¹தௌ = சூழப்பட்டவர் களோவென; ஜக்²மது: = திரண்டு சென்றனர்.

(க-ரை) வசிட்டாச்சிரமத்துக்கு தொல்லையின்றிருக்க வேண்டுமென்று எண்ணியவர்களாய், மிதமான பரிவாரங்களுடன் சென்றனர். எனினும் அந்த திலீப மன்னனுடைய ஒளியால் படையுடன் செல்வது போன்று இருந்தது (தற்குறிப்பணி)

ஸு॥ ஸேவ்யமாநௌ ஸுக²ஸ்பர்ஶை: ஸால நிர்யாஸ க³ந்தி⁴பி⁴: ।
புஷ்பரேணூத்கரைர் வாதைராதூ⁴த வநராஜிபி⁴: ॥ 38

(ப-ரை) ஸுக²: = சுகமான; ஸ்பர்ஶை: = தொடுதல் கொண்டும்; ஸால = சால்மரத்தின்; நிர்யாஸ = ரசத்தின்; க³ந்தி⁴பி⁴: = வாசனை உடையதும்; புஷ்ப = பூக்களின்; ரேணு = மகரந்தப் பொடிகளை உத்கரை: = தெளித்துக் கொண்டுள்ளதும்; ஆதூ⁴த = சற்று நடுக்கமுற்ற; வந = காடுகளின்; ராஜிபி⁴: = வரிசைகள் உடைய; வாதை: = காற்றால்; ஸேவ்யமாநௌ = வீசப் பட்டவர்களாய்; ஜக்²மது: = திரண்டு சென்றனர்.

(க-ரை) குளுமையானதும் சால்மரத்தின் ரசத்தின் நாற்ற முடையதும், க்பூகளின் மகரந்தப் பொடியைத் தூவி வருவதும்,

காட்டுப் பகுதியை அசையச் செய்வதும் சுகமான பரிசம் தருவதும் ஆகிய தென்றலினால், சேவிக்கப்படுகின்றவர்களாய்த் திரண்டு சென்றனர். (நிகழ்வினவர்ச்சியணி)

சு॥ மநோபி³ராமா ஃச்ரிண்வந்தெள ரத²நேமிஸ்வநோந்முகை²: ।
ஷட்²ஜஸம்வாதி³நீ: கேகாத்³விதா⁴ பி³ந்நா ஃசிகண்டி²ந: ॥ 39

(ப-ரை) ரத²நேமி= தேர்ச்சக்கரங்களின் விளிம்புகளுடைய ஸ்வந = ஓசையால்; உத் = எடுக்கப்பட்ட;முகை²: = முகங்களுடைய ஃசிக²ண்டி²பி³: = மயில்களாலும்; த்³விதா⁴ = இருவிதங்களாக; பி³ந்நா: = பிரிக்கப்படவை ஆதலால்; ஷட்ஜ=சட்ஜமம் என்னும் ஒலியாலும்; ஸம்வாதி³நீ: = நிகரான; ம³நாபி³ராமா= மனத்துக்கு உகந்த; கேகா: = மயில்களின் குரல்களை: ஸ்ரிண்வந்தெள; கேட்பவர்களாய்; ஜக்³மது: திரண்டு சென்றனர்.

(க-ரை) அந்த திலீப மன்னனின் தேரின் சக்கரங்களினால் உண்டான ஒலியைக்கேட்டு மயில்கள் முகில் சத்தமென்று நினைத்து தம் முகங்களை மேநோக்கி இருவகைகளாகப் பிரிக்கப்பட்டன வாகையால், சட்ஜ ஸ்வரத்திற்கு நிகரானதும் மனதுக்குகந்தது மான மயில்களின் வாக்குகளைக் கேட்டுக் கொண்டே சென்றனர். (நிகழ்வினர்ச்சி மற்றும் மயக்கவணி)

சு॥ பரஸ்பராக்ஷி ஸாத்³ரிஃச்ய மதூ³ரோஜ்ஜி²த வர்த்மஸு ।
ம்ரிக³த்³வந்த்³வேஷு பஃச்யந்தெள ஸ்யந்த³நா ப³த்³த³த்³ரிஷ்டிஷு ॥ 40

(ப-ரை) அதூ³ர = அருகில்; உஜ்ஜி³த = விடுவிக்கப்பட்ட; வர்த்மஸு = வழிகொண்டதாயதும்; ஸ்யந்த³ந = தேரில்; ஆப³த்³த³ = கட்டப்பட்ட; த்³ரிஷ்டிஸு = பார்வைகள் கொண்ட; ம்ரிக³ = மான்களின்; த்³வந்த்³வேஷு = ஆண் பெண் இரட்டையர்களில்; அந்யோந்ய = ஒன்றுக்கொன்று; அக்ஷி = கண்களில், ஸாத்³ரிஃச்யம் = ஒற்றுமையை; பஃச்யந்தோ = பார்பவர்களாய்; ஜக்³மது: = சென்றனர்.

(க-ரை) வழிக்கு அருகில் நின்று தமது தேரைப் பார்த்துக் கொண்டிருக்கும் பெண் மான்களின் கண்களும், தங்களது கண்களும் ஒத்திருக்கும் விசேடத்தைப் பார்த்துக் கொண்டே சென்றனர் (புகழ் பொருளுவமையணி)

சு॥ ஶ்ரேணீ ப²ந்த⁴ாத்² விதங்வத²பி³ ரஸ்தம்ப⁴ாம் தோரணஸ்ரஜ
ஸாரஸை: கலநிர்ஹ்ராதை²: க்வசிதுந் நமிதாநநௌ ॥

(ப-ரை) ஶ்ரேணீ=வரிசைகளில்; ப²ந்த³ாத்³=கட்டப்
தால்; ஆஸ்தம்ப³ாம்=ஆதாரமான தூண் ற்ற; தோரண=வெளி
லில் உள்ள; ஸ்ரஜம்=மாலையை; விதந்வத்²பி³:=செய்துக்கெ
டுள்ள; கல=விளங்காத இனிமையான; நிர்ஹராதை²:=ஒ
கொண்ட; ஸாரஸை:=ஸாரஸமென்னும் பறவைகளால்; க்வ:
ஓரிடத்தில்; உந்நமித=மேலுக்கு எடுத்துக் கொண்ட; ஆநநௌ
முகங்கள் உடையவர்களாய்; ஜக்²மது:=சென்றுக் கொண்டி
னர்.

(க-ரை) ஓரிடத்தில் கம்பங்களின்றியே வெளிவாசலில் உ
தோரணங்களில் கட்டப்பட்டவை போன்று வரிசையாக வ
ஒலித்துக் கொண்டே பறக்கும் சாரசப் பறவைகளை த
நிமிர்ந்துப் பார்த்துக் கொண்டே சென்றனர்.
(நிகர் தொடர் முழுதுவமையணி)

சு॥ பவநஸ்யாநுகூலத்வாத் ப்ரார்த்த¹நா ஸித்²தி³ ஶம்ஸந: ।
ரஜோபி³ஸ் துரகோ²த் கீர்ணை: அஸ்ப்ரிஷ்டாலக வேஷ்டாெ

(ப-ரை) ப்ரார்த¹நா=விருப்பத்தின்; ஸித்²தி³=நிறைறே
ைலை; ஶம்ஸிந:=நவிலும்; பவநஸ்ய=காற்றின்; அநுக
வாத்=அனுகூலத்தால்; துரக²:=புரவிகளால்; உத்கீர்ணை
சிதறடிக்கப்பட்ட; ரஜோபி²:=தூசியால்; அஸ்ப்ரிஷ்ட=தெ
படாத; அலக=முன்னுச்சி மயிரும்; வேஷ்டநௌ=குடுமிக
உள்ளவர்களாய்; ஜக²மது:=சென்றனர்.

(க-ரை) அவர்கள் எண்ணம் நிறைவேற்றுவது போ
பிரயாணத்திற்கு அனுகூலமாக பின்புறத்திலிருந்து காற்று
வதால், குதிரையின் வேகத்தால் உண்டாய தூசி சுதக்ஷ
தேவியின் முன்னுச்சி மயிர்களுக்கும் திலீபனுடைய குடுமி
படாமலிருக்க: (நிகழ்வினவர்ச்சியணி)

சு॥ ஸரஸீஷ்வரவிந்த²நாம் வீசிவிக்ஷோப³ ஶீதலம்
ஆமோத³ முபஜிக்²ரந்தௌ ஸ்வநிஸ்வாஸாநுகாரிணம் ॥

(ப-ரை) ஸரஸீஷு : பொய்கைகளுள்; வீசி = அலைகளின்; விக்ஷோப³: = அசைவுகளால்; ஶீதலம் = குளிர்ந்த; ஸ்வ: தன்னுடைய; நிஸ்வாஸ = மூச்சுவிடும் காற்றை; அநுகாரிணம் = ஒத்துள்ள; அரவிந்த²ர நாம் = தாமரை மலர்களின்; உபஜிக்²ர ந்தெள = முகர்ந்தவர்களாய்; ஜக்³மது: = சென்றனர்.

(க-ரை) வழிக்கிடையே தாமரைக் குளங்களில் உள்ள அலைகளைப் போன்று குளிர்ச்சியாய், தங்களது பெருமூச்சுகளுக்கு ஒத்தலைப் போனமுள்ள உயர்ந்த தாமரை மலர்களின் பரிமளம் வீசிக் கொண்டிருக்கையில் முகர்ந்துக்கொண்டே சென்றனர். (நிகழ்வினவிர்ச்சியணி)

சு॥ க்³ராமேஷ்வாத்ம விஸ்ரிஷ்டேஷு யூபசிஹ்நேஷு யஜ்வநாம் ।
அமோக²ா: ப்ரதிக்²ரிண்ஹந்தாவர்க்²யாநு பத²மாஸிஷ: ॥ 44

(ப-ரை) ஆத்ம = தன்னால்; விஸ்ரிஷ்டேஷு = விடப்பட்ட; யூபசிஹ்நேஷு = யூபத்தம்பங்களே அடையாளங்களாக உள்ள; க்³ராமேஷு = ஊர்களில்; அமோக³ா: = நிறைவேற்றப்பட்ட; யஜ்வநாம் = யாகம் செய்விப்போர்களின்; ஆஸிஷ: = வாழ்த்துக்களை; அர்க்³ய = பூசைப் பொருள்களைப் பெறுவதைவிட; அநுபத²ம் = பிறகும்; ப்ரதிக்²ரிஹ்ணந்தெள = பெற்றுகொண்டவர்களாய்; ஜக்²மது = சென்றனர்.

(க-ரை) முன்பு தம்மால் செய்து நிறைவேற்றப்பட்ட வேள்விகட்காக நடப்பட்ட யூபத்தம்பங்களை அயையாளங்களாய் கொண்டுள்ள ஊர்களில் அந்தணர்களால் உபசாரங்கள், வாழ்த்துக்கள் பெற்றுக்கொண்டவாகளாகவும்; (நிகழ்வினவர்ங்சியணி)

(யூபத்தம்பம் = வேள்வியில் வதை செய்யப்போகும் பசுவைக் கட்டி வைக்கும் கம்பம்)

உபசாரம் = கை, கால் கழுவிக்கொள்ள தண்ணீரளித்தல்

சு॥ ஹய்யங்க²வீந மாத²ாய கே³ாஷவ்ரித்³த³ாந் உபஸ்தி¹தாந் ।
நாமதே³யாநி ப்ரிச்ச²ந்தெள வந்யாநாம் மார்க²ஶாகி¹நாம் ॥ 45

(ப-ரை) ஹய்யங்க²வீநம் = அப்போதே கடைந்தெடுக்கப்பட்ட வெண்ணெய்; ஆத²ாய = பெற்றுக்கொண்டு; உபஸ்தி¹தாந் = வந்த; கே³ாஷவ்ரித்²த³ாந் = ஆயர்கள்வாழ் ஊர்களில் உள்ள முதி

யோர்களை; வந்யாநாம் = காட்டிற்பிறந்த; மார்க2ஶாகி1நாம் = வழி நெடுகிலும் உள்ள மரங்களின்; நாமதே3யாநி பெயர்களை; ப்ரிச்ச1ந்தௌ = கேட்டவர்களாய்; ஜக்3மது: = சென்றனர்.

(த-ரை) அப்போதே கடைந்து எடுத்த வெண்ணெயிலிருந்து காய்ச்சி எடுத்த நெய்யை எடுத்துக்கொண்டு வந்த ஆயர்பாடிகளில்வாழ் முதியோர்களை, காட்டின் வழியே உள்ள மரங்களின் பெயர்களை கேட்டறிந்தவர்களாய் (நிகழ்வினவிர்ச்சியணி)

ஸு॥ காப்யபி3க்1யாதயோ ராஸீத்2 வ்ரஜதோஃஶுத்2த2வேஷயோ: ।
ஹிமநிர்முக்தயோர்யோக2 சித்ரா சந்த்2ரமஸோரிவ ॥ 46

(ப-ரை) வ்ரஜதோ: = சென்றுகொண்டுள்ள; ஶுத்2த3 = தூய்மையான; வேஷயோ: = சிங்காரமுள்ள; தயோ: = அந்த சுதக்ஷிணா திலீபமன்னர்களுக்கு; ஹிம = பனியால்; நிர்முக்தயோ = விடுக்கப்பட்ட; சித்ராசந்த்3ர மஸோரிவ - சித்திரை நட்சத்திரமும் சந்திரனும் போல்; யோகே2ஸதி = தொடர்புண்டாக்கிக் கொண்டிருக்கவே; கா பி = இன்னதெனக் கூறமுடியாது; அபி`க்1யா = ஒருவிதமான ஒளி; ஆஸீத் = ஆயிற்று.

(க-ரை) தூய்மையான ஆடையலங்காரங்களுடன் செல்லும் அவ்வரச தம்பதிகளிடையே பனிக்காலம் தாண்டிய பிறகு சித்திரை விண்மீன் சந்திரன்களைப் போன்று சொல்லொணா ஒளி தோன்றியது. (பதப்பொருள்காட்சியணி)

ஸு॥ தத்தத்2பூ3மிபதி: பத்ந்யை த2ர்ஶயந் ப்ரிய த2ர்ஶந: ।
அபிலங்கி3த மத்3வாநம் பு2பு2தே3ந பு2தே3ாபம: ॥ 47

(ப-ரை) ப்ரிய = விருப்பமான; த2ர்ஶந: = பார்வையுடைய; பு2தே3ாபமா = புதனையொத்த; பூ3மிபதி: = திலீபமன்னன்; பத்ந்யை = மனைவியான சுதக்ஷிணாதேவிக்காக; தத்தத் = அவ்வந்தப் பொருட்களை; தர்ஶயந் = காண்பித்தவனாய்; லங்கி3தமபி = தாண்டப்பட்டவை ஆயினும்; அத்3வாநம் = வழியை; நபு2பு2தே3 = அறியமாட்டாது போயிற்று.

(க-ரை) அன்புள்ளவனாய், பொருட்களையறிவதில் புதனுக்கு நிகரான திலீபமன்னன், தன் மனைவிக்கு, அவ்வந்த பொருட்களைக் காண்பித்துக் கொண்டே சென்றமையால், அவர்கட்கு வழிநடந்தது போல் தோன்றவில்லை. (விரிவுவமை மற்றும் மிகுதியுணர்ச்சியணி)

ஸு॥ ஸ து²ஷ்ப்ராப யஶா꞉ ப்ராப த³ர ஶ்ரமம் ஶ்ராந்த வாஹந꞉ ।
ஸாயம் ஸம்யமிநஸ் தஸ்ய மஹர்ஷேர் மஹிஷீஸக¹꞉ ॥ 48

(ப-ரை) து²ஷ்ப்ரப=பிறர்க்குக் கிடைக்கக் கூடாத; யஶா꞉= புகழுடையவனும்; ஶ்ராந்த=துவண்டுபோன; வாஹந꞉=புரவிகளை உடையவனும்; மஹிஷீஸக¹꞉=மனைவியோடு கூடியவனுமாகிய; ஸ꞉=அந்த திலீபமன்னன்; ஸாயம்=அந்திப்பொழுதில்; ஸம்யமிந꞉=நியமம் உள்ளவனான; தஸ்ய=அந்த; மஹர்ஷே꞉= வசிஷ்டனுடைய; ஆஶ்ரமம்=குடிலை; ப்ராபத்=அடைந்தான்.

(க-ரை) பிறர்க்கு அரிதாய புகழ்வாய்ந்த திலீபமன்னவன் பத்தினீ சமேதனாய், தொய்ந்துபோன புரவிகளுடன் அந்தி நேரத்தில் வசிட்ட மகரிஷியின் குடிலை அடைந்தான் (நிகழ்வினவிர்ச்சியணி)

அவா॥ ஆச்சிரமத்தின் விளக்கம்.

ஸு॥ வநாந்தரா து³பாவ்ரித்தை꞉ ஸமித்குஶ ப்¹லாஹரை꞉ ।
பூர்யமாண மத்³ரிஶ்யாக்³நி ப்ரத்யுத்³யாதை꞉ தபஸ்விபி³꞉ ॥ 49

(ப-ரை) வநாந்தரா = வேறு காடுகளிலிருந்து; உபாவ்ரிதை꞉=திரும்பிவந்த; ஸமித்=வேள்விக்காய விறகுகள்; குஶ= தருப்பை; ப¹ல=பழங்களையும்; ஆஹரை꞉=கொண்டுவரும் சுபாவமுடையவர்களாய்; அத்³ரிஶ்ய=பார்க்க முடியாத; அக்³நி=கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்நிகளால்; ப்ரத்யு³த்யாதை= வரவேற்கப்பட்ட; தபஸ்விபி³꞉=தவசிகளால்; பூர்யமாணம்= நிறப்பப்பட்ட; ஆஶ்ரமம்=குடிலை; ப்ராப்த꞉=அடைந்தனர்.

(க-ரை) பிற காடுகளிலிருந்து சமித்து, தருப்பை பழங்களையும் கொண்டுவருவோரும், காணக்கூடாத திரேதாக்கினிகளால் வரவேற்கப்பட்ட முனிவர்களால் நிறம்பி இருப்பதும் (உயர்வினவிர்ச்சியணி)

ஸு॥ ஆகீர்ணம் ரிஷிபத்நீநாம் உடஜத்³வார ரோத⁴பி³꞉ ।
அபத்யைரிவ நீவார ப³ாக³தே³யோசிதைர் ம்ரிகை³꞉ ॥ 50

(ப-ரை) நீவார=தாமாகவே நீர்நிலைகளில் முளைக்கும் நெல்லின்; ப³ாக³தே³ய=பங்கைப் பெற; உசிதை꞉=தகுதியுள்ளவை ஆதலால்; உடஜ = குடில்களின்; த்³வார꞉ = வாயில்களை;

ரோதி²பி³꞉ = தடுக்கும்; ம்ரிகை³꞉ = மான்களால்; ரிஷிபத்நீநாம் = முனிவர்களுடைய மனைவிமார்களின்; அபத்யைரிவ = குழந்தைகளைப்போல பேணப்பட்டுவரும்; ஆகீர்ணம் = பரந்துள்ள; ஆஶ்ரமம் = குடிலை; (ப்ராபத் = அடைந்தனர்)

(க-ரை) காட்டு நெல்லில் ஒருபகுதியை தின்றுகொண்டே, முனிவர்களின் குழந்தைகளைப் போல் பாதுகாக்கப்பட்டு, குடில்களின் வாயில்களைத் தடுக்கும் மான்களால் சூழப்பட்டதுமான, (நிகழ்வினவிர்ச்சியணி)

ஸு॥ ஸேகாந்தே முநிகந்யாபி³ஸ் தத்க்ஷணோஜ்ஜி¹த வ்ரிக்ஷகம் ।
விஸ்ரம்ப³ாய விஹங்க³ாநா மாலவாலாம்பு³ பாயிநாம் ॥ 51

(ப-ரை) ஸேக = மரங்களின் அடிகளை நனைக்கத் தண்ணீர் இறைப்பதின்; அந்தே = கடைசியில்; முநிகந்யாபி꞉ = முனிகன்னியர்களால்; ஆலவால = பாத்திகளில்; அம்பு = தண்ணீரை; பாயிநாம் = பருகுகின்ற; விஹங்க³ாநாம் = பறவைகளின்; விஸ்ரம்ப³ாய = நம்பிக்கைக்காக; தத்க்ஷணா = அவ்வாறு பருகும்போதே; உஜ்ஜி¹த = விடப்பட்ட; வ்ரிக்ஷகம் = இளம் மரங்களை உடைய; ஆஶ்ரமம் = குடிலை; ப்ராபத் = அடைந்தனர்.

(க-ரை) முனிகன்னியர்களால் ஊற்றப்பட்டு, பறவைகள் அந்தப் பாத்திகளிலுள்ள தண்ணீர் அருந்த வேண்டுமென்ற நம்பிக்கையுடன் விடுக்கப்பட்ட சிறுமரங்களுடையதுமான (நிகழ்வினவிர்ச்சியணி)

ஸு॥ ஆதபத்யய ஸம்க்ஷிப்த நீவாராஸு நிஷாதி³பி³꞉ ।
ம்ரிகை³ர் வர்த்தித ரோமந்த முடஜாங்க³ண பூ³மிஷு ॥ 52

(ப-ரை) ஆதப = வெய்யிலில்; அத்யய = போனதால்; ஸம்க்ஷிப்த = குவியலாக செய்யப்பட்ட; நீவாராஸு = காட்டு நெல்லுடைய; உடஜ = குடிலின்; அங்க³ணபூ³மி꞉ = முற்றங்களில்; நிஷாதி³பி³ = உட்கார்ந்துள்ள; ம்ரிகை³꞉ = மான்களால்; வர்தித = செய்யப்பட்ட; ரோமந்தம் = அசைபோடுதல் உள்ள; ஆஶ்ரமம் = குடிலை; ப்ராபத் = அடைந்தனர்

(க-ரை) விரியல் தாழ்ந்தவுடன் குவியல்களாக தள்ளப்பட்ட; காட்டு நெல்லுள்ள வாசல்களில் அசைபோட்டுக் கொண்டுள்ள மான்களை உடைய குடில்களில் (நிகழ்வினவர்ச்சியணி)

ஸு॥ அப்³யுத்தி¹தாக்²நி பிஶுனைஃ அதிதீ¹ந் ஸாஶ்ரமோந்முக¹ாந் ।
புநாநம் பவநோத்²தூ³தைர் தூ³மைராஹுதி க³ந்தி³பி³ஃ ॥ 53

(ப-ரை) அப்³யுத்தி¹த=மூட்டப்பட்டு கொழுந்து விட்டெரியும்; அக்²நி=கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்²னிகளுக்கு; பிஶுனைஃ=அறிகுறிகளாய்; பவந=காற்றினால்; உத்²தூ³தைஃ=சிதறடிக்கப்பட்டதும்; ஆஹுதி=வேள்வியிலிடும் பலிகளின்; க³ந்தி³பி³ஃ=வாசனையுடைய; தூ³மைஃ=புகைகளால்; ஆஶ்ரம=குடிலுக்கு; உந்முக¹ாந்=எதிர்படும்; அதிதீ¹ந்=விருந்தினர்; புநாநம்=புனிதராக செயகின்ற; ஆஶ்ரமம்=ஆச்சிரமத்தை; (ப்ராபத்=அடைந்தனர்)

(க-ரை) மூண்டு, கொழுந்துவிட்டெரியும் திரேதாக்கினிகளுக்கு அறிகுறிகளாகவும், காற்றினால் மேலே கிளப்பப்பட்ட ஆகுதிகளின் நறுமணமுள்ள புகைச்சலகளால் ஆச்சிரமத்திற்குப் போவோர்களை புனிதப்படுத்துவதும், (நிகழ்வினவிற்சியணி மற்றும் சொற்பொருட் பின்வருவிளக்கணி)

ஸு॥ அத¹யந்தார மாதி²ஶ்ய து³ர்யாந் விஶ்ராமயேதி ஸஃ ।
தாமவாரோபயத் பத்நீம்ரத¹ா த²வததாரச ॥ 54

(ப-ரை) அத¹=ஆச்சிரமத்தை அடைந்தபிறகு; ஸஃ=அந்த திலீப மன்னன்; யந்தாரம்=சாரதி (ஓட்டுநரை); து³ர்யாந்=புரவிகளை; விஶ்ராமய="ஓய்வுபெறச் செய்யும்"; இதி=என்று; ஆதி²ஶ்ய=உத்தரவிட்டு; தாம்பத்நீம்=அம்மனைவியை; ரத¹ாத்=தேரிலிருந்து. அவரோபயத்=இறக்குவித்தான்; அவததாரச=தானும் இறங்கினான்.

(க-ரை) திலீபமன்னன் வசிட்டரின் குடிலை அடைந்ததும், தம் மனைவியாகிய சுதக்ஷிணாதேவியை தேர்விட்டிறக்கி, தானும் இறங்கி, "குதிரைகளுக்கு ஓய்வுகொடு" மென்று தேரோட்டிக்கு ஆணையிட்டான் (வேண்டலணி)

ஸு॥ தஸ்மை ஸம்³யாஸ் ஸப³ார்யாய கே³ாப்த்ரே கு³ப்ததமேந்த்²ரியாஃ ।
அர்ஹணா மர்ஹதே சக்ருஃ முநயோ நயசக்ஷுஷே ॥ 55

(ப-ரை) ஸப்³யாஃ=அவையில் உள்ளோர்களும்; கு³ப்ததம=அடங்கிய; இந்த்²ரியாஃ=புலன்களையுடைய; முநயஃ=முனிவர்கள்; ஸப³ார்யாய=மனைவியாருடன் கூடியவர்களும்; கே³ாப்த்ரே=

காப்பவனும்; நயசக்ஷுஷே = நூல்களையே தத்துவ விளக்கத்திற்காதாரமாகக் கொண்டவனாதலின்; அர்ஹதே = போற்றத்தக்க; தஸ்மை = அந்த திலீபமகாராசனுக்காக; அர்ஹணாம் = பூசையை; சக்ருஃ = செய்தார்கள்.

(க-ரை) புலனடக்கமுள்ள அவையோர்களாய முனிவர்கள், நூன்முறைப்படி ஆள்வதால் போற்றப்படத்தக்கவனும் மனைவியுடன் கூடினவனுமாகிய திலீபமன்னனுக்கு வரவேற்பளித்து கௌரவித்தனர். (நிகழ்வினவிற்சியணி)

சு॥ விதே³ஸ் ஸாயந்தநஸ்யாந்தே ஸத³த³ர்ஶ தபோநிதி³ம் ।
அந்வாஸித மருந்த³த்யா ஸ்வாஹா ஏவ ஹவிர்பு³ஜம் ॥ 56

(ப-ரை) ஸஃ = அந்த திலீப மன்னன்; ஸாயந்தநஸ்ய = மாலை வேளையிற் பிறந்த; விதே³ஃ = ஜபம் ஹோமம் முதலிய அனுஷ்டானங்களின்; அந்தே¹ = முடிவில்; அருந்த்யா = அருந்ததிதேவியால்; அந்வாஸிதம் = உபாசனை செய்யப்பட்ட; தபோநிதி³ம் = வசிட்டரை ஸ்வாஹா = ஸ்வாஹாதேவியால்; ஹவிர்பு³ஜமிவ = வேள்விக்கு முதல்வனான அக்னியைப் போன்று; த³த³ர்ஶ = நோக்கினான்.

(க-ரை) மாலைப் பொழுது ஜபம் ஓமம் முதலிய அனுட்டானங்களை முடித்துக் கொண்டுள்ளவரும், ஸ்வாஹாதேவி அக்கினியைப் பூசிப்பது போன்று; அருந்ததி தேவியால் பூசிக்கப்பட்டவரும், தவ முனிவர்களுள் முதன்மையானவரும் ஆகிய வசிட்டரை திலீப மன்னன் கண்டான். (விரியுவமை மற்றும் நிகழ்வினவிற்சியணி)

சு॥ தயோர் ஜக்³ரிஹதுஃ பாதெ³ள ராஜா ராஜ்ஞீச மாக³தீ³ ।
தௌகு³ரூர் கு³ருபத்நீச ப்ரீதயா ப்ரதிந நந்த³து ॥ 57

(ப-ரை) மாக³தீ³ = மகத நாட்டரச புதல்வியான; ராஜ்ஞீ = சுதக்ஷிணா தேவி; ராஜச = திலீப மன்னனை; தயோஃ = அந்த அருந்ததி வசிட்டர்களின்; பாதௌ = அடிகள்; ஜக்³ரிஹதுஃ = பற்றினார்கள்; கு³ருபத்நீ = அருந்ததி தேவியாரும்; கு³ருஶ்ச = ஆசானாகிய வசிட்டரும்; தௌ = அந்த சுதக்ஷிணா திலீபர்களை; ப்ரீத்யா = அன்போடு; ப்ரதிநநந்த³து = ஆசிகளுடன் மகிழ்வித்தனர்.

(க-ரை) மகதநாட்டரச புதல்வியாகிய சுதக்ஷிணா தேவியும், திலீப மன்னனும், குருவான வசிட்டருக்கும் குருபத்தினியாகிய அருந்ததியின் அடிகளுக்கு வணங்கினார்கள். அவர்கள் மகிழ்ந்த

வர்களாய் சுத²க்ஷிணா திலீபர்களுக்கு ஆசி கூறினார்கள் (நிகழ் வினவிற்சியணி)

சு॥ தமாதி²த்ய க்ரியாமாந்த ரத¹க்ஷோப³ பரிஶ்ரமம் ।
பப்ரச்ச¹ குமலம் ராஜ்யே ராஜ்யா ஶ்ரம முநிம்முநிঃ ॥ 58

(ப-ரை) முநிঃ = வசிட்ட முனிவர்; அதி¹த்யக்ரியா = விருந்துப சாரஞ்செய்தல்; மாந்த = போக்கப்பட்ட; ரத¹ = தேரின்; க்ஷோப³ = அசைவினாலுண்டாகிய; பரிஶ்ரமம் = சோர்வுற்ற; ராஜ்ய = நாடு என்னும்; ஆஶ்ரமம் = ஆச்சிரமத்தில்; முநிம் = முனிவரான; தம் = அத்திலீப மன்னனை; ராஜ்யே = நாட்டில்; குமலம் = நலன்களை; பப்ரச்ச¹ = கேட்டார்.

(க-ரை) வசிட்டரால் செய்யப்பட்ட உபசாரங்களால் தேரில் வந்த சோர்வு நீங்கியவனும், தனது நாடென்னும் ஆச்சிரமத்தில் முனிவரைப் போன்றுள்ளவனும் ஆகிய திலீப மன்னனை, அவர் தம் அமைச்சு நட்பு அரசு முதலியவர்களின் நலனைப் பற்றி விசாரித்தார். (நிகழ்வினவிற்சியணி)

சு॥ அத¹ாத¹ர்வநிதே³ஸ் தஸ்ய விஜிதாரிபுரঃ புரঃ ।
அர்த்¹யா மர்த¹பதிர் வாசமாத³தே² வத³தாம் வரঃ ॥ 59

(ப-ரை) அத¹ = பிறகு; விஜிதா = வெல்லப்பட்ட; அரிபுரঃ = எதிரிகளின் பட்டணங்களை உடையதும்; வத³தாம்வரঃ = பேச்சுத் திறம் படைத்தவர்களில் முதல்வனும்; அர்த¹பதிঃ = பொருள்களுக் கெல்லாம் அதிபதியாகிய திலீபமன்னன்; அத¹ர்வநிதே² = அதர் வண வேதத்திற்கு முதல்வராகிய; தஸ்ய = அந்த வசிட்டரின்; புரঃ = எதிரில்; அர்த்¹யாம் = பொருளடங்கிய; வாசம் வாக்குகளை; ஆத³தே² = பெற்றான்.

(க-ரை) பகைவர் நாடுகளை வென்று, பெரும்பொருளாள னாகியவனும், பேச்சில் திறம் மிக்கவனும், ஆகிய திலீப மன்னன், விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் அதர்வண வேதத்தில் நிபுணரா கிய வசிட்ட மாமுனிவருக்கெதிரில் பிரயோஜனமுள்ள செய்தியைச் செப்பத் தொடங்கினான். (முறையிற்படர்ச்சியணி)

சு॥ உபபந்நம் நநுமிவம் ஸப்தஸ்யங்கேஷ்யஸ்யமே ।
தை³வீநாம மாநுஷீணாஞ் சப்ரதிகர்தா த்வமாபத³ாம் ॥ 60

(ப-ரை) (ஹேகு²ரோ! = ஆசிரியரான வசிட்ட முனிவரே!); சப்தம் = ஏழாகிய; அங்கே²ஷு = என்னுடைய அமைச்சு முதலானோர்களுடையதும்; குஶலம் = ஆகிய நலன்களும்; உபபந்நம் நநு = தகுதியாகவே உள்ளன; யஸ்யமே = எந்த என்னுடைய; தை²வீநாம் = தேவர்களிடமிருந்தும்; மானுஷீணாம் = மனிதர்களிடமிருந்தும்; ஆபத³ாம் = வருந்துன்பங்களை; (அதாவது = கருப்பு, திருடு முதலிய அச்சங்கள்); த்வம் = நீங்கள்; ப்ரதிகர்தா = போகக வல்லீர்கள்.

(க-ரை) குருநாதரே! எனது அரசின் ஏழு அங்கங்களும் நன்கு உள்ளன. நானும் நலமாகவே உள்ளேன். ஆக எல்லாரும் நலமே. ஒருவேளை தெய்வீகமாய் நடக்கும் அக்னிபயம், நீர், காற்று, நோய் கருப்பு முதலிய ஐவகையினுள் ஏதேனும்;மானிடர் சார்பான ஆயுதம் திருடர், பகைவர், பேரரசர்கள், அரசின் பகைவர்கள் ஆகிய ஐந்தில் ஏதேனும் சரி ஏற்படுமாகில் அதனை நீக்க வல்லவராகிய தாங்கள் இருக்கவே இருக்கிறீர்கள் (இன்மைனவிற்சியணி மற்றும், பெருமையணி)

சு॥ தவமந்த்ர க்ரிதோ மத் த்ரைர்தூ²ராத் ப்ரஶமிதாரிபி³ः ।
ப்ரத்யாதி²ஶ்யந்த இவமே த்ரிஷ்டலக்ஷ்யபி³த³ஶ்ஶரா: ॥ 61

(ப-ரை) தூராத் = அப்புறமிருந்தே; ப்ரஶமித = அடக்கப்பட்ட; அரிபி³ः = பகைவர்கள் உள்ள; மந்த்ரக்ரித = மந்திரத்தாலாய; தவ = உம்முடைய; மந்த்ரை = மந்திரங்களால்; த்²ரிஷ்ட = காணப்படும்; லக்ஷ்ய = குறிக்கோள்களை; பி³த³ = பிளக்கவல்ல; மே = என்னுடைய; ஶரா: = அம்புகள்; ப்ரத்யாதி²ஶ்யந்த இவ = மறுக்கப்படுவன போன்றுள்ளன.

(க-ரை) மந்திரங்களில் வல்லவராகிய தங்கள் மந்திரங்களோ பகைவர்களை அப்புறமிருந்தபடியே கண்ணுக்குக் காணாமலேயே விலக்குகின்றன. எனது அம்புகள் என்றாலோ கண்ணுக்குத் தெரியும்படியாக மட்டுமே குறியிற்படுவனவாயுள்ளன. (ஏதுவணி)

சு॥ தெய்வீகமாய் வரும் துன்பந் துடைக்கும் வழிகள்பற்றி கூறப்படுகிறது.

சு॥ ஹவிராவர்ஜிதம் ஹோதஸ் த்வயா விதி³வ த³க்²நிஷு ।
வ்ரிஷ்யர் ப³வதிஸஸ்யாநாம் அவக்²ரஹ விஶோஷிணாம் ॥ 62

(ப-ரை) ஹே,ஹோத:! = வேட்கும் திறனுள்ள ஐயனே! த்வயா = உம்மால்; விதி⁸வத் = முறைப்படி; அக்னிஷு = வன்னிகளில்; ஆவர்ஜிதம் = வைக்கப்பட்ட; ஹவி: = நெய் முதலிய அவிகள்; அவக்ரஹ = மழையின்மையால்; விஶோஷிணாம் = வாடுகின்ற; ஸஸ்யாநாம் = பயிர்கட்கு; வ்ரிஷ்டி = மழைஉருவமாய்; ப⁸வதி = ஆகின்றன.

(க-ரை) வேள்விகட்குத் தலைவராகிய தங்களால் முறைப்படி வன்னிகளில் வைக்கப்படும் அவிகளாவன மழையின்றி வாடும் பயிர்களுக்கு மழையை பொழியச் செய்கின்றன. (பெருமையணி)

சு॥ புருஷாயுஷ ஜீவிங்யோ நிராதங்கா நிரீதய: ।
யங்மதீ²யா: ப்ரஜாஸ் தஸ்ய ஹேதுஸ்த்வத் ப்ரஹ்மவர்சஸம் ॥ 63

(ப-ரை) மதீய²ா: = என்னைச் சார்ந்தவர்களாய்; ப்ரஜா: = மக்கள்; புருஷாயுஷ = நூறாண்டுகள்; ஜீவிந்ய = வாழ்கின்றவர்கள்; நிராதங்கா: = நீங்கிய அச்சமுடையவர்; நிரீதய: = நீக்கப்பட்ட துன்பமுடையவர்கள்; இதியத் = இவ்வாறெனும் எது உடையதோ; தஸ்ய = அந்த எல்லாவற்றுக்கும்; த்வத் = உமது; ப்²ரஹ்மவர்சஸ: = பிரம்ம தேஜஸ் என்பதே; ஹேது: = காரணம்.

(க-ரை) மக்கள் நூறாண்டுகள் வாழ்வோர்களாயினும் அவர்கள் தங்களுடைய நல்வினைகளாகிய ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் போன்றவற்றால் நோயற்றவர்களாகவும், பெருமழை, மழையின்மை, வெட்டுக்கிளிகளால் உண்டாகும் உபாலதகள் போன்றவையும் இல்லாதவர்களாக உள்ளனர். (பெருமையணி)

சு॥ த்வயைவம் சிந்த்யமாநஸ்ய கு²ருணா ப்²ரஹ்மயோநிநா ।
ஸாநுப²ந்த³ா: கத¹ம்நஸ்யு: ஸம்பதே²ாமே நிராபத²: ॥ 64

(ப-ரை) ப்ரஹ்மயோநிந = பிரம்ம தேவனே காரணமாக உள்ள; கு²ருணா = ஆசானாகிய; த்வயா = உம்மால்; ஏவம் = இவ்விதமாய்; சிந்த்யமானஸ்ய = எண்ணப்படுகின்றவன் ஆதலால்; நிராப²த: = விபத்துகளற்ற; மே = எனது; ஸம்பத²: = செல்வங்கள்; ஸாநுப²ந்த³ா: = இணைபிரியாமல் உள்ளவனாக; கத¹ம் = ஏன்; நஸ்யு: = இருக்கமாட்டா?

(க-ரை) இப்படிப்பட்ட தன்மைகளடங்கிய பிரம்மவம்சத்தில் பிறந்த தாங்கள் இருக்கும்போது; என்னுடைய செல்வங்கள் விபத்து களுக்கு உள்ளாகமலும், சிதறாமலும் ஏன் இருக்க முடியாது? (புனை வுளிவிளைவணி)

அவ॥ தான் வந்த வேலையைப் பற்றி கூறுகிறான்.

சு॥ கிந்துவத்³வாம் தவைததஸ்யா மத்²ரிஷ்ட ஸத்ரிஶ ப்ரஜம் ।
நமாமவதி ஸத்²வீபா ரத்நஸூ ரபி மேதி²நீ ॥ 65

(ப-ரை) கிந்து = மேலும் என்னவெனில்; தவ = உமக்கு; வத்³வாம் = மருமகளாகிய; ஏதஸ்யாம் = இந்த சுதக்ஷிணையில்; அத்²ரிஷ்ட = காணப்படாத; ஸத்ரிஶம் = அனுகூலமான; ப்ரஜம் = மக்களுடைய; மாம் = என்னை; ஸத்²வீபா = தீவுகளுடன் கூடிய; ரத்ந = மணிகளை; ஸூரபி = பிறக்கச் செய்யவல்லதாயிருந்தும்; மேதி²நீ = நிலம்; நாவதி = மகிழ்வுராது.

(க-ரை) எனினும் தீவுகளுடன் கூடிய இந்நிலம் ரத்தினங்களை கொடுக்கவல்லதாயினும், தங்களின் மருமகளாகிய இந்த சுதக்ஷிணா தேவி வயிற்றில் எனக்கு நிகரான மகனென்னும் சிறந்த ரத்தினம் பிறவாமலிருப்பதால் என்னை மகிழ்விப்பதில்லை. (பிரிதின் குணம் பெறாமையணி மற்றும் புகழ்பொருளுவமையணி)

அவ॥ இதுவும் மதுபற்றியே கூறுவதாம்.

சு॥ நூநம் மத்தஃபரம்வம்ஶ்யா பிண்ட²விச்சே¹த² த²ர்ஶிநஃ ।
நப்ரகாம பு³ஜ ஶ்ராத்²தே³ஸ்வத³ா ஸங்க்²ரஹதத்பராஃ ॥ 66

(ப-ரை) மத்தஃ = என்னைவிட; பரம் = பின்னால்; பிண்டா = பிண்டதானத்தின்; விச்சே¹த = சிதைவு; தர்ஶிதஃ = ஊகிக்கும்; வம்ஶ்யா = குடியிற் பிறந்ததென்புலத்தார்; ஸ்வத¹ா = அவர்களின் உண்ணுதலின்; ஸங்க்²ரஹ = சேமிப்பதில்; தத்பராஸ் ஸந்தஃ = ஆசைக் கொண்டவர்களாய்; ஶ்ராத்²தே³ = திவசங்களில்; ப்ரகாம = நிறையும்படி; பு³ஜஃ = சாப்பிடுகிறவர்கள்; நப³வந்தி = ஆகமாட்டார்கள்; நூநம் = இது உண்மை.

(க-ரை) என்னையடுத்து, பிண்டமளிப்பதின் நாசத்தை எண்ணும் பிதருக்கள், தமது உண்டினை சேமிப்பதில் விருப்பமுள்ள

வர்களாய் திவசகாலங்களில் திருப்தியாக உண்ணக்கூடியவர்கள் ஆகமாட்டார்கள். (நிகழ்வினவிற்சியணி)

சு॥ மத்பரம் து²ர்லப³ம் மத்வா நூக மாவர்ஜிதம் மயா ।
பயஃ பூர்வைஸ் ஸநிஶ்வாஸைஃ க²வோஷ்ண முபபு³ஜ்யதே ॥ 67

(ப-ரை) மத் = எனக்கு; அநந்தரம் = பிறகு; துர்லப³ம் = அடையவரிதாயதாக; மத்வா = எண்ணி; மயா = என்னால்; ஆவர்ஜிதம் = கொடுக்கப்பட்ட; பயஃ = தண்ணீர்; பூர்வைஃ = முன்இருந்த பிதர்தேவதைகளால்; ஸ்வநிஶ்வாஸைஃ = தங்களின் விடும் மூச்சு (காற்று)களால்; க²வோஷ்ணம் = சற்று வெப்பமுள்ளது போன்று; உப³புஜ்யதே = புசித்தல் செய்யப்படும்; நூநம் = (இது) உண்மை.

(க-ரை) என்னுடைய பிதர்தேவதைகள் எனக்குப் பின் எள்ளும் தண்ணீரும் விடுவோர்கள் இல்லையென்று வருத்தப்படுவார்கள். அதனால் அவர்களுக்கு நான் விடும் (திவசத்து) தண்ணீர் சற்று வெப்பமாகும். அந்த தண்ணீரை அவர்கள் பெறுவார்களா? (நிகழ்வினவிற்சியணி)

சு॥ ஸோஹமிஜ்யா விஶுத்³த⁴ாத்மா ப்ரஜாலோப நிமீலிதஃ ।
ப்ரகாஶஶ்சாப்ரகாஶஶ்ச லோகா லோக இவாசலஃ ॥ 68

(ப-ரை) இஜ்யா = வேள்வியால்; விஶுத்²த³ = தூய்மையான; ஆத்மா = ஞானமுள்ளவனும்; ப்ரஜா = மக்களின்; லோப = இல்லாஸமயாலும்; நிமீலிதஃ = ஏற்பட்ட துன்பத்தினாலுண்டான; ஸோஹம் = அந்த நான்; லோகா லோக அசலம் = லோகாலோகமென்னும் மலைப் போல்; ப்ரகாஶஶ்ச = பிரகாசிப்பவனாகவும்; அப்ரகாஶஶ்ச = பிரகாசிப்பவனாக இல்லாதவனும்; அஸ்மி = ஆகின்றேன்.

(க-ரை) நான் வேட்டல் முதலான தொழில்களால் தேவர்களின் கடன் தீர்ப்பவனாய் இது விஷயத்தில் பரிசுத்தனாக, பிரகாசமுள்ளவனாயிருப்பினும் மக்கட்பேறின்மையால், பிதருக்களின் கடன் தீர்க்க மாட்டாதவனாக, அந்த விஷயத்தில் ஒளியற்றவனாக இருந்து லோகாலோகமென்னும் மலைபோல் இருந்து வருகிறேன். (விரியுவமை மற்றும் நிகழ்வினவிற்சியணி)

அவ॥ தவம், தானம் முதலிய செல்வங்கள் இருந்தும் மக்கட்பேறின்மைக்கு மூலம் என்னவென்று வினவுகிறான்.

ா॥ லோகாந்தர ஸுக¹ம் புண்யம் தபோதா²ந ஸமுத்²ப⁴வம் ।
ஸந்ததி: ஶுத்³த⁴³ வம்ஶ்யாது பரத்ரேஹச ஶர்மணே ॥ 69

(ப-ரை) தபோதாந = தவமும், ஈகையும், ஸமுத்²ப⁴வம் = காரணங்களாகவுள்ள, புண்யம் = நல்வினையானது, லோகாந்தர = பிற உலகில், ஸுக¹ம் = சுகத்தை தரவல்லது, ஶுத்³த⁴³வம்ஶ்யா = தூய்மையான வம்சத்தில் பிறந்த, ஸந்ததிஸ்து = மக்களாயின், பரத்ர = பரலோகத்திலும், இஹச = இவ்வுலகிலும், ஶர்மணே = சுதந்திரத்திற்கே ஆம்.

(க-ரை) தவம், ஈதல் போன்ற புண்ணிய காரியங்கள் பர லோக சுகங்கள் மட்டும் தரவல்லவையாக உள்ளன. உயர்குடியில் பிறந்த மக்களோ இகபர சுகங்களைத் தர வல்லவர்களாக உள்ளனர். (மறைப்பிறையணி)

சு॥ தயாஹீநம் வித³ாதர் மாம் கத¹ம் பஶ்யந் நதூ²யஸே ।
ஸிக்தம் ஸ்வய மிவஸ்நேஹாத்²வந்த்³ய மாஶ்ரமவ்ரிக்ஷகம் ॥ 70

(ப-ரை) ஹேவிதா³தஃ! = ஆக்கல் வல்ல ஓ வசிட்ட முனிவரே! தயா = அந்த மக்கள் . ஹீநம் = இல்லாதவனாகிய, மாம் = என்னை, ஸ்நேஹாத் = அன்பினால், ஸ்வயம் = தனக்குத்தானே, ஸிக்தம் = நனைந்த, வந்த்³யம் = பலனற்ற, ஆஶ்ரம = ஆச்சிரமத்திலிருக்கும், வ்ரிக்ஷமிவ = சிறுமரம் போன்று, பஶ்யந் = பார்த்துக் கொண்டுள்ள வராய்; கத¹ம் = எவ்வாறு, நதூ²யஸே = வருந்தாமல் இருக்கிறீர்கள்.

(க-ரை) தாங்கள் ஆக்கவல்லதோர் ஆக்கம் பெற்றிருந்தும், என்னிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்தும், தங்களது ஆச்சிரமத் தில் தாங்கள் நீரூற்றி வளர்த்துவரும் செடிகளில் ஏதேனும் மலடா யுள்ள சிறுசெடி போன்று, மக்கட்பேறற்ற என்னைக் கண்டு ஏன் வருத்தப்பட மாட்டீர்கள்? (எடுத்துக்காட்டுவமையணி]

சு॥ அஸஹ்ய பீட³ம் ப³க³வந் ரிணமந்த்ய மவோஹிமே ।
அருந்துத³ மிவாலாந மநிர்வாணஸ்ய த³ந்திநஃ ॥ 71

(ப-ரை) ஹேப³க³வந் = ஓ பகவானே! மே = எனது, அந்த்யம் = கடைசியில் பிறந்த, ரிணம் = பிதருக்கள் கடனை, அநிர்வாணஸ்ய = குளியலற்ற, த³ந்திநஃ = யானைப் போன்று, அருந்துத³ம் = மருமத்தை உடைக்கக் கூடிய, அலோநமிவ = யானையைக்

கட்டும் கம்பம் போன்று, அஸஹ்ய = பொருக்கமாட்டாத, பீட²ம் = வருத்தமுற்றதாக, அவோஹி = அறிவீராக.

(க-ர) ஓ வசிட்டமாமுனிவரே! எனது தென்புலத்தாரின் கடன்களை குளியலற்ற யானையின் மருமத்தை உடைக்கும் கம்பம் போன்றது என்று அறிவீராக (புகழ்பொருளுவமையணி)

சு ॥ தஸ்மாந் முச்யே யத²ா தாத ஸம்வித²ாதும் த்வமர்ஹஸி ।
இக்ஷ்வாகூணாம்து³ ராபேऽர்தே² த்வத³தீ³நாஹிஸித்³த³யம்॥ 72

(ப-ரை) ஹேதாத = தந்தையே! தஸ்மாத் = அந்த பிதருக்களின் கடனால்; யதா¹ = எவ்விதம்; முச்யே = விடுபடுவேனோ; தத¹ா = அது போன்று; ஸம்வித³ாதும் = செய்வதற்கு; த்வம் = நீவிர்; அர்ஹஸி = தகுதியுள்ளவர்; ஹி = எக்காரணத்தால்; இக்ஷ்வாகூணாம் = இக்ஷ்வாகு நாட்டரசர்களின்; து³ராபே = அடைய முடியாத; அர்தே¹ = விருப்பத்தில், ஸித்³த³யஃ = வெற்றி கண்ட, த்வத் = உமக்கு, அதீ³நாஃ = அடங்கியவை.

(க-ரை) தந்தையே! இக்ஷ்வாகு வம்சத்தினரின் அடைய முடியாத காரியங்களை அடையச் செய்யத் தாங்கள் தகுதியுள்ள வர்கள். ஆதலால், எனக்கு, பிதருக்களின் கடன்தீர ஏதேனும் நல்லதோர் உபாயத்தை செய்யுமாறு வேண்டுகிறேன். (வேண்டலனி)

சு ॥ இதி விஜ்ஞாபிதோ ராஜ்ஞா த்³யாநஸ்தி¹மித லோசநஃ।
க்ஷணமாத்ர ரிஷிஸ் தஸ்தௌ ஸுப்தமீந இவஹ்ரத³ஃ॥ 73

(ப-ரை) இதி = இவ்விதமாக, ராஜா = திலீப மன்னனால், விஜ்ஞாபிதஃ = விண்ணப்பிக்கப் பட்ட, ரிஷிஃ = வசிட்டர், த்³யாநஃ = தியானத்தால், ஸ்தி¹மித = அசைவற்ற, லோசநஸ்ஸந் = கண்களுடையவராய், க்ஷணமாத்ரம் = நொடி நேரத்தில், ஸுப்த = படுத்துள்ள, மீநஃ = மீன்களையுடைய, ஹ்ரத³ஃ இவ = மடுவைப் போன்று, தஸ்தௌ = இருந்தது.

(க-ரை) வசிட்டர் மனதை ஒருங்கு படுத்தி, தமது ஞானத்தால், திலீபனுக்கு மக்கட்பேறில்லாமைக்குக் காரணம் அறிந்தவராய், பிறகு திலீப் மன்னனை நோக்கி இவ்வாறு கூறினார் (புகழ்பொருளுவமையணி)

சு ॥ புரா ஶக்ரமுமஸ்த¹ாய தவோர்வீம் ப்ரதியா ஸ்வதஃ।
ஆஸீத் கல்பதருச்ச¹ாயா மாஶ்ரிதா ஸுரபி⁴ஃ பதி¹ஃ॥ 74

(ப-ரை) புரா = முன்பொருபோது, ஶக்ரம் = இந்திரனை, உபாஸ்த¹ாய = சேவித்து, உர்வீம் = பூமிக்கு, யாஶ்யதஃ = திரும்பிவரும் போது, தவ = உன்னுடை, பதி¹ = வழியில், ஸுரபி⁴ஃ = காமதே⁴னு என்னும் தேவப்பசு, கல்பதரு = கல்பக விருட்சத்தின், ச¹ாயாத் = நிழலில், ஆஶ்ரிதாம் = அடைந்ததாய் ஆஸீத் = இருந்தது.

(க-ரை) முன்பு நீ தேவேந்திரனைத் தெரிசித்து திரும்பவும் பூமிக்கு வரும்போது உன்னுடைய வழியில் காமதேனுவானது கற்பக விருட்சத்தின் நிழலில் இருந்தது. (நிகழ்வினவிறிசியனி)

அ ॥ அங்கே என்ன நடந்தது என்பதைச் சொல்கிறார்.

சு ॥ த⁴ர்மலோப ப⁴யாத்²ராஜ்ஞீ ம்ருது ஸ்நாதா மநுஸ்மரந் ।
ப்ரத²க்ஷிண க்ரியார் ஹாயாம் தஸ்யாம் த்வம் ஸாது⁴ நாசர॥ 75

(ப-ரை) ருதுஸ்நாதம் = மாதவிலக்கால் மூழ்கிய, ராஜ்ஞீம் = சுதக்ஷிணா தேவியை, த⁴ர்ம = ருது காலத்தால் ஏற்பட்ட தருமத்தின், லோப = நசித்த, ப⁴யாத் = அந்த அச்சத்தால், அநுஸ்மரஸ்ஸந் = தியானம் செய்பவனாய், ப்ரத²க்ஷிண = வலம்வரும், க்ரியா = செய்கைக்கு, அர்ஹாயாம் = தகுதியுடைய, தஸ்யாம் = அந்த காமதேனுவிடம், த்வம் = நீ, ஸாது⁴ஃ = வலம் வருதல் போன்ற நற்செய்கை; ந ஆசர = செய்யாமற் போய்விட்டாய்.

(க-ரை) அப்போது நீ பூப்படைந்து தூய்மையடைந்த உனது மனைவியைச் சேராவிடில் சிசுவைக் கொன்ற பாவம் நேரிடும் என்று நினைத்துக்கொண்டு, வலம்வந்து வணங்கத்தக்க அந்த காம தேனுவுக்கு நீ அவ்வாறு செய்யத் தவறிவிட்டாய் (நிகழ் வினவிற்சியணி)

சு ॥ அவஜாநாஸி மாம் யஸ்மாத் ததஸ்தே ந ப⁴விஷ்யதி।
மத்ப்ரஸூதி மநாராத்⁴ய ப்ரஜேதித்வாம் ஶபாபஸா ॥ 76

(ப-ரை) யஸ்மாத் = எக்காரணத்தால்; மாம் = என்னை; அவஜாநாஸி = மதிக்கவில்லையோ; ததஃ = அக்காரணத்தால்; மத்ப்ரஸூதிம் = எனது வம்சத்தை (கன்றையும்); அநாராத்⁴ய = சேவிக்

க்ர்மலேயே; தே = உனக்கு; ப்ரஜா = சந்ததி; நப[3]விஷ்யதி = உண்டாகப் போவதில்லை; இதி = இவ்வாறு (என்று); ஸா = அந்த (காமதேனு); த்வாம் = உன்னை; ஶஶாப = சபித்துவிட்டது.

(க-ரை) என்னை நீ மதியாததால் என்னுடைய வம்சத்தை நீ தொழுதேற்றாமல் உனக்கு மகப்பேறு உண்டாகாது என்று அக்காமதேனு உன்னை சபித்துவிட்டது. (வஞ்சக ஒழிப்பணி)

சு॥ ஸ ஶாபோ நத்வயா ராஜங்நசஸாரதி[3] நா:ஶ்ருத: ।
நத[2]த்யாகாஶ க[2]ங்க[2]யாஸ் ஸ்ரோதஸ் யுத[2]த[2]ாம தி[2]க்[2]க[2]ஜே ॥ 77

(ப-ரை) உத்[2]த[2]ாம = மதங்கொண்ட; தி[2]க்[2]க[2]ஜே = திசை வேழம்; ஆகாஶக[2]ங்க[2]யா: = தெய்வ கெங்கையின்; ஸ்ரோதஸி = வெள்ளத்தில்; நத[2]திஸதி = அரவம் செய்துகொண்டிருக்கையில்; ஹே ராஜன் = ஓ திலீப மன்னா! ஸ: = அந்த; ஶாப: = சாபமானது; த்வயா = உன்னால்; ந ஶ்ருத: = கேட்கப்படவில்லை; ஸாரதி[1]நாச = ஓட்டுநராலும்; ந ஶ்ருத: = கேட்கப்படவில்லை.

(க-ரை) மதயானை ஆகாச கெங்கையில் பிளிறிக்கொண்டிருந்ததால், அப்போது நீயும், உனது ஓட்டுநரும், அவ்வோசையில் அதன் சாபம் கேட்கவில்லை. (ஒன்றற்கொன்றுதவியணி)

அவ॥ அஃதவ்வாறாக விருக்க, தற்போது அதன் விளைவு என்னவென்று நவில்கிறார்.

சு ॥ ஈப்ஸிதம் தத[2]வஜ்ஞாநாத் வித்[2]தி[3]ஸார்க[3]ள மாத்மந: ।
பிரதிப[2]த்[3]நாதி ஹி ஶ்ரேய: பூஜ்ய பூஜாவ்யதி க்ரம: ॥ 78

(ப-ரை) தத் = அக்காமதேனுவின்; அவஜ்ஞாநத் = அவமானத்தால்; ஆத்மந: = உனது; ஈப்ஸிதம் = விருப்பம்; ஸார்க[3]ளம் = தடையுடன் கூடியதாக; வித்[2]தி[3] = அறிவாயாக; தத[1]ாஹி = அப்படியே; பூஜ்ய = தொழத் தக்கவர்களின்; பூஜா = பூசையின்; வ்யதிக்ரம: = மீறுதல்; ஶ்ரேய: = மேன்மையை; ப்ரதிப[2]த்[3]நாதி = தடை செய்கிறது.

(க-ரை) அத்தெய்வப்பசுவின் சாபத்தால் உனது விருப்பத்திற்குத் தடை உண்டாயிற்று என அறிவாயாக. தொழத்தக்கவர்களைத் தொழாதிருப்பது மேன்மை பெறத் தடையாகுமன்றோ? (நிகழ்வினவிற்சி மற்றும் இன்மைநவிற்சியணி)

அவ || ஆதலால் அங்கு சென்று அதை தொழுது அதன் கண்ணோட்டம் பெறுதலே வழியாகுமென்று செய்யத்தக்கதை நவில்கிறார்.

சு || ஹவிஷே தீ²ர்க⁸ ஸத்ரஸ்யஸா சேத²ா நீம்ப்ரசேதஸஃ।
பு⁸ஜங்க² பிஹித த்²வாரம் பாதாள மதி⁸திஷ்ட¹தி ॥ 79

(ப-ரை) ஸாச = அந்த தெய்வப்பசு; இத²ாநீம் = இப்போது; தீ²ர்க⁸ = நெடுநாட்கள் செய்துவரும்; ஸத்ரஸ்ய = வேள்வியுடைய; ப்ரசேதஸஃ = வருணனால்; ஹவிஸே = செய்யும் அவிகளுக்காக; பு⁸ஜங்க¹ = பாம்புகளால்; பிஹித = மறைக்கப்பட்ட; த்²வாரம் = வாயிலுள்ளபாதாளம் = பாதாள உலகை; அதி⁸திஷ்ட¹தி = கவர்ந்துள்ளது.

(க-ரை) அந்த காமதேனுவானது தற்போது பல பாம்புகளால் சூழப்பட்ட வாயிலையுடைய பாதாள உலகத்தில் வருணன் செய் வேள்விக்கு வேண்டிய நெய் முதலிய அவிகளைத் தந்துகொண்டு இருக்கிறது. (நிகழ்வினவிற்சியணி)

அவ || இப்போது என் செய்ய வேண்டுமெனக் கூறுகிறார்

சு || ஸுதாம் ததீ²யாம் ஸுரபே⁸ஃ க்ரித்வா ப்ரதிநிதி⁸ம் ஶுசிஃ।
ஆராத⁸யஸ் ஸபத்நீகஃ ப்ரீதா காமதுகா² ஹிஸா ॥ 80

(ப-ரை) ததீ⁸யாம் = அந்தக் காமதேனுவைச் சார்ந்த; ஸுதாம் = மகவை; ஸுரபே⁸ஃ = காமதேனுவுக்கு; ப்ரதி நிதி⁸ம் = பதிலாக; க்ரித்வா = செய்துகொண்டு; ஶுசிஸ்ஸஃ = தூய்மையான மனங்கொண்டவனாய்; ஸபத்நீகஃ = மனைவியுடன் கூடி; ஆராத⁸ய = சேவிப்பாயாக; ஹி = எக்காரணத்தால்; ஸா = அந்த மகள், (கன்றுக்குட்டி) ப்ரீதாஸதி = மகிழ்ச்சி கொண்ட தாய்; காம = நினைத்தவற்றை; து²க⁸ = கொடுக்கவல்லது.

அவி = வேட்கும்போது அக்னியில் சொரியும் நெய், சோறு போன்ற பொருட்கள்.

(க-ரை) நீ தூய்மையான மனமுடையவனாய், உனது மனைவியுடன் கூடி அக்காமதேனுவின் கன்றாகிய கிடாரியை அதற்குப் பிரதிநிதியாக ஏற்றுக்கொண்டு, பூசித்து வருவாயாக. அதனால், மகிழும் தேனுவானது உனது விருப்பங்களை நிறைவேற்றும். (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ இதி வாதி²ந ஏவாஸ்ய ஹோது ராஹுதி ஸாத³நம் ।
அநிந்த்³யா நந்தி³நீ நாம தே³நு ராவவ்ரிதே வநாத் ॥ 81

(ப-ரை) இதி = இவ்வாறு; வாதி²ந ஏவ = சொல்லிக்கொண்டிருந்த; ஹோது = வேள்வியில் வல்லவரான; அஸ்ய = இந்த வாசிட்டருடைய; ஆஹுதி = அவிகட்கு; ஸாத³நம் = கருவியாகிய; நந்தி³நீநாம = நந்தினி என்னும் சிறப்புப்பெயருடைய; அநிந்த்³யா = மேன்மையுற்ற; தே³நுঃ = பசு; வநாத் = காட்டிலிருந்து; ஆவவ்ரிதே = வந்தது.

(க-ரை) இவ்வாறு வசிட்டர் விளக்கிக்கொண்டிருக்கையில், அவர் வேள்விக்கு உதவிவந்த காமதேனுவின் கன்றாகிய நந்தினி என்னும் காராம்பசு ரத்தினவனத்திலிருந்து திரும்பிவந்து சேர்ந்தது. (நிகழ்வினவிற்சியணி)

அவ ॥ காராம்பசுவின் புகழுரை

சு ॥ லலாடோத³ய மாபு⁴க்³நம் பல்லவஸ்நி³க்த³ பாடலா ।
பி³ப்⁴ரதீ ஶ்வேத ரோமாங்கம் ஸந்த்⁴யேவ ஶஶிநம் நவம் ॥ 82

(ப-ரை) பல்லவ = தளிர்களைப்போன்று; நெற்றியில்; லலாட = உதயம் தோன்றியுள்ள; அபு⁴க்³நம் = சற்றுவளைந்துள்ள; ஸ்வேத வெண்மையான; ரோம = உரோமமெனும்; அங்கம் = மச்சத்தை; பி³ப்⁴ரதீ = பெற்றுள்ளது ஆதலால்; நவம் = புதிதான; ஶஶிநம் = மதியைப் போல்; பி³ப்⁴ரதீ = தாங்கும்; ஸந்த்⁴யேவ ஸ்¹திதா = சாயங்கால வேளையோ என்பது போன்றுள்ள; தே³நுঃ = நந்தினி காராம்பசு; ஆவிவ்ரிதே = வந்தது.

(க-ரை) செந்நிறமான நந்தினி காராம்பசுவின் நெற்றியில் வெண்மையான உரோமங்கள் உள்ளன. அதனால், அது காண்பதற்கு இளமதியைத் தாங்கிய மாலைப் பொழுதோவென தோன்றியது. (தற்குறிப்பணி)

சு ॥ பு⁴வம் கோஷ்ணே நகுண்டோ²த்³நீ மேத்⁴யே நாவ ப்⁴ரிதா¹த²பி।
ப்ரஸ்ரவே ணாபி⁴ வர்ஷந்தீ வத்ஸலோகப்ரவர்திநா 83

(ப-ரை) கோஷ்ணே = சற்று வெப்பமுடையதும்; அவப்⁴ரிதா²பி = அவப்ரிதமெனும் குளிப்பாட்டைவிட; மேத்⁴யேந = பரிசுத்தமானதும்; வத்ஸ = கன்றினை; ஆலோக = பார்ப்பதனால்;

ப்ரவர்திநா = நடந்துவரும்; ப்ரஸ்ரவேண = பால் பொழிதலால்; பு³வநம் = பூமியை; அபி⁴வர்ஷந்தி = நனைத்துவரும்; குண்ட² உத்⁴நீ = பானைப்போன்ற மடியை உடையதுமான; தே⁴நுஃ = நந்தினி என்னும் காராம்பசு; ஆவவ்ரிதே = வந்தது.

(க-ரை) பானையைப் போன்ற மடியை உடைய அந்த நந்தினி எனும் காராம்பசு தன் கன்றைக் கண்டதும் சற்று வெப்ப முடையதும், மிக்க சுத்தமானதுமான பாலினால் பூமியை நனைத்துக் கொண்டே நடந்து வந்தது. (உவமை மற்றும் நிகழ்வினவிற்சியணி)

சு॥ ரஜஃகணைஃ கு¹ரோத்²தூ³தைஃ ஸ்ப்ரிஶத்³பிர்³க³ாத்ரமந்திகாத் ।
தீர்த²ாபி³ஷேகஜாம் ஶுத்³தி⁴ மாத³த²ாநாம¹ஹீக்ஷிதஃ ॥ 84

(ப-ரை) கு¹ர = குளம்புகளால்; உத்²தூ³தைஃ = சிதறடிக்கப் பட்ட; அந்திகாத் = சமீபத்தில்; க²ாத்ரம் = உடலை; ஸ்ப்ரிஶத்³பி⁴ஃ = தொட்டுக்கொண்டிருக்கும்; ரஜஃ = தூசுகளின்; கணைஃ = நுண்மையால்; மஹீக்ஷிதஃ = திலீப மன்னனுக்கு; தீர்த்தாபி⁴ஷேக ஜாம் = தீர்த்தங்களில் நீராடுவதால் ஏற்படக்கூடிய; ஶுத்³தி⁴ம் = புனிதத்தை; அவத³ாநா = செய்கின்ற; தேநுஃ = பசுவானது; ஆவவ்ரிதே = வந்தது.

(க-ரை) அந்த நந்தினீ பசுவின் குளம்புகளிலிருந்து சிதறடிக்கப் பட்டு எழும்பிய தூசுகள் அருகிலிருந்த திலீப மன்னனுக்கு தீர்த்தத் தில் நீராடுவதால் உண்டாகும் புனிதத் தன்மையை உண்டாக்கியது (அறநூல்களில் குளியலைப் பற்றி:— விபூதி (புனிதநீறு) குளித்தலை ஆக்னேயக் குளியல் என்றும், நீரில் குளித்தலை வருணஸ்நானம் என்றும், கோரஜ (பசுவின் குளம்பு தூசுகள் படுதல்) ஸ்நானத்தை வாயுஸ்நானம் என்றும் சொல்லப்பட்டுள்ளன) (உயர்வுனவிற்சி யணி)

சு॥ தாம்புண்ய த³ர்ஶநாம் த்³ரிஷ்ட்வா நிமித்தஜ்ஞஸ்தபோநிதி⁴ஃ ।
யாஜ்ய மாஶம்ஸிதா வந்த்⁴ய ப்ரார்த்³தம் புநரப்²ரவீத் ॥ 85

(ப-ரை) நிமித்தஜ்ஞஃ = சகுணங்களை அறிந்த; தபோநிதி⁴ஃ = வசிட்டர்; புண்ய = மேன்மை தரவல்ல; த³ர்ஶநாம் = பார்வையுள்ள; தாம் = அந்த நந்தினீ பசுவை; த்³ரிஷ்ட்வா = கண்டு; ஆஶம்ஸித = விரும்பியவை; அவந்த்⁴ய = நிறைவேற்றும்; பார்தி¹வம் = திலீப மன்னனை நோக்கி; புநஃ = மறுபடியும்; அப்ரவீத் = சொன்னார்.

(க-ரை) சகுனங்களை அறிந்த வசிட்ட மாமுனிவர் மனதில் எண்ணியவை நிறைவேறும் அறிகுறியாக அந்த நந்தினீ பசுவின் வரவைக் கண்டவராய் திலீப மன்னனை நோக்கி மேலும் கூறலானார். (பிரிதின்குணம்பெறலணி)

சு ॥ அதூ³ர வர்திநீம் ஸித்³தி³ம் ராஜந் விக³ணயாத்ம நஃ॥
உபஸ்தி¹தேயம் கல்யாணீநாம்நி கீர்த்தித ஏவயத் ॥ 86

(ப-ரை) ஹேராஜந் = ஓ அரசே! ஆத்மநஃ = உனது; ஸித்³தி³ம் = காரியம் நிறைவேற; அதூ³ர = அருகில்; வர்திநீம் = உளதாக; விக³ணய = அறிவாய்; யத் = எதனால்; கல்யாணீ = சுபங்களை தரவல்ல; இயம் = இந்த நந்தினி பசுவின்; நாம்நி = பெயரை; கீர்தித ஏவ = சொல்லிக்கொண்டிருக்கையிலேயே; உபஸ்தி¹தா = வந்தது.

(க-ரை) அரசே! சுபங்களைத் தரவல்ல நந்தினீ தேனுவானது, அதனைப்பற்றி அளவளாவிக் கொண்டிருக்கும்போதே வந்துவிட்டதால், உனது எண்ணம் மிகவும் சீக்கிரத்தில் நிறைவேறிவிடும் என்பது அறியப்படுகிறது. (நிகழ்வினவிற்சி மற்றும் கரவுவெளிப்படுப்பணி)

சு ॥ வந்யவ்ரித்திரிமாம் ஶஶ்வ தா³த்மாநு க³மநேந கா³ம் ।
வித்³யா மப்⁹யஸநேநேவ ப்ரஸாத³யிது மர்ஹஸி ॥ 87

(ப-ரை) வந்ய = காட்டிற்பிறந்த (கிழங்கு, வேர், பழம், இலை முதலியவற்றையே); வ்ரித்திஃ = உணவாகக் கொண்டவனாய்; இமாம் = இந்த; கா³ம் = நந்தினீ பசுவை; ஶஶ்வத் = இடைவிடாது; ஆத்ம = தன்னுடைய; அநுக³ம நேந = பின்பற்றுதலாலும்; அப்⁹யஸ நேந = பயிற்சியாலும்; வித்³யாமிவ = கல்வியைப்போல்; ப்ரஸாத³ யிதும் = வயப்படுத்திக் கொள்வதற்கு; அர்ஹஸி = நீ தகுதியுடையவனாகின்றாய்.

(க-ரை) நீர் காட்டிற் கிடைக்கும் கனிவேர் கிழங்கு முதலிய வற்றையே உணவாகக் கொண்டு: பழக்கத்தால் கல்வியை வயப்படுத்திக் கொள்வதுபோல், நீ இந்த நந்தினீ பசுவை இடைவிடாது பின் தொடர்ந்து, அதனை வயப்படுத்திக்கொள்ள வேண்டும் (விரியுவமையணி)

அவ ॥ பசுவைப் பின்தொடர்ந்ததைப் பற்றிய விளக்கம்.

ஃ ॥ வதூர்ர் ப³க்திமதீசை நா மர்சிதா மாதபோ வநாத் ।
ப்ரயதா ப்ராத ரந்வேது ஸாயம் ப்ரத்யுத்² வ்ரஜேத²பி ॥ 88

ப-ரை) வது³ஃ = உனது மனைவி; ப³க்திமதீஸதி = பக்தியுள்ளவளாய்; ப்ரயதாசஸதி = கட்டுப்படுத்திய மனங்கொண்டு; அர்சிதாம் = பூசை செய்யப்பட்ட; ஏநாம் = இந்த நந்தினீ தேனுவை; ப்ராதஃ = வைகறையில்; ஆதபோவநாத் = தபோவனம் வரையில்; அந்வேது = தொடர்வாளாக; ஸாயமபி = அந்திவேளையிலும். ப்ரத்யுத்² வ்ரஜேத் = எதிர்நோக்கிச் செல்லவேண்டும்.

(க-ரை) உனது மனைவியும் அதனிடம் பக்தி செலுத்துபவளாய் இந்த நந்தினீ தேனுவைத் தொடர்ந்து காலையில் தபோவனம் வரை செல்லவேண்டும். மாலை வேளையிலும் அது வரும்போது எதிர்நோக்கிச் சென்று அழைத்து வரவேண்டும். (வேண்டலணி)

ஃ॥ இத்யா ப்ரஸாத²ா த²ஸ்யா ஸ்த்வம் பரிசர்யாபரோ ப³வ ।
அவிக்³ந மஸ்துதே ஸ்தே¹யாஃ பிதேவ து³ரிபுத்ரிணாம் ॥ 89

(ப-ரை) இதி = இவ்வாறு: த்வம் = நீ; ஆப்ரஸாத²ாத் = அருள் சுரக்கும்வரை; அஸ்ய = இந்த நந்தினீ தேனுவினுடைய; பரிசர்யா = தொண்டு செய்துவருவதில்; பரஃ = விருப்பமுடையவனாக; ப³வ = ஆவாய்; தே = உனக்கு; அவிக்³நம் = இடையூறின்றி; அஸ்தி = இருக்கக் கடவது; பிதேவ = நீ தந்தையர் போன்று; புத்ரிணாம் = நல்ல புதல்வர்களுடையவர்களின்; து³ரி = முன்பு; ஸ்தே¹யாஃ = இருப்பாயாக.

(க-ரை) நீ இப்போது சொன்னபடி நந்தினீ தேனுவின் அருள் பெறும் வரை அவளின் பணிவிடையில் ஈடுபாடு கொண்டிருப்பாயாக. உனக்கு எவ்விடையூறும் இல்லாதிருக்கட்டும்; உன் தந்தையார் போன்று உனக்கும் நன்மக்கட் பேறுண்டாகட்டும். (சுருங்கச் சொல்லணி)

ஃ॥ ததே¹தி ப்ரதி ஜக்²ராஹ ப்ரீதிமாந் ஸபரிக்²ரஹஃ ।
ஆதே²ஶம் தே²ஶகாலஜ்ஞஃ ஶிஷ்யஃ ஶாஸிதராநதஃ ॥ 90

(ப-ரை) தே²ஶஃ = அக்கினி வெளிப்படுமிடமும், கால = அக்கினியின் அந்தி நேரமும்; ஜ்ஞஃ = தெரிந்தவனாதலால்; ப்ரீதி

மாந் = மகிழ்வித்தலில் மேம்பட்ட; ஶிஷ்ய: = சீடனான; (திலீப மன்னன்); ஸபரிக்²ரஹ: = மனைவியுடன் கூடியவனாய்; ஆநத: = கீழ்ப்படிந்தவனாய்; ஶாஶித: = ஆணையிடும்; கு²ரோ: = ஆசானாகிய வசிட்டருடைய; ஆதே²ஶம் = கட்டளையை; ததே¹தி = அவ்வாறே ஆகட்டுமென்று, ப்ரதிஜக்²ராஹ = ஏற்றுக்கொண்டான்.

(க-ரை) இடம், காலம், அறிந்த நற்சீடனாகிய திலீப மாவரசன் மனைவியோடு, மகிழ்ச்சி கொண்டவனாய், அவ்வாறே ஆகுகவென்று கூறி, ஆசானின் கட்டளைப்படி நடந்துக் கொள்வதாக (வசிட்டரிடம்) கூறினான். (நிகழ்வினவிற்சியணி)

சு॥ அத¹ ப்ரதோ³ஷே தோ³ஷஜ்ஞஸ் ஸம்வேஶாய விஶாம்பதிம் ।
ஸூநுஸ் ஸூந்ருதவாக் ஸ்ரஷ்டுர் விஸஸர்ஜோர்ஜித ஶ்ரியம்॥ 93

(ப-ரை) அத¹ = பிறகு, ப்ரதோ³ஷே = சாயங்காலங்களில், தோ³ஷஜ்ஞ: = வித்துவானும், ஸூந்ருதவாக் = வாய்மையில் பிரியங் கொண்டவனும், ஸ்ரஷ்டு = பிரம்மாவுக்கு, ஸூநு: = மகனுமான, (வசிட்டர்), ஊர்ஜித = நிச்சயிக்கப்பட்ட, ஶ்ரியம் = சம்பத்துக்களுடைய, விஶாம்பதிம் = அரசனாகிய திலீப மகாராஜாவை, ஸம்வேஶ்ய = உறங்கும் பொருட்டு, விஸஸர்ஜ = ஆணையிட்டார்.

(க-ரை) பிறகு மாலைவேளையில் அறிஞனும் வாய்மைப் பிரியனும் பிரமனின் மகனும் ஆன வசிட்டர், அனுக்கிரகம் பெற்ற திலீப் மாமன்னனை, தூங்கும்படி ஆணையிட்டார். (வேண்டலணி)

சு ॥ ஸத்யாமபி தபஸ்ஸித்³தௌ⁴ நியமாபேக்ஷயா முநி: ।
கல்பவித் கல்பயாமாஸ வந்யாமேவாஸ்ய ஸம்வித³ம் ॥ 94

(ப-ரை) கல்பவித் வேதாங்க சாத்திரங்கள் ஆறில் ஒன்றாகிய 'கல்ப'மென்னும் சாத்திரங் கற்று அதன்படி விரதங்களை நடத்தி வைப்பவராய்; முநி: = வசிட்டமுனி; தபஸ்ஸித்³தௌ⁴ = தவத்தின் முழுப்பலன்; ஸத்யாமபி = அடைந்திருந்தும்; நியம = கோசேவா விரதத்தின் செயல் முறைகளின்; அபேக்ஷயா = விழைந்ததால்; அஸ்ய = இந்த திலீப மன்னனுக்கு; வந்யாமேவ = காட்டிலேயே; பிறந்த; ஸம்வித³ம் = தருப்பை என்னும் நாணற்புல் முதலிய படுக்கைக் குரிய பொருட்களை; கல்பயாமாஸ = சம்பாதித்தான்.

(க-ரை) விரதங்கள் நடத்திவைக்கும் விதிமுறைகள் அறிந்த வசிட்டர் அரசனுக்குகந்த உணவை சம்பாதிக்கும் திறனிருந்தும் காட்டிலேயே பிறந்த நாணல்புல் முதலிய பொருட்களை திலீப

மகாராஜனுக்குப் படுக்கையாகச் செய்து உதவினார். (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ நிர்தி²ஷ்டாம் குலபதீநா ஸ பர்ணஶாலாம்
அத்⁸யாஸ்ய ப்ரயத பரிக்²ரஹ த்விதீயஃ।
தச்சி¹ஷ்யா த்⁸யயந நிவேதி²தாவஸாநாம்
ஸம்விஷ்டஃ குஶஶயநே நிஶாம் நியாய ॥ 95

இதி காளிதா²ஸக்ருதௌ ரகுவம்ஶ மஹாகாவ்யே ப்ரத¹மஸ்ஸர்க³ஃ

(ப-ரை) ஸஃ = அந்த திலீபமாமன்னன்; குலபதிநா = முனிவர் மறபின் சிரேட்டரான வசிட்டரால்; நிர்தி²ஷ்டாம் = காண்பிக்கப்பட்ட; பர்ணஶாலாம் = குடிலில்; அத்⁸யஸ்ய = இருந்து; ப்ரயத = தூய்மையானவனாய்; குஶஶயநே = தருப்பை படுக்கையில்; ஸம்விஷ்டஸ்ஸந் = உறங்கியவனாய்; தத் = அந்த வசிட்டருடைய; ஶிஷ்ய = சீடர்கள்; அத்⁸யயந = பின்னிரவு வேத பாடங்களை ஓதினதால்; நிவேதி²த = அறிவிக்கப்பட்ட; அவஸாநாம் = முடிவுற்றதாலாய; நிஶாம் = இரவை; நியாய = போக்கினான்.

(க-ரை) திலீப மன்னவன் தன் குலகுருவாய வசிட்டரால் காண்பிக்கப்பட்ட குடிலில் இருந்து நியமத்துடன் மனைவியுடன் அவ்விரவு தருப்பை சயனத்தில் படுத்திருந்து வைகரையில் வசிட்டரின் சீடர்கள் வேதபாடங்கள் ஓதும் நாதங்களைக்கேட்டு விழித்துக்கொண்டான். (நிகழ்வினவிற்சியணி)

இது மாககவி காளிதாசனா லியற்றப்பட்ட ரகுவம்சத்தில் முதல் சருக்கத்திற்குத் திருத்தணிவாழ் ஸ்ரீவித்யானந்தா எனும் செ. ராமலிங்காசாரியரால் இயற்றப்பட்ட தெளிவுரை.

# ரகுவம்ச மகா காவியம்

## இரண்டாம் சுருக்கம்

சு ॥ அத1 ப்ரஜானா மதி3ப꞉ ப்ரபா3தே
ஜாயா ப்ரதிக்3ராஹித க3ந்த3 மால்யாம்।
வனாய பீத ப்ரதிப3த்3த3 வத்ஸாம்
யஶோத3னோ தே3நு ம்ரிஷேர் முமோச॥ 1

(ப-ரை) அத1=பாதி இரவுக்குப் பிறகு; யஶோத3ந꞉= புகழையே பொருளாகக் கொண்ட; ப்ரஜாநாம் = குடிகட்கு; அதி3ப꞉=பிரபுவான திலீபன்; ப்ரபா3தே=வைகரையில்; ஜாயாப்ரதிக்3ராஹித=மனைவியாகிய சுதக்ஷிணா தேவியால் ஏற்றுக்கொண்ட; க2ந்த3=சந்தனம்; மால்யம்=பூமாலையும் உடைய; பீத=குடிக்கப் பட்டு; ப்ரதிப2த்2த3=கட்டப்பட்டுள்ள; வத்ஸாம்; கன்றைவுடைய; ரிஷே꞉=வசிட்டருடைய; தே3னும்=நந்தினீ தேனுவை; வநாய= காட்டிற்குச் சென்று வருவதற்காக; முமோச=அவிழ்த்துவிட்டான்.

(க-ரை) பொழுது விடிந்ததும் திலீபமன்னன் நந்தினீ தேனுவை, தன் மனைவியால் சந்தனம் பூசவைத்து, பூமாலை யுடன் அலங்கரித்து, கன்றைப் பால் குடிக்கவைத்து; பிறகு கட்டி வைத்து; அப்பசுவை காட்டிற்குப் போகவிட்டான். (நிகழ்வினவிற் சியணி)

சு ॥ தஸ்யா꞉ கு1ரந்யாஸ பவித்ர பாம்ஸு
மபாம்ஸு லானாம் து3ரிகீர்தநீயா।
மார்க3ம் மநுஷ்யேஶ்வர த3ர்ம பத்நீ
ஶ்ருதே ரிவார்த1ம் ஸ்மிருதி ரந்வ க2ச்ச1ன்॥ 2

(ப-ரை) அபாம் ஶுலாநாம்; பதிவிரதைகளுடைய; து3ரி= கடைசியில்; கீர்தநீயா=புகழத்தக்க; மநுஷ்யேஶ்வர=திலீபமன்ன னுக்கு; தர்மபத்நீ=தரும பத்தினியாகிய சுதக்ஷிணாதேவி; கு2ர= குளம்புகளுக்கு; ந்யாஸ=இடுவதால்; பவித்ர=தூய; பாம்ஸும்= தூசியையுடைய; தஸ்யா=அந்த நந்தினீ தேனுவின்; மார்க2ம்= வழியை; ஸ்மிரிதி꞉=மனு முதலியவர்களின் வாக்குகள்; ஶ்ருதே꞉= வேதவாக்கின்; அர்த1மிவ=செல்வம் போன்றே; அந்வக2ச்ச1த்= தொடர்ந்து செல்வதுபோன்று இருந்தது.

(க-ரை) பதிவிரதாமணியும் திலீப மன்னனின் மனைவியுமான் சுதக்ஷிணாதேவி நந்தினீ பசுவின் குளம்புகளால் சிதறடிக்கப்பட்ட தூசுகளுடன் கூடிய வழியைத் தொடர்ந்து சென்றனள். அவள் சென்றது எவ்விதமிருந்ததெனில் வேதத்தின் பொருள்களைத் தொடர்ந்து மனுவாதி ஸ்மிருதிகள் செல்வது போன்று இருந்தது. (நிகழ்வினவிற்சி மற்றும் புகழ்பொருளுவமையணி)

௩॥ நிவர்த்ய ராஜா த³யிதாம் த³யாளு
ஸ்தாம் ஸௌரபே³யீம் ஸு²ரபி⁴ர்யஶோபி⁴: ॥
பயோ த⁴ரீபூ⁴த சதுஸ் ஸமுத்²ராம்
ஜுகோ³ப கோ³ரூப த⁴ராமி வோர்வீம் ॥ 3

(ப-ரை) த³யாளு:=தயவுள்ளவனும்; யஶோபி⁴:=புகழாரங்களால்; ஸு²ரபி⁴=அழகியவனும் ஆகிய; ராஜா=திலீப மன்னவன்; த³யிதாம்=மனைவியாகிய சுதக்ஷிணையை; நிவர்தய=தடுத்து; ஸௌரபே³யீம்=காமதேனுவின் மகளாகிய; தாம்=அந்த நந்தினீ பசுவை; பயோத⁴ரீபூ⁴த=முலைகளான; சது:=நான்காகிய; ஸமுத்²ராம்=கடல் உடையதாய்; கோ³ரூப=பசு உருவை; த⁴ராம்=பூண்டிருக்கும்; உர்வீம்இவ=பூமியைப் போன்று; ஜுகோ³ப=காத்தான்.

(க-ரை) தயாளுவாகிய திலீப மன்னன் தன் மனைவியைத் தடுத்து. கடல் நான்கும் சூழ்ந்த நிலப்பரப்பைக் காப்பதுபோல், கடல்களுக்கு இணையாகிய நான்கு முலைகளுடைய நந்தினீதேனுவை காப்பாற்றினான். (புகழ்பொருளுவமையணி)

௪॥ வ்ரதாய தேநாநுசரேண தே⁴நோ:
ர்ந்யஷேதி⁴ ஶேஷோऽப்யநுயாயி வர்க³: ।
நசாந்யதஸ் தஸ்ய ஶரீர ரக்ஷா
ஸ்வவீர்ய கு³ப்தா ஹிமநோ: ப்ரஸூதி: 4

(ப-ரை) வ்ரதாய=பசுவை சேவிக்கும் விரதத்திற்காக; தே⁴நோ:=நந்தினீ என்னும் பசுவிற்கு; அநுசரேண=ஊழியனாகிய; தேந=அந்த திலீப மன்னனால்; ஶேஷோபி=மீதியாயினும்; அநுயாயி=ஊழியர்களுடைய; வர்க³:=கூட்டம்; ந்யஷேதி⁴:=நிறுந்தப்பட்டது; தஸ்ய=அந்த திலீப மன்னனுடைய; ஶரீர=உடலின்; ரக்ஷாச=பேணுவது; அந்யத:=மற்றொரு மனிதனால்; ந=இல்லை; ஹி=எக்காரணத்தால்; மநோ:=மனுவென்னும் மன்ன

னுடைய; ப்ரஸூதஃ = மக்கள்; ஸ்வ = தம்முடைய; வீர்ய = வன்மையால்; குப்தா = காக்கப்பட்டதோ.

(க-ரை) மனு வம்சத்தைச் சார்ந்தவர்கள் தங்கள் சுய பலத்தால் தங்களைத் தாங்களே காத்துக்கொண்டனர், அதனால் பசுவை சேவித்துவந்த திலீப மாமன்னன் பிறர் உதவி தேவையின்மையால், ஏவலாட்களைத் திரும்பிச் செல்லும்படி அனுப்பிவிட்டான். (வீறுகோளணி)

சு ॥ ஆஸ்வாத2வத்2பி3ஃ கப2ளை ஸ்த்ரிணா நாம்
கண்டு2யனைர் த3ம்ஶ நிவாரணைஶ்ச।
அவ்யாஹதைஃ ஸ்வைர க2தைஶ்ச தஸ்யா
ஸ்ஸம்ராட் ஸமாராத3ந தத்பரோஃபூத்॥ 5

(ப-ரை) ஸம்ராட் = பூமண்டலாதிபதியாகிய திலீபமன்னன்; ஆஸ்வாத2வத்2பி3ஃ = சுவைக்கத் தக்கவையாகிய; த்ரிணா நாம் = புற்களின்; கப2ளைஃ = தீவனங்களாலும்; கண்டு2யநைஃ = பறண்டுதலால்; த3ம்ஶஃ = காட்டு ஈக்களின் (உபத்திரவத்தை) நிவாரணைஶ்ச = ஓட்டி விடுவதாலும்; அவ்யாஹதைஃ = தடுக்கக் கூடாத; ஸ்வைர க2தைஶ்ச = சுயமான போக்கினாலும்; தஸ்யாஃ = அந்த பசுவின்; சாஸமாராத3ந = பணிபுரிவதில்; தத்பரஃ = விரும்பியவன்; அபூ3த் = ஆனான்.

(க-ரை) மண்டலாதிபனான திலீபமன்னன் செழிப்பான நல்ல புல்லைத் தந்தும், அதனைப் பறண்டிக் கொடுத்து காடடீக்களை ஓட்டியும், தடையின்றி சுயேச்சையாகத் திரியும்படி செய்தும், நந்தினீ தேனுவுக்குப் பணி செய்தலில் மிக நாட்டமுடையவனாக இருந்தான் (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ ஸ்தி1தஸ் ஸ்தி1தா முச்சலிதஃ ப்ரயாதாம்
நிஷேதுஷீ மாஸந ப2ந்த3 தீ3ரஃ।
ஜலாபி3லாஷீ ஜலமாத2 த2ாநாம்
சா1யேவதாம் பூ3பதி ரந்வக2ச்ச1த்॥ 6

(ப-ரை) பூபதி3ஃ = திலீப மன்னன்; ஸ்தி1தாம் = அது நின்றுள்ள போது; ஸ்திதஸ்ஸந் = நின்றவனாயும்; ப்ரயாதாம் = போகும்போது; உச்ச1லிதஸ்ஸந் = போவானாகி; நிஷேது2ஷீம் = உட்காரும்போது; ஆஸந = பதுமாசனம்; ப2ந்த3ஃ = போட்டு; தீ3ரஸ்ஸந் = திறம்பட

உட்கார்ந்தவனாயும்; ஜலம் = தண்ணீர்; ஆத²தா³நாம் = உட்கொள்ளும்போது; அபி³லாஷீ ஸந் = விரும்பியவனாயும்; தாம் = அந்த நந்தினியை; சா¹யேவ = நிழல்போன்று அநவக²ச்ச¹த் = தொடர்ந்து சென்றான்,

(க-ரை) மேலும், அந்த திலீப மன்னன் நந்தினீதேனு நிற்கும் போது தானும் நின்று, அது போகும்போது தானும் சென்று, உட்காரும்போது உட்கார்ந்தும், தண்ணீர் குடிக்கும்போது; தண்ணீர் பருகியும், இவ்வாறு அதனை நிழல்போன்று தொடர்ந்தான் (நிகழ்வினவிற்சி மற்றும் உவமையணி)

சு ॥ ஸங்யஸ்த சிஹ்நாமபி ராஜ்யலக்ஷ்மீம்
தேஜோ விஸேஷாநுமிதாம் த²தா²நঃ।
ஆஸீத² நாவிஷ்க்ரித த²ாநராஜிঃ
அந்தர் மத²ாவஸ்த¹ இவ த்²விபேந்த்²ரঃ ॥ 7

(ப-ரை) ஸந்யஸ்த = களையப்பட்ட; சிஹ்நமபி = குடை சாமரம் முதலிய அரசு அறிப்புகள் உண்டாகியும்; தேஜோவிஸேஷঃ = ஒளியின் மிகுதியால், அநுமிதாம் = எண்ணத்தக்க, ராஜ்யலக்ஷ்மீம் = அரசு என்னும் இலக்குமியை, த²த்³ாநঃ = தொடுத்துள்ள திலீப மன்னன், அநாவிஷ்க்ரித = புறத்தோற்றம் அளிக்காதுள்ள, த³ாந = மதஜலத்தின்; ராஜிঃ = கோடுகள் உள்ளதும், அந்தঃ = உள்ளடங்கிய, மத² = திமிரின், அவஸ்த¹ঃ = நிலைமை உடைய, த்²விபேந்த்²ர இவ = யானைத் தலைவன் போல், ஆஸீத் = ஆனான்.

(க-ரை) நீக்கப்பட்ட குடை, சாமரம் போன்ற அரசக்குறிகள் உடைய திலீப மன்னன், மதஜலம் வெளியே தோன்றாது உள்ளடங்கிய நிலைமையுடைய யானைத் தலைவனைப் போன்று, அதிசயமான ஒளியினால் அரசரேறு என்னும் எண்ணத்தை வெளிப்படுத்தலானான். (வீறுகோளணி)

சு॥ லதா ப்ரதா நாத்²க்²ரதி³தைঃ ஸகேஶைঃ
அதி³ஜ்ய த³ங்வா விசசார த²ாவம் ।
ரக்ஷாப தே²ஶாந் முநிஹோம தே³நோঃ
வந்யாந் விநேஷ்யந்நிவ து²ஷ்ட ஸத்வாத் ॥ 8

(ப-ரை) லதா = கொடிகளின், ப்ரதாந = வளைந்த நுண்ணிய கொடிகளில், உத²க்³தி³த³³ঃ = எடுத்துக்கட்டப்பட்ட, கேஶைঃ =

தலைமயிருடையவனாய், உபலக்ஷிதஃ = தோன்றும், ஸஃ = அந்த திலீப மன்னன், அதி³ஜ்ய = தொடுக்கப்பட்ட நாணையுடைய, த⁴ந்வாஸந் = வில்லுடையவனாய், முநி = வசிட்ட முனிவருடைய ஹோமதே⁴நோஃ = வேள்விப் பசுவின், ரக்ஷ = காப்பாற்றும், அப தே³ஶாத் = போலிக் காரணத்தகல், வந்யாந் = காட்டில் பிறந்த, து³ஷ்டஸதத்வாந் = கெட்டவிலங்குகளை, விநேஷ்யந்நிவ = தண்டிப்பவன் போல், த³ாவம் = காட்டில், விசசார = திரிந்து வந்தான்.

(க-ரை) திலீப மன்னன் வளைந்த நுண்ணிய கொடிகளால் தலைமயிர்களை எடுத்துக் கட்டிக்கொண்டு,] வில்லேந்தியவனாய் ஓமத்திற்குதவும் நந்தினி தேனுவைக் காப்பாற்றும் பொய்க்காரணத்தால் காட்டிலுள்ள கொடிய விலங்குகளை தண்டிப்பவன் போல் காட்டில் திரிந்து வந்தான் (கருத்துடையடைகொளியணி)

சு॥ விஸ்ரிஷ்ட பார்ஶ்வாநுசரஸ்ய தஸ்ய
பார்ஶ்வ த்³ருமாஃ பாஶப்⁴ரிதா ஸமஸ்ய ।
உதீ³ரயாமாஸுர் ரிவோந் மத³ாநாம்
ஆலோக ஶப்³த³ம் வயாஸாம் விராவைஃ॥ 9

(ப-ரை) விஸ்ரிஷ்ட = விடப்பட்ட; பார்ஶ்வ = பக்கங்களில் உள்ள; அநுசரஸ்ய = ஏவலாட்களை உடைய; பாஶப்⁴ரிதா = வருணனுக்கு; ஸமஸ்ய = நிகரான; தஸ்ய = அந்த திலீப ராஜன்; பார்ஶ்வ = பக்கங்களில் உள்ள; த்³ருமாஃ = மரங்கள்; உந்மதா³நாம் = மிகுந்த மதம்பிடித்த; வயஸாம் = பறவைகளின்; விராவைஃ = ஓசையால்; ஆலோக ஶப்³த³ம் = பார்த்து செய்யும் ஒலிகளும்; உதீரயாமாஸுரிவ = சொல்லினவோ என்பது போன்று இருந்தன.

(க-ரை) திலீபமன்னன் தன்னிருபுறங்களில் வரும் ஏவலாட்களை விட்டவனாயும், வழியில் இருபுறங்களில் உள்ள மரங்கள், அவற்றின் மீதுள்ள பறவைகளின் ஒலிகளால், வழியில் ஆங்காங்குள்ள சிறப்புகளைப் பாருங்கள் என பக்கத்தில் தொடர்ந்து வருவோர் கூறுவது போன்று இருந்தது. (தொகை யுவமையணி)

சு ॥ மருத் ப்ரயுக்தாஶ்ச மருத்ஸகா¹ப³ம்
தமர்ச்ய மாரா த³பி³வர்த மாநம் ।
அவாகிரந் பா²லலதாஃ ப்ரஸூநைஃ
ஆசாரலாஜை ரிவ பௌர கந்யாஃ ॥ 10

(ப-ரை) மருத் = காற்றால்; ப்ரயுக்தாః = ஏவப்பட்ட, பா²லலதாః = இளங்கொடிகள்; ஆராத் = சமீபத்தில்; அபி³வர்தமாநம் = எதிரில் வரும்; மருத்ஸக¹ = அக்கினியைப்போல்; ஆப³ம் = ஒளிவீசும், அர்ச்யம் = தொழத்தக்க, தம் = அந்த திலீபனை, ப்ரஸூநை = பூக்களால், பௌரகந்யாః = பட்டணத்து கன்னியர்கள், ஆசார = மறபையொட்டி, லாஜைః இவ = பொரிகளைச் சொரிவது போல், அவாகிரந் = உதிர்த்தன.

(க-ரை) காற்றால் அலையும் இளங் கொடிகளிலிருந்து வாயுவின் நண்பனான அக்னியைப் போல் பிரகாசத்துடன் அருகில் வந்துக் கொண்டிருக்கும் திலீபமாமன்னன் மீது உதிர்ந்துவரும் பூக்கள், பட்டணத்துள்ள கன்னிப்பெண்கள் மரியாதைக்காக அருகில் வரும் அரசன்மீது சொரியும் பொரிகளைப்போன்று, அக்கொடிகள்; அக்கினி நண்பனான வாயுவால் தூண்டப்பட்டவைகளாய், பூக்களைத் தெளிப்பது போன்று இருந்தது. (தொகையுவமையணி)

**ஸ ॥ த³நுர்ப்⁴ரி தோ஽ப்யஸ்ய த³யார்த்³ர பா³வம்**
**ஆக்¹யாத மந்தః கரணை ர்விஶங்கைః।**
**விலோகயந்த்யோ வபுராபு ரக்ஷ்ணாம்**
**ப்ரகாம விஸ்தார ப¹லம் ஹரிண்யః ॥** 11

(ப-ரை) த³நுః = வில்லை, ப்⁴ரிதః அபி = ஏந்தியவனாக இருந்தும், அஸ்ய = இந்த திலீப மன்னனுடைய, விஶங்கைః = அச்சமற்ற, அந்தః காரணః = மனத்தாலும், த³யா = தயவால், ஆர்த்³ர = நனைந்த, பா³வம் = எண்ணம் உடைத்தாய், ஆக்¹யாதம் = கூறப்பட்ட, வபுః = உடலை, விலோகயந்த்யః = பார்த்துக்கொண்டுள்ள, ஹரிண்யః = பெண்மான்கள், அக்ஷ்ணாம் = கண்களின், ப்ரகாம = மிகுந்த, விஸ்தார = விரிவான, ப¹லம் = பயன்களை, ஆபு³ః = அடைந்தன.

(க-ரை) திலீப மன்னன் வில்லேந்தியுள்ளதால், அச்சமூட்டுவதாக இருந்த போதிலும் அச்சத்தை நீக்கும் தயவுடன் கூடிய எண்ணத்தைக் குறிக்கும் அவனுடைய சுந்தரவதனங்கண்ட பெண் மான்கள் தம் அகன்ற கண்களால் பார்ப்பதால் அவற்றின் விரிவை பலிக்கச் செய்தன. அதாவது தமது அகன்ற கண்களால் அச்சமின்றியே நோக்கினவென்பனவாம் (அகமலர்ச்சியணி)

ஸு॥ ஸ கீசகைர் மாருதபூர்ண ரந்த்³ரைஃ
கூஜத்³பி³ ராபாதி³த வம்ஶ க்ரித்யம்।
ஶுஶ்ராவ குஞ்ஜேஷு யஶஸ் ஸ்வமுச்சைஃ
உத்³கீ³யமாநம் வநதே³வதாபி³ஃ॥ 12

(ப-ரை) ஸஃ = அந்த திலீப மன்னன்; மாருத = காற்றால்; பூர்ண = நிரப்பப்பட்ட; ரந்த்³ரைஃ = துவாரங்கள் உள்ளவை ஆன தால்; கூஜத்³பி³ஃ = தொனிக்கும்; கீசகைஃ = மூங்கில்களால்; உச்சைஃ = உரத்த; ஆபாதி³த = ஈட்டப்பட்ட; வம்ஶஃ = துளைகள் உள்ள வாத்தியத்தின்; க்ரித்யம் யத²ாதத²ா = செய்கை போன்று உண்டாகும் படி; குஞ்ஜேஷு = புதர்களில்; வநதே³வதாபி³ஃ = வனதெய்வங்களால்; உத்³கீ³யமாநாம் = உரத்த கானம் செய்யப்படும்; ஸ்வம் = தனது; யஶஃ = புகழ் குறித்து; ஶுஶ்ராவ = கேட்டான்.

(க-ரை) அந்த திலீப மன்னன் மூங்கில்களில் காற்று சேர்வதால் உண்டான இனிய புல்லாங்குழல் ஒலியைக் கேட்டான். அவ் வேணு நாதமானது வனதேவதைகள் தன் புகழைப் புகழ்ந்துப் பாடியது போலிருந்தது. (பெருமையணி)

ஸு॥ ப்ரிக்தஸ் துஷாரைஃ கி³ரி நிர்ஜ²ராணாம்
அநோக ஹாகம்பித புஷ்பக³ந்தி³ஃ।
த மாதபக்லாந்த மநாத பத்ரம்
ஆசாரபூதம் பவநஸ் ஸிஷேவே॥ 13

(ப-ரை) நிர்ஜராணாம் = மலையருவி வெள்ளத்தின்; துஷாரைஃ = திவலைகளால்; ப்ரிக்தஃ = நனைக்கப்பட்டதும்; அநோகஹ = மரங்களின்; ஆகம்பித = அசைந்து; புஷ்பஃ = பூக்களின்; க³ந்தி³ = நறுமணமுடைய; பவநஃ = காற்று; அநாதபத்ரம் = குடையற்றுள்ளவனாதலால்; ஆதப = வெய்யிலால்; க்லாந்தம் = சோர்வுற்றுள்ளவனும்; ஆசார = நல்லொழுக்கத்தால்; பூதம் = புநிதமானவனும்; தம் = (ஆகிய) அந்த திலீப மன்னனை; ஸிஷேவே = சேவித்தன.

(க-ரை) அந்த திலீபமன்னவன் விரதம் பூண்டதால் குடைப் பிடித்துக்கொள்ளாமல், வெய்யிலில் சோர்வுற்றிருந்தமையின், வாயுவானது ஆசாரசீலனான அவன்மீது மலையருவிகளின் நீரினால் தெரித்த திவலைகளைத் தெளித்து, மரங்களை அசையச்செய்து, அவற்றின் பூவிலெழும் நறுமணங்களை வீசிக்கொண்டே அவனை

சேவித்துக் கொண்டிருந்தது. அதாவது, குடைப்பிடிக்காது சென்றதால் சோர்வுற்ற திலீபன் மீது குளிர்ந்த நறுமணங் கூடிய தென்றல் வீசியது என்பதாம் (பெருமையணி)

ச ॥ ஶஶாம வ்ரிஷ்ட்யாபி விநா த³வாக்³நிঃ
ஆஸீத்³ விஶேஷா ப¹லபுஷ்ப வ்ரித்³தி⁸ঃ।
ஊநம் ந ஸத்த்வே ஷ்வதி⁴கோ ப³பா³தே⁸
தஸ்மிந் வநம் கோ³ப்தரி கா³ஹமாநே॥ 14

(ப-ரை) கோ³ப்தரி = காவலனான; தஸ்மிந் = அந்த திலீப மன்னன்; வநம் = காட்டை; கா³ஹமாநே அபி = நுழைந்தபோதும்; வ்ரிஷ்ட்யா விநா அபி = மழையைத் தவிர்த்து; த³வாக்³நிঃ = காட்டுத்தீ; ஶஶாம = அடங்கிவிட்டது; ப¹ல = பழங்கள்; புஷ்ப = பூக்களின்; வ்ரித்³தி⁸ঃ = பெருக்கு; விஶேஷா = அதிகரித்தல்; ஆஸீத் = ஆயிற்று; ஸத்வேஷு = விலங்குகளில்; அதி⁸கঃ = பிரபலமான புலி முதலியவை; நப³பா³தே⁸ = துன்புறுத்தவில்லை:

(க-ரை) அந்த திலீபமன்னன் காவலனானதால், வனத்தில் நுழைந்ததும் மழைப் பொழியாமலேயே காட்டுத்தீ அடங்கி விட்டது; பழங்கள், பூக்கள் விருத்தி அடைந்தன; புலிமுதலிய கொடூரமான விலங்குகள் யான்கள் போன்ற சாதுவான விலங்குகட்குத் தீங்கு செய்யவில்லை. (சுருங்கச்சொல் லணி)

ச ॥ ஸஞ்சார பூதாநி தி³க³ந்தாராணி
க்ரித்வா தி³நாந்தே நிலயாய க¹ந்தும்।
ப்ரசக்ரமே பல்லவராக³ தாம்ரா
ப்ரபா⁸ பதங்க³ஸ்ய முநேஶ்ச தே⁸நுঃ॥ 15

(ப-ரை) பல்லவ = துளிர்களின்; ராக³ = நிறம்போன்று; தாம்ரா = சிவந்த; பதங்க³ஸ்ய = சூரியனின்; ப்ரபா⁸ = ஒளியும்; முநேঃ = முனிவருடைய; தே⁸நுঃ = நந்தினிப்பசுவும்; தி³க் அந்தராணி = திக்குகளனைத்திலும்; ஸஞ்சார = திரிவதால்; பூதாநி = தூய்மையுள்ளவைகளாக; க்ரித்வா = செய்து; தி³நாந்தே = மாலையில்; நிலயாய = மறைதலுக்காக; (வீட்டிற்கு) க³ந்தும் = போவதற்கு ப்ரசக்ரமே = தொடங்கியது.

(க-ரை) தளிர்கள் போன்ற சிவந்த சூரிய ஒளி உலகெங்கும் பரவி தூய்மையாக்கி, மறைவதுபோல், வசிட்டரின் செந்நிறப்

பசுவான அந்த நந்தினீ தேனுவானது அக்காட்டில் சஞ்சாரம் செய்து, தூய்மையாக்கி, மாலைவேளையில் வீடுதிரும்புவதற்காகப் புறப்பட்டது. (எடுத்துக்காட்டுவமையணி)

சு॥ தாம் தே²வதா பித்ரதி¹தி¹ க்ரியார்த¹ாம்
அந்வக்²யயௌ மத்³யம லோகபாலஃ ।
ப²பௌ³ஸச ஸா தேந ஸதாம் மதேந
ஶ்ரத்²தே³வ ஸாக்ஷா த்²விதி³ நோபபந்நா ॥ 16

(ப-ரை) மத்³யமலோக = பூவுலகை; பாலஃ = பரிபாலனஞ் செய்து வந்த திலீப மன்னன்; தே²வதா = தேவர்களுடைய; பித்ரீ = பிதுர்தேவதைகளின்; அதி¹தி² = சுற்றங்களுடைய; க்ரியா = யாகம், சிராத்தம். தானங்களே; அர்த¹ாம் = பிரயோசனமாகக் கொண்ட; தே³நும் = நந்தினீதேனுவை; அந்வக் = தொடர்ந்து யயௌ = சென்றான்; ஸதாம் = சத்புருஷர்களுக்கு; மதேந = விருப்பமான; தேந = அந்த திலீப மன்னனோடு; உபபந்நா = கூடிய; ஸாச = அந்த நந்தினீ பசுவும்; ஸதாம் = சற்புருடர்கட்கு; மதேந = சம்மதமான; விதி³நா = அனுட்டானத்துடன்; உபபந்நா = கூடியுள்ள; ஸாக்ஷாத் = காணக்கூடிய; ஶ்ரத்²தே³ந = ஆத்தீக புத்தியைப் போல்; ப²பௌ³ = மிளிர்ந்தது.

(க-ரை) பூமியாளுந் திலீப மன்னன் தேவர்கட்குப் பிரியமான வேள்விகளுக்கும், தென்புலத்தார்க்கு நிறைவளிக்கும் திவசங்கட்கும், விருந்துக்குகந்த தானங்களுக்கும் நெய் முதலியவற்றைக் கொடுப்பதால் ஆதாரமாய் நிற்கும் நந்தினியை தொடர்ந்து சென்றான். சற்புருடர்களால் சேவிக்கப்படும் திலீப மன்னனுடன் போகும் அந்த நந்தினி பசு நற்காரியங்கள் செய்யும் கண்கண்ட ஊக்கம் புலப்படுவது போன்று பிரகாசித்தது. (உவமையணி)

சு॥ ஸபல்வ லோத்தீர்ண வராஹ யூத¹ா
ந்யாவாஸ வ்ரிக்ஷோந்முக¹ ப²ர்ஹிணாநி ।
யயௌ ம்ரிக²ாத்³யாஸித ஶாத்வலாநி
ஶ்யாமாயமா நாநி வநாநி பஶ்யந் ॥ 17

(ப-ரை) ஸஃ = அந்த திலீப ராஜா, பல்வல = சிறுகுளங்களிலிருந்து, உத்தீர்ண = வெளிப்பட்ட, வராஹ பன்றிகளின், யூத³ாநி = கூட்டங்களுடையதும், ஆவாஸ = வசிக்கத்தக்க, வ்ரிக்ஷ = மரங்

களுக்கு, உந்முக$^{1}$ = எதிரான, அத்$^{3}$யாஸிந = ஏறிய, ஶாத்$^{2}$வலாநி = பசும்புற்றறைகள் உடையதும், ஶ்யாமாயமநாநி = கருமையான; வநாநி = காடுகளை, பஶ்யந்ஸந் = பார்த்துக் கொண்டே, யாயௌ = பயணமானான்.'

(க-ரை) அந்த திலீப மன்னன் அற்பக் குளங்களிலிருந்து புறப்பட்டு வந்த பன்றிகளின் கூட்டங்கள் உடையதும், வசிக்கத் தக்க மரங்களை விட்டு எதிர்நோக்கிவரும் மயில்களை உடையதும், கருநிறமானதுமாகிய காடுகளைப் பார்த்துக்கொண்டே பயண மானான். (விரிவுவமையணி)

௬ ॥ ஆபீந பா$^{3}$ரோத்$^{2}$வஹந ப்ரயத்நாத்

க்$^{3}$ரிஷ்டிர் கு$^{2}$ருத்வாத் வபுஷோ நரேந்த்$^{2}$ர꞉।

உபா$^{3}$வலஞ்சக்ரதுரஞ்சிதாப்$^{3}$யாம்

தபோவநா வ்ரித்தி பத$^{1}$ம் க$^{2}$தாப்$^{3}$யாம் ॥ 18

(ப-ரை) க்$^{3}$ரீஷ்டி = அப்போது சூலாகி இருந்து ஈன்றுவந்த நந்தினீ தேனுவும்; நரேந் த்$^{2}$ரஶ்ச = திலீபமன்னனும்; உபௌ$^{3}$ = இவ்விருவரும்; ஆபீந = மடியின்; பா$^{3}$ர = பளுவால்; உத்$^{2}$வஹந = தாங்குவதில்; ப்ரயத்நாத் = முயற்சியால்; வபுஷ꞉ = உடலின்; கு$^{2}$ருத் வாச்ச = பாரத்தால்; அஞ்சிதா ப்$^{3}$யாம் = நேர்த்தியான; க$^{2}$தாப்$^{3}$யாம் = பயணத்தால்; தபோவந = தபோவனத்திலிருந்து; ஆவ்ரித்தி பத$^{1}$ம் = வரும் வழியை; அலஞ்சக்ரது꞉ = அலங்கரித்தனர்

(க-ரை) ஒரு கன்றையீன்ற நந்தினீ பாரத்துடன் கூடிய மடியுடையதாயும்; திலீபவரசன் பருத்த உடலுடனும் வந்துக்கொண் டிருக்கையில் பார்க்க மிக அழகாக யிருந்தனர். (தொடர்புயர்வு நவிற்சியணி)

௯ ॥ வஶிஷ்டதே$^{3}$நோ ரநுயாயிநம் தம்

ஆவர்தமாநம் வநிதா வநாந்தராத் ।

ப$^{2}$பெ$^{3}$ள நிமேஷாலஸ பக்ஷ்ம பங்தி꞉

உபோஷிதாப்$^{3}$யா மிவலோச நாப்$^{3}$யாம் ॥ 19

(ப-ரை) வஶிஷ்டதே$^{3}$நோ꞉ = வசிட்டரின் பசுவாகிய நந்தினீ தேனுவுக்கு; அநுயாயினம் = பின்பற்றுபவனும்; வந அந்தராத் = காட்டுப் பிரதேசந்திலிருந்து; ஆவதமானம் = வந்துக்கொண் டிருக்கும்; தம் = அந்த திலீபமன்னனை; வநிதா = மிகுந்த அன்பு

கொண்ட சுதக்ஷிணா தேவி; நிமேஷ = கண்ணிமைத்தலால்; அவஸ = மெதுவான; பக்ஷ்ம = இமைகளின்; பங்க்திஸ்ஸதி = வரிசை உடையவளும்; லோசநாப்³யாம் = கண்களால்; உபோஷிதாப்³யாம் இவ = உபவாசம் செய்தவனுடைய செய்கையைப் போன்று; ப²பௌ³ - பருகினாள்.

(க-ரை) நந்தினீ தேனுவின் பின்னால் காட்டிலிருந்து வரும் திலீபமன்னனை மிகுந்த அன்போடு கூடிய சுதக்ஷிணா தேவி, உபவாசஞ் செய்தவர்கள் அதிக தாகத்துடன் தண்ணீர் பருகுவது போல், கண்கொட்டாமல் தன் கண்பார்வையால் அருந்தினாள். அதாவது தன் கணவனை இமைக் கொட்டாது பார்த்துக்கொண்டிருந்தாள். (பதப்பொருட் காட்சியணி)

சு ॥ புரஸ்க்ரிதா வர்த்மநி பார்தி¹வேந

ப்ரத்யுத்²க²தா பார்தி¹வ த³ர்மபத்ந்யா।

தத³ந்தரே ஸா விரராஜ தே³நுஃ

தி²நக்ஷபா மத்³யக²தேவஸந்த்³யா ॥ 20

(ப-ரை) வர்த்மநி - வழியில், பார்தி¹வேந = திலீபமகாராஜனுக்கு, புரஸ்க்ரிதா = முன்னால் வருவதும்; பார்தி¹வ த³ர்மபத்ந்யா = மன்னனுடைய தருமபத்தினியாகிய சுதக்ஷிணா தேவியால், ப்ரத்யுத்²கதா = எதிர்கொண்டதுமாகிய, ஸா = அந்த, தே³நுஃ = நந்தினீபசு, தத் = அந்த சுதக்ஷிணை திலீபர்களுக்கு, அந்தரே = நடுவில், தி²நக்ஷபா = பகல் இரவுகளின், மத்³ய = இடைக்காலத்தை; க²தா = அடைந்த, ஸந்த்³யே = சந்திக்காலத்தைப்போல், விரராஜ = ஒளித்தது.

(க-ரை) திலீப மன்னனுக்கும், எதிர்க்கொண்டழைத்துவரும் சுதக்ஷிணா தேவிக்கும் இடையில் வழி நடந்துவரும், நந்தினி தேனுவானது, பகல் வண்ணம்போன்ற வெண்ணிற ஆடையணிந்த அரசனுக்கும் இரவு வண்ணத்துக்குச் சமமான கறுப்பு (அல்லது நீல) உடையணிந்த அரசிக்கும் இடையில் செந்நிற நந்தினீ தேனு சந்திவேளையின் வண்ணம் போன்று தோன்றுவதாயிற்று. (தொகையுவமையணி)

சு ॥ ப்ரத³க்ஷிணீ க்ரித்ய பயஸ்விநீம் தாம்

ஸுதக்ஷிணா ஸாக்ஷத பாத்ர ஹஸ்தா।

ப்ரணம்ய சாநர்ச விஶால மஸ்யாஃ

ஶ்ரிங்காந்தரம் த்³வாரமிவார்த¹ ஸித்³தே³ஃ ॥ 21

(ப-ரை) ஸ அக்ஷத பாத்ரஹஸ்தா = அட்சதைகள் உள்ள பாத்திரம் ஏந்திய கைகளை உடைய; ஸுதக்ஷிணா = சுதக்ஷிணா தேவி, பயஸ்விநீ = மிகவும் பால் உள்ள, தாம் = அந்த நந்தினீ பசுவை, ப்ரதக்ஷிணீ க்ரித்ய = வலம் வந்து, ப்ரணம்ய = வணங்கி, அஸ்யாः = இந்த நந்தினியின், விசாலம் = நீண்ட, ஶ்ரிங்க[2] = கொம்புகளின், அந்தரம் = நடுவே, அர்த[1]ஸித்[2]தே[3] = எண்ணம் ஈடேறும் பொருட்டு, த்[2]வாரம் இவ = வாயில் போன்று, அநர்ச = பூசை செய்தாள்.

(க-ரை) அக்ஷதைகளிருந்த பாத்திரத்தை கையிலேந்திய சுதக்ஷிணா தேவி பால் மிகுந்த நந்தினீ தேனுவுக்கு வலம்வந்து வணங்கி, அதனுடைய விரிந்து நீண்ட கொம்புகளுக்கிடையில். தன் எண்ணம் ஈடேறும் பொருட்டுப் பூசை செய்தாள். (சிறப்பு நிலையணி)

சு ॥ வத்ஸோத்ஸுகாऽபி ஸ்தி[1]மிதா ஸபர்யாம்
ப்ரத்யக்[2]ர ஹீத் ஸேதி நநந்த[2]துஸ்தெள ।
ப[3]க்த்யோப பந்நேஷு ஹிதத்[2]விதா[3]நாம்
ப்ரஸாத[2] சிஹ்நாநி புரः ப[1]லாநி ॥ 22

(ப ரை) ஸா = அந்த நந்தினீ தேனு, வத்ஸ = கன்றின் மீது, உத்ஸுகா அபி = அலைந்த போதிலும், ஸ்தி[1]மிதா ஸதி = அசையாது, ஸபர்யாம் = பூசையை, ப்ரத்யக்[2]ரஹீத் = ஏற்றுக்கொண்டது, இதி = என்பதால், தெள = அந்த, சுதக்ஷிணா திலீபர்கள், நந்த[2]துः = மகிழ்ந்தனர், ப[3]க்த்யா = பக்தியுடன், உபபந்நேஷு = கூடியுள்ளவர்கள் விஷயமாய், தத்[2]விதா[3]நாம் = அந்த நந்தினியைப்போன்று பெருமையுள்ள, ப்ரஸாத சிஹ்நாநி = அருளின் அறிகுறிகள், புரः ப[1]லாநிஹி = முன்னோடியான பலன்களை உடையன அல்லவா!

(க-ரை) நந்தினி தேனு தன் கன்றை நோக்கிச் சென்று பால் கொடுக்க எண்ணியிருந்த போதிலும், அசையாது அவர்கள் செய்த பூசையை ஏற்றுக் கொண்டது. இதனால் சுதக்ஷிணையும் திலீபனும் மகிழ்வடைந்தனர். பக்தர்கள் சார்பில் நந்தினி தேனுவைப் போன்ற பெருமையுடைய கருணாமூர்த்திகளின் செய்கைகள் முன்னோடியான பலன்களைக் கொடுக்கவல்லவை அன்றோ! (கருத்துடையணி மற்றும் கருத்துடையடைகொளியணி)

கு॥ கு2ரோ ஸ்ஸ த2ாரஸ்ய நிபீட்2ய பாதௌ
ஸமாப்ய ஸாந்த்3யஞ்ச விதி3ம் திலீபः ।
தோஷாவஸாநே புநரேவ தே2ாக்2த்3ரீம்
பே3ஜே பு3ஜோச்சி1ந்நரிபுர் நிஷண்ணாம் ॥ 23

(ப-ரை) பு3ஜ = ஓயாத தோள்வலியால், உச்சி1ந்நரிபுः = மிகுதியின்றி வெட்டப்பட்ட பகைவர்களுடைய, திலீபः = திலீப மன்னன், ஸ்த2ாரஸ்ய = பத்தினியோடு கூடிய, கு2ரோः = ஆசானின், பாதெ2ள = அடிகளுக்கு, நிபீட்2ய = தொழுது, ஸாந்த்3யம் = அந்திப் பொழுதில் செய்யத்தக்க, விதி3ம்ச = அநுட்டானங்களை, ஸமாப்ய = முடித்துக்கொண்டு, தே2ாஹ அவஸாநே = (பால்) கறந்த பின்பு, நிஷண்ணாம் = உட்கார்ந்து அமர்ந்த, தே2ாக்2த்3ரீம் ஏவ = கறவலுற்ற நந்தினி தேனுவை, பே3ஜே = சேவித்தனர்.

(க-ரை) பிறர் உதவியின்றி பகைவர்களை வென்றதால் அச்சமற்ற திலீப மன்னன், பத்தினியுடன் கூடிய வசிட்டரை அடிகள் தொட்டு வணங்கி, மாலை வேளை சந்தியா வந்தனாதிகளை நிறைவேற்றிவிட்டு, பால் கறந்த பிறகும் அந்த நந்தினி பசுவையே சேவித்தனர் (நிகழ்வினவிற்சியணி)

சி॥ தா மந்திக ந்ய ஸ்த ப2லிப்ரதீ2பாம்
அந்வாஸ்ய கோ2ப்தா க்2ரிஹிணீ ஸஹாயः ।
க்ரமேண ஸுப்தா மநுஸம் விவேஶ
ஸுப்தோத்தி1தாம் ப்ராத ரநூத2 திஷ்ட1த் ॥ 24

(ப-ரை) கோ2ப்தா = பசுவைக் காப்பவனாகிய திலீப மன்னன்; க்ரிஹிணீ ஸஹாயஸ்ஸந் = மனைவி துணையாய் வர; அந்திகந்யஸ்த = அருகில் வைக்கப்பட்ட; ப2லி = உணவுகளை; ப்ரதீபாம் = விளக்குகளும் உள்ள; த2ாம் = அவ்வாறு உட்கார்ந்திருக்கும் நந்தினி பசுவை; அந்வாஸ்ய = தழுவியபடி உட்கார்ந்துகொண்டவனாய்; க்ரமேண = முறையே; ஸுப்தாம் = தூங்கிய நந்தினியை; அநுஸம் விவேஶ = பின்பற்றி தூங்கிவிட்டனர்; ப்ராதः = காலையில்; ஸுப்த = தூங்கி; உத்தி1தாம் = எழுந்த நந்தினி பசுவை; அநூத2 திஷ்ட1த் = பின்தொடர்ந்து எழுந்தனர்.

(க-ரை) பசுவைக் காப்பதில் முனைந்த திலீப மன்னன் பத்தினி உதவியால் அந்த நந்தினி பசுவின் அருகில் இருந்து அதன் உணவுகளை விளக்கு வைத்துக் கொண்டு, அதன் செய்கைகளை

தழுவலானான். அதாவது அந்தப் பசு படுக்கும்போது படுத்தும், உறங்கும்போது உறங்கியும், அது துயிலெழும்போது தானும் எழுந்தும் இவ்விதம்— அதனைப் பின்பற்றி வந்தனர். (நிகழ்வின விற்சியணி)

சு॥ இத்த$^{1}$ம் வ்ரதம் த$^{3}$ாரயதః ப்ரஜார்த$^{1}$ம்
ஸமம் மஹிஷ்யா மஹநீய கீர்தேః ।
ஸப்த வ்யதீயு ஸ்த்ரிகுணாநி தஸ்ய
தி$^{2}$நாநி தீ$^{2}$நோத்$^{2}$த$^{3}$ரணோசி தஸ்ய ॥ 25

(ப-ரை) இத்த$^{1}$ம் = இவ்விதமாய்; ப்ரஜார்த$^{1}$ம் = மகப்பேறுக்காக; மஹிஷ்யா ஸமம் = தரும பத்தினி சுதக்ஷிணா தேவியுடன் கூடி; வ்ரதம் = பசுவை சேவிக்கும் விரதத்தை; த$^{3}$ாரயதః = ஏற்றுள்ள; மஹநீய = தொழத்தக்க; கீர்தே = புகழ்வாய்ந்த; தீ$^{2}$ந = எளியோர்களின்; உத்$^{3}$த$^{3}$ாரண = எளிமை போக்குவதில்; உசி தஸ்ய = அறிந்தவனாகிய; தஸ்ய = அந்த திலீப மன்னன்; த்ரிகுணாநி = மும்மடங்குகளாகிய; ஸப்த = ஏழாகிய; தி$^{2}$நாநி = நாட்கள்; வ்யதீயః = கடந்தன.

(க-ரை) இவ்விதமாய் மிக்க புகழ் வாய்ந்தவனாய எளியோரின் எளிமையைப் போக்கவல்லவனாய, திலீப மன்னன், பட்டத்து ராணியுடன் இருபத்தோர் நாட்கள் பசுசேவையைச் செய்தான். (நிகழ்வினை விற்சியணி)

சு॥ அந்யேத்$^{2}$யு ராத்மாநுசரஸ்ய ப$^{3}$ாவம்
ஜிஜ்ஞாஸமாநா முநிஹோம தே$^{3}$நுః ।
க$^{2}$ங்க$^{2}$ா ப்ரபாதாந்த நிரூட$^{1}$ ஶ$^{3}$ாஸம்
கௌ$^{2}$ளீ கு$^{2}$ரோர்க$^{3}$ஹ்வர மாவிவேஶ ॥ 26

(ப-ரை) அந்யேத்$^{2}$யுః = மறுநாள்; முநிஹோமதே$^{3}$நுః = வசிட்ட முனிவருடைய வேள்விப் பசு; ஆத்ம அநுசரஸ்ய = தனக்கு சேவை செய்துவரும் திலீப ராஜனின்; ப$^{3}$ாவம் = எண்ணத்தை; ஜிஜ்ஞாஸமாநா = அறியும் எண்ணங் கொண்டதாய்; க$^{2}$ங்க$^{2}$ா = கங்கையாற்றின்; ப்ரபாத = பாயுமிடத்து; ஆந்த = அருகில்; நிரூட$^{3}$ = முளைத்த; ஶ$^{3}$ாஸம் = இளம் புல்லுடைய; கௌரீ = பார்வதிக்கு; கு$^{2}$ரோః = தந்தையாகிய இமயமலையின்; க$^{2}$ஹ்வரம் = குகைக்குள்; ஆவிவேஶ = பிரவேசித்தது.

(க-ரை) மறுநாள் அதாவது இருபத்து இரண்டாம் நாள் நந்தினீபசு தன்னை பின்பற்றிய திலீபனுடைய பக்தி எவ்வளவு திடமானது என்று அறிய எண்ணியதாய், அவனை சோதிக்கவே, கங்கையாறு பாயும் இடத்திற்கு அருகில் புற்றலைகள் உள்ள இமய மலையின் ஒரு குகைக்குள் நுழைந்தது. (பிரிதாராய்ச்சியணி)

சு ॥ ஸா து²ஷ்ப்ரத⁴ர்ஷா மநஸாऽபி ஹிம்ஸ்த்ரை꞉
ரித்யத்³ரி ஶோபா⁸ ப்ரஹிதேக்ஷணேந।
ஆலக்ஷிதாப்³யுத்பதநோ ந்ரிபேண
ப்ரஸஹ்ய ஸிம்ஹ꞉ கிலதாம் சகர்ஷ॥ 27

(ப-ரை) ஸா = அந்த நந்தினிபசு; ஹிம்ஸ்த்ரை꞉ = புலிமுதலிய கொடிய மிருகங்களால்; மநஸாபி = மனதாலும்; து²ஷ்ப்ரத⁴ர்ஷா = தூக்கத்தாலும் அசட்டைசெய்துவிட முடியாதது; இதி = இதனால்; அத்¹ரி = இமயத்தின்; ஶோபா³ = ஒளியில்; ப்ரஹித = வைக்கப்பட்ட; ஈக்ஷணோ = பார்வைகள் உடைய; ந்ரிபேண = திலீப மன்னனால்; அலக்ஷித = பாராமலிருக்கும்; அப்³யுத்பதந꞉ = எதிரில் குதித்தெழுந்த; ஸிம்ஹ꞉ = சிங்கம்; தாம் = அந்த நந்தினி தேனுவை; ப்ரஸஹ்ய = நிர்பந்தமாக; சகர்ஷ கில = இழுத்தது அன்றோ!

(க-ரை) அந்தப்பசு புலிமுதலிய கொடிய மிருகங்களால் வெல்லக் கூடாதது என்று எண்ணி, இமயத்தின் ஒளியைப்பார்த்துக் கொண்டிருந்த திலீபமன்னனால் அறியப் படாமல் ஒரு சிங்கம் அந்தப் பசுவின்மீது விழுந்து அதை கட்டாயமாக இழுத்தது. (மேன்மேலுயற்சியணி)

சு ॥ ததீ²ய மாக்ரந்தி²த மார்தஸாதோ⁴꞉
குஹா நிப³த்³த⁴ ப்ரதி ஶப்³த³ தீ³ர்க⁴ம்।
ரஸ்மி ஷ்விவாத³ாய நகே³ந்த்³ர ஸக்தாம்
நிவர்தயாமாஸ ந்ரிபஸ்ய த்³ரிஷ்டம் ॥ 28

(ப-ரை) கு³ஹாநிப³த்³த⁴ = குகைகளில் கட்டப்பட்ட; ப்ரதிஶப்³த³ = மாற்றொலியால்; தீ³ர்க⁰ = நீண்ட; ததீ³யம் = அந்த நந்தினீ தேனுவின்; ஆக்ரந்தி²தம் = கத்துதல்; ஆர்த = ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டவர்கட்கு; ஸாதோ⁴꞉ = இதமானதைச் செய்யும் ந்ரிபஸ்ய = திலீபமன்னனுடைய; நகே³ந்த்³ரஸக்தாம் = இமயத்தைச் சார்ந்த; த்³ரிஷ்டிம் = பார்வையை; ரஸ்மிஷு = வலிக்கயிற்றால்;

அத2ா யேவ=பெற்றுக்கொண்டதோ வென்பதுபோல்; நிவர்தயா மாஸ=திருப்பியது.

(க-ரை) குகையில் எழுந்த எதிரொலியால், கொடுமை செய்யப் படும் அந்த பசுவின் கத்தலானது, ஆபத்தில் அகப்பட்டவர்கட்கு உதவும் திலீபமன்னனுடைய, மலைமீது பட்டிருந்த பார்வையானது வலிக்கயிற்றை இழுத்ததுபோன்று பின்னுக்கு இழுத்தது. அதாவது அந்த பசுவின் பரிதாபமான ஓசை கேட்டவுடன் அவ்வரசன் திரும்பிப்பார்த்தான். (முறையிலுயர்வு நவிற்சியணி)

சு ॥ ஸ பாடலாயாம் க2வி தஸ்தி1வாம்ஸம்
த3நுர்த3ர: கேஸரிணம் த2த2ர்ஶ ।
அதி3த்ய காயாமிவ த3ாது மய்யாம்
லோத்3ர த்2ருமம் ஸாநுமத: ப்ரபு1ல்லம ॥ 29

(ப-ரை) த3நுர்த3ர: = வில்லேந்திய; ஸ: = அந்த திலீப மன்னன்; பாடலாயாம் = செந்நிறமுள்ள; க2வி = பசுவின் மீது; தஸ்தி1வாம்ஸம் = இருக்கும்; கேஸரிணம் = சிங்கத்தை; ஸாநுமத: = மலையின்; த3ாதுமய்யம் = தாதுக்களின் வேறுபாடுகள்; அதி3த்ய காயாம்இவ = நிலத்தின் மேல் உள்ள; ப்ர1புல்ல = மலர்ந்த; லோத்3ரத்2ருமமிவ = லோத்திரமென்னும் மரத்தைப்போன்று; த2த2ர்ஶ = பார்த்தான்.

(க-ரை) வில்லாளனாகிய திலீபமன்னன் மலைக் குகைக்குள் சிவந்த நந்தினியின்மீது தோன்றும் வெண்மையான சிங்கத்தைக் கண்டான். அது காவியெனும் தாதுப்பொருள்கள் அடங்கிய மலைமீது விரிக்கப்பட்ட, லோத்திர மரம் போன்று இருந்தது. (உவமையணி)

சு ॥ ததோ ம்ரிகே2ந்த்2ரஸ்ய ம்ரிகே2ந்த்2ரக2ாமீ
வத3ாய வத்3யஸ்ய ஶரம் ஶரண்ய: ।
ஜாதாபி3ஷங்கே2ா ந்ரிபதிர் நிஷங்க2ாத்
உத்2த3ர்து மைச்ச1த் ப்ரஸபே3ாத்2 த்3ரிதாரிவ ॥ 30

(ப-ரை) தத: = சிங்கத்தைக் கண்ட பின்பு; ம்ரிகே2ந்த்2ரக2ாமீ = சிங்கம் போன்று நடக்கும்; ஶரண்ய = காப்பதில் பழகிய; ப்ரஸப3: = கட்டாயமாக; உத்2த்3ரித = கொல்லப்பட்ட; அரி: = பகைவருள்ள; ந்ரிபதி: = திலீபமன்னன்; ஜாத = பிறந்த; அபி3ஷங்க2ஸ்ஸந் =

அவமானமுடையவனும்; வத்3யஸ்ய = கொல்லத்தக்க; ம்ரிகே2ந்த்2ரஸ்ய = சிங்கத்தை; வத3ாய = கொல்வதற்கு; நிஷங்க3ாத் = அம்புராப் பொதியிலிருந்து; ஶரம் = பாணங்களை; உத்3த3ர்தும் = எடுக்க; ஐச்ச1த் = விரும்பினான்.

(க-ரை) அரசன் தன்னை மதியாமல் பசுவின்மீது விழுந்த சிங்கத்தைக் கொல்ல அம்பை எடுக்க முயன்றான். (குணத்தால் குணமுண்டாகா விகழ்சியணி)

சு ॥ வாமேதரஸ் தஸ்ய கரঃ ப்ரஹர்துঃ
நக1 ப்ரயா ரூஷித கங்க பத்ரே ।
ஸக்தாங்கு2ளிஸ் ஸாயக புங்க1 ஏவ
சித்ரார்பிதாரம்ப3 இவாவதஸ்தே1 ॥ 31

(ப-ரை) ப்ரஹர்துঃ = தாக்குவதில் கைதேர்ந்த; தஸ்ய = அந்த திலீபனுடைய; வாமேதரঃ = வலதுகை; நக1ঃ = நகங்களின்; ப்ரப3ா = ஒளியால்; ரூஷித = அடர்ந்த; கங்க = ஒருவிதப் பறவையின்; பத்ரே = சிறகுகள் உடைய; ஸாயக = பாணத்தின்; புங்க1 ஏவ = மூலப் பிரதேசத்திலிருந்து; ஸக்தாங்கு2ளிஸ்ஸந் = தொடப்பட்ட விரல்கள் உடையதாய்; சித்ர = ஓவியத்தில்; அர்பித = எழுத்தப்பட்ட; ஆரம்ப3 இவ = அம்புகளை எடுப்பதுபோன்று; அவதஸ்தே1 = இருந்தது.

(க-ரை) திலீப மன்னனுடைய கை அம்புராப் பொதியிலிருந்து வரும் அம்புகளை எடுக்க முயன்றது ஓவியத்தில் எழுதப்பட்ட சித்திரம்போல் நகரமுடியாமல் இருந்துவிட்டது. (விரியுவமையணி)

சு ॥ பா2ஹுப்ரதிஷ்டம்ப3 விவ்ரித்3த3 மந்யுঃ
அப்3யர்ண மாக2ஸ் க்ரித மஸ்ப்ரிஶத்2பி3ঃ ।
ராஜா ஸ்வதேஜோபி3 ராத1ஹ்ய தாந்தঃ
போ3கீ2வ மந்த்ரௌஷத3 ருத்3த3 வீர்யঃ ॥ 32

(க-ரை) பா2ஹு = தோள்களின்; ப்ரதிஷ்டம்ப3 = அசைவின்மையால்; விவ்ரித்3த3 = மிகுதியான; மந்யுঃ = கோபமுண்டாய; ராஜঃ = திலீப மன்னன்; மந்த்ரௌஷத3ருத்3த2 வீர்யঃ = மந்திரத்தாலும், மருந்தாலும் தடுக்கப்பட்ட வலிமையுடைய; போ3கீ2வ = நாகம் போன்று; அப்3யர்ணம் = அருகில் உள்ள; ஆக2ஸ்க்ரிதம் = குற்றமுள்ள; அஸ்ப்ரிஶத்2பி3ঃ = தொடாமலுள்ள; ஸ்வதேஜோபி3ঃ = தனது ஒளியால்; அந்தঃ = தனக்குள்ளே; ஆத2ஹ்யத = எரிக்கப் பட்டான்.

(க-ரை) திலீப மன்னன் அருகில் உள்ள அபகாரியாகிய சிங்கத்தின்மீது தன் வலிமையை பயன்படுத்த முடியாமல், மந்திரத்தாலும், மருந்தாலும் கட்டுப்படுத்தப்பட்டு செயலிழந்து கடத்துக்குள் அடக்கப்பட்ட நாகம் எவ்வாறு கோபத்தால் தனக்குள்ளேயே எரிந்து நிற்குமோ, அதுபோன்று மிகுந்த கோபம் உடையவனானான். (உவமையணி)

சு ॥ தமரர்ய க்²ரிஹ்யம் நிக்²ரிஹீத தே³நுః
மநுஷ்யவாசா மனுவம்ஶ கேதும் ।
விஸ்மாயயந் விஸ்மித மாத்மவ்ரித்தௌ
ஸிம்ஹோரு ஸத்வம் நிஜக²ாத³ ஸிம்ஹః ॥ 33

(ப-ரை) நிக்²ரிஹீததே³நுః = வருத்தப்பட்ட நந்தினிதேனுவை உடைய; ஸிம்ஹః = சிங்கம்; ஆர்யக்²ரிஹ்யம் = நல்லார்களின் ஒரு தலையாய; மனுவம்ஶகேதும் = மனுவின் மரபிற்கு சின்னமாகிய, ஸிம்ஹ உருஸ்த்வம் = சிங்கம் போன்று மிக்க வலிமையுடைய ஆத்மவ்ரித்தௌ = தன் தோள் வலி செயலற்றமைக்கு; விஸ்மிதம் = வியந்தவனாகிய; தம் = அந்த திலீப மன்னனிடம்; மநுஷ்யவாசாம் = மானிடவாக்குகளால்; விஸ்மாய யந்ஸ்ந் = வியப்படையுமாறு நிஜகா²த³ = கூறியது.

(க-ரை) நல்லார்க் கொருதலையாய் நிற்பவனும், மனுவம்சத்தின் கொடிமரம் போன்றுள்ளவனும், சிங்கம் போன்ற தன் தோள் வலி செய்கையற்றமைக்கு வியந்தவனும் ஆகிய அந்த திலீப மன்னனைக் கண்டு, நந்தினியைப் பிடித்துள்ள சிங்கமானது அவன் வியக்கும்படியாக மனித வாக்குகளால் கூறத் தொடங்கியது. (உவமையணி)

சு॥ அலம் மஹீபால தவ ஶ்ரமேண
ப்ரயுக்த மப்யஸ்த்ரமிதே வ்ரித¹ா ஸ்யாத் ।
ந பாத²போந்மூல நஶக்திரம்ஹந்
ஸிலோச்சயே மூர்சதி மாருதஸ்ய ॥ 34

(ப-ரை) ஹேமஹீபால = ஓ அரசே! தவ = உன்னுடைய; ஶ்ரமேண = சிரமம்; அலம் = போதும்! இதः = என்னிடம்; ப்ரயுக்தம் அபி = விடப்பட்ட; அஸ்த்ர = அம்பானது; வ்ரித¹ா = வீணானது; ஸ்யாத் = ஆகும்; தத¹ாஹி = அதுசரி; பாத²பஉந்மூலந = மரங்களை நாசப்படுத்துவதில்; ஶக்தி = திறமை வாய்ந்த; மாருதஸ்ய = வாயு

வின்; ரம்ஹ꞉=வேகமானது; ஶிலோச்சயே=மலையினிடம்; நஹி ஶக்தி=பாயாது.

(க-ரை) ஓ, திலீப மன்னா! நீ சிரமங்கொள்ளத் தேவையில்லை; தற்போது என்மீது அம்பு பாய்ச்சினாலும் வீணே ஆகும். மரங்களைப் பெயர்த்து நாசப்படுத்தக் கூடிய காற்றின் வேகமானது மலையினிடம் பயன்படுத்த முடியாதன்றோ? (இகழ்வினவிற்சியணி)

சு॥ கைலாஸ கௌ²ரம் வ்ரிஷ மாருருக்ஷோ꞉
பாதா²ர்ப்பணாநுக்³ரஹ பூதப்ரிஷ்ட²ம்।
அவேஹிமாம் கிங்கர மஷ்டமூர்த்தே꞉
கும்போ³த³ரம் நாம நிகும்ப³ துல்யம் ॥ 35

(ப-ரை) கைலாஸ கௌ²ரம்=கயிலைப் போன்ற தூய்மையான வ்ரிஷப³ம்=எருதை; ஆருருக்ஷோ꞉=ஏற நினைத்த; அஷ்டமூர்த்தே꞉=பரமசிவனுடைய; பாத² அர்பண=அடிகளை வைத்தலென்னும் கருணையால்; பூதப்ரிஷ்ட²ம்=புனிதத் தன்மையடைந்த முதுகுடைய; நிகும்ப³துல்யம்=நிகும்பன் என்பவனுக்கு நிகரான; கும்போ³தரம்நாம=கும்போதரன் என்னும் பெயருடைய; மாம்=என்னை; கிங்கரம்=பரமசிவனுடைய சேவகன் என்பதை; ஆவேஹி=அறிவாயாக.

(க-ரை) வெள்ளிமலைப் போன்ற தூய்மையான வெண்ணிற நந்தி மீது ஏற விரும்பும் சிவனுடைய பாதங்கள் அவருடைய அனுக்கிரகத்தால் வைக்கப்பட்டுத் தூய்மையான முதுகுடைய என்னை ஈசனுடைய சேவகனென்றும் நிகும்பன் என்பவனுக்கு நிகரான கும்போதரன் என்பவன் என்று தெரிந்துகொள். (விரிவுவமையணி)

சு॥ அமும் புர꞉ பஶ்யஸி தே³வதா³ரும்
புத்ரீக்ரிதோ஽ஸௌ வ்ரிஷப³ த்³வஜேந।
யோ ஹேம கும்ப³ ஸ்தந நிஸ் ஸ்ரிதாநாம்
ஸ்கந்த³ஸ்ய மாது꞉ பயஸாம் ரஸஜ்ஞ꞉ ॥ 36

(ப-ரை) புர꞉=முன்னாலிருக்கும்; அமும்=இந்த; தே³வதா³ரும்=தேவதாரமென்னும் மரத்தை; பஶ்யஸி=காண்கின்றாயல்லவா; அஸௌ=இந்த மரமானது; வ்ரிஷப³த்³வஜேந=பரமசிவனால்; புத்ரீக்ரித꞉=மகனைப் போல் சுவீகாரம் செய்யப்பட்டது; ய꞉=எந்த

(தேவதாரு) மரமானது; ஸ்கந்த3ஸ்ய = குமாரஸ்வாமிக்கு; மாதுঃ = தாயாகிய பார்வதி தேவியின்; ஹேமகும்ப3 தந = பொற்குடங்கள் போன்ற கொங்கைகளிலிருந்து; நிஸ்ஸ்ரிதாநாம் = ஒழுகிய; பய ஸாம் = பாலின், (தண்ணீரின்); ரஸஜ்ஞ = சுவையை அறிந்துள்ளது (ஆ்தா)

(க-ரை) அரசே! இதோ எதிரில் உள்ள தேவதாரு மரத்தைக் காண்கின்றாயல்லவா? இது பரமசிவனால் மகன் போன்று வளர்க்கப் பட்டது. குமாரசுவாமியின் தாயாகிய பார்வதி அம்மையின் முலை யிலிருந்து சுரந்த பாலின் சுவை அறிந்ததாகும் (தொடர்புயர்வு நவிற்சியணி)

சு ॥ கண்டூ2யமாநேந கடம் கதா1சித்
வந்யத்2விபேநோந் மதி1தா த்வக2ஸ்ய।
அதை1வ மத்ரே ஸ்தநயா ஶுசோச
ஸேநாந்ய மாலீட3 மி வாஸுர ராஸ்த்ரைঃ ॥ 37

(ப-ரை) கதா1சித் = முன்பு ஒருபோது; கடம் = கன்னத்தை கண்டூ2யமாந = சொறிந்துகொண்டிருந்த; வந்யத்விபேந = காட்டு யானையால்; அஸ்ய = இந்த தேவதாரு மரத்தின்; த்வக் = பட்டை; உந்மதி1 = காயப்படுத்தப்பட்டது (தேய்க்கப்பட்டது); அத1 = பிறகு; அத்3ரேঃ தநயா = இமவான் மகளாகிய பார்வதி; அஸுர அஸ்த்ரைঃ = அரக்கர்களின் அம்புகளால்; ஆலீட3ம் = தாக்கப்பட்ட; ஸேநாந்யம் இவ = குமாரஸ்வாமியைப் போன்று; ஏநம் = இம்மரத் திற்காக; ஶுசோச = வருந்தினாள்.

(க-ரை) முன்பு ஒருபோது காட்டு யானை ஒன்று இந்த மரத் தின் மீது தன் கன்னத்தைத் தேய்த்துக் கொண்டதால் அதன் பட்டை பழுதாயிற்று; அதை கண்ணுற்ற பார்வதி தேவி முருகன் அரக்கர்களின் அம்புகளால் அடியுண்டபோது அடைந்த துயரம் போன்று துயருற்றாள். (உருவகவுயர்வு நவிற்சியணி)

சு ॥ தத2 ப்ரப்3ரித்யேவ வந த்விபாநாம்
த்ராஸார்த1 மஸ்மிந்நஹ மத்2ரிகுக்ஷௌ।
வ்யாபாரித ஶ்ஶூலப்3ருதா வித3ாய
ஸிம்ஹத்வ மங்காக2த ஸத்வ வ்ரித்திঃ ॥ 38

(ப-ரை) தத²ா ப்ரப்³ரித்யேவ = அது முதற்கொண்டு; வநத்³விபாநாம் = காட்டு யானைகளின்; த்ராஸார்த்¹ம் = பயத்திற்காக; ஶிலப்³ரிதா = பரமசிவனால்; அங்க ஆக²த = அருகில்வந்த; ஸத்வ = பிராணிகளையே; வ்ரித்தி = உணவாகக் கொண்டுவாழ; சிம் ஹத்வம் = சிங்க வடிவுடன்; வித²ாய = இருக்கச் செய்து; அஸ்மிந் = இந்த; அத்²ரி குக்ஷெள = மலைக்குகையில்; அஹம் = நான்; வ்யாபாரிதஃ = நியமிக்கப்படுள்ளேன்.

(க-ரை) அது முதற்கொண்டு ஈசனார் காட்டுயானைகளின் பயத்திற்காக, எனக்கிந்த சிங்க உரு கொடுத்து, இம்மரத்தை யண்டிவரும் விலங்குகளையே உணவாகக் கொண்டு, என்னை இம்மலைக் குகைக்குள் இருந்துவர நியமித்தார். (நிகழ்வினவிற் சியணி)

சு ॥ தஸ்யாலமேஷா க்ஷுதி³தஸ்யத்ரிப்த்யை
ப்ரதி²ஷ்டகாலா பரமேஶ்வரேண ।
உபஸ்தி¹தா ஶோணித பாரணாமே
ஸுரத்³விஷ ஶ்சாந்த்³ரமஸீ ஸுதே³வ ॥ 39

(ப-ரை) பரமேஶ்வரேண = பரமசிவனால்; ப்ரதி²ஷ்டகாலா = நிச்சயிக்கப்பட்ட உணவு வேளையில்; உபஸ்தி¹தா = கிடைத்த; ஏஷா = இந்தப் பசுவின்; ஶோணித = ரத்தத்தின்; பாரணா = பாரணையானது; ஸுரத்³விஷஃ = ராகுவின்; த்ரிப்த்யை = மன நிறைவுக்காக; சாந்த்³ரமஸீ = சந்திரனின்; ஸுதே³வ = அமுது போன்று; க்ஷுதி³தஸ்ய = பசியுண்ட; தஸ்யமே = எனது; த்ரிப்த்யை = மனநிறைவுக்காக; அலம் = போதுமானது.

(க-ரை) பரமசிவனால் நிச்சயிக்கப்பட்ட உணவுவேளையில் அகப்பட்ட இப்பசுவின் ரத்தங் குடித்துப் பசிநீங்குதலானது ராகுவிற்கு சந்திரனுடைய அமுது கிடைப்பதால் உண்டான மன நிறைவு போன்று, பசியுற்றிருக்கும் எனக்கு மனநிறை வளிக்கிறது. (விரியுவமையணி)

சு ॥ ஸத்வம் நிவாதஸ்வ விஹாய லஜ்ஜாம்
கு²ரோர் ப²வாந் த²ர்ஶித ஶிஷ்ய ப³க்திஃ।
ஶஸ்த்ரேண ரக்ஷ்யம்ய த²ஶக்ய ரக்ஷம்
நத த்²யஶஶ் ஶஸ்த்ர ப்³ரிதாம் க்ஷிணோதி ॥ 40

(ப-ரை) ஸঃ = அப்படிப்பட்ட; த்வம் = நீ; லஜ்ஜாம் விஹாய = வெட்கம்விட்டு; நிவர்தஸ்வ = திரும்பிவிடு; ப³வாந் = நீ; கு²ரோঃ = குருவுக்கு; த²ர்ஶித = காண்பிக்கும்; ஶிஷ்ய = சீடனுடைய; ப³க்திঃ = அன்புகொண்டுள்ளவன்; ரக்ஷ்யம் = காக்கத்தக்க; யத் = எந்தப் பொருளானது; ஶஸ்த்ரேண = படையால்; அஶக்ய ரக்ஷம் = காப்பாற்ற முடியாமற் போயிற்றோ; தத் = அந்தப் பொருள்; ஶஸ்த்ரப்³ரிதாம் = வில்லாளர்களின்; யஶঃ = புகழை நக்ஷிணோதி = போக்காது.

(க-ரை) அரசே! உபாய மறியா நீ வெட்கம் விட்டுத் திரும்பிப் போவாயாக. நீ ஆசானிடம் அன்பு கொண்டவனே. காக்கக்கூடிய பொருளானது படைவலிமையால், காக்கக் கூடாது போகக்கூடிய தடை உண்டாகி, இயலாது போகும்போது, படையேந்தியவர் களுக்குப் புகழைத் தாழ்த்தாது. (எதிர்மறையணி)

ஃ ॥ இதி ப்ரக²ல்ப³ம் புருஷாதி³ராஜோ
ம்ரிகாதி³ ராஜஸ்ய வசோ நிஶம்ய ।
ப்ரத்¹யாஹதாஸ்த்ரோ கி²ரிஶப்ரப³ாவாத்
ஆத்மந் யவஜ்ஞாம் ஶிதி²லீ சகார ॥ 41

(ப-ரை) புருஷாதி³ராஜঃ = திலீப மன்னன்; இதி = இவ்வாறு கூறிய; ப்ரக²ல்ப³ம் = ஆகுலமாண; ம்ரிக²ாதி³ராஜஸ்ய = சிங்கத்தின் வசঃ = வார்த்தைகளை; நிஶம்ய = கேட்டு; கி²ரிஶ = பரமசிவனுடைய ப்ரப³ாவாத் = மகிமையால்; பரத்யாஹத = அடிக்கப்பட்ட; அஸ்த் ரஸ்ஸந் = ஆயுதங்களுடையவனாய்; ஆத்மநி = தன்னைப்பற்றிய; அவஜ்ஞாம் = அவமான்தைதை; ஶிதி³லீ சகார = விட்டுவிட்டான்.

(க-ரை) பேரரசன், இவ்வாறு ஆகுலத்துடன் கூறிய சிங்கத்தின் மொழிகளைக் கேட்டு, ஈசனின் மகிமையால், தனது படைவலிமை பலியாமற் போனதற்காக மனதில் அவமானமாக எண்ணவில்லை. (வனப்புநிலையணி)

ஃ ॥ ப்ரத்யப்²ரவீச்சைவ மிஷுப்ரயோகே²
தத்பூர்வ ஸங்கே² விதத¹ ப்ரயத்நঃ ।
ஜட²க்ரிதஸ் த்ர்யம்பக² வீக்ஷணேந
வஜ்ரம் முமுக்ஷுந் நிவ வஜ்ரபாணி ॥ 42

(ப-ரை) தத் = அந்த; பூர்வஸங்கே2 = முதல் தடையாக; இஷுப்ரயோகே2 = பாணத்தை விடுவதில்; விதத1ப்ரயத்நः = பயனற்றுப் போனதால் சோர்வுற்றவனாதலால்; வஜ்ரம் = வஜ்ராயுதத்தை; முமுக்ஷுந் = விடுதற்கெண்ணிய; த்ர்யம்ப2க வீக்ஷணேந = பரமசிவனின் பார்வையால்; ஜட2க்ரிதः = உணர்வற்று நின்ற; வஜ்ரபாணிः இவஸ்தி1தः = தேவேந்திரனைப்போல் உள்ள; ந்ரிபः = திலீப மன்னன்; ஏநம் = இந்த சிங்கத்தைக்கண்டு; ப்ரத்யப்2ரவீச்ச = பதில் கூறலானான்.

(க-ரை) ஈசனுடைய பார்வையால் செயலற்றுப்போன தோள் வலியுடைய இந்திரனைப்போல், அம்பெய்தலின் வீண் முயற்சியடைந்த திலீப மன்னன் சிங்கத்தை நோக்கிப் பதில் கூறலானான், (உவமையணி)

சு॥ ஸம்ருத்2த3 சேஷ்டஸ்ய ம்ரிகே2ந்த்2ர காமம்
ஹாஸ்யம் வசஸ்தத்2 வத2ஹம் விவக்ஷுः।
அந்தர்க2தம் ப்ராணப்3ரிதாம் ஹிவேத2
ஸர்வம் ப3வாந் ப3ாவ மதோऽபி3 த3ாந்யே॥ 43

(ப-ரை) ஹே, ம்ரிகே2ந்த்2ர = ஏ, சிங்கமே; ஸம்ரித்2த3 சேஷ்டஸ்ய = அடங்கிய செய்கைகள் உடைய; மம = எனது; தத்வசः = அந்த சொற்கள்; காமம் = மிக; ஹாஸ்யம் = பரிகஸிக்கக்கூடியவை; யத் = எந்த (வாக்கை); அஹம் = நான்; விவக்ஷுः = சொல்ல நினைத்தேனோ; ஹி = எக்காரணத்தால்; ப3வாந் = நீ; ப்ராணப்3ரிதாம் = பிராணிகளுடைய; அந்தர்க2தம் = மனதிலடங்கிய; ஸர்வம் = சகலமன; ப3ாவம் = எண்ணங்களை; வேத2 = தெரிந்துகொள்வாயோ அதः = அக்காரணத்தால்; அபி3த2ாஸ்யே = சொல்வேன்.

(க-ரை) ஏ, சிங்கமே! அடங்கிய சேட்டைகளுடைய நான் சொல்லும் வார்த்தைகள் பரிகாசம் செய்யத் தக்கவையே ஆனாலும், நீ பிறருடைய குறிப்பறிந்து அவர்களின் மனத்தடங்கிய எண்ணங்களை அறியும் திறன் படைத்துள்ளாய்; ஆதலின், எனது எண்ணத்தைச் சொல்கிறேன். (முரண்விளைந்தழிவணி)

சு॥ மாந்யஸ்ஸ மே ஸ்த1ாவர ஜங்க2மாநாம்
ஸர்க2ஸ்தி1தி ப்ரத்யவஹார ஹேதுः।
கு2ரோ ரபீத2ம் த3நமாஹி தாக்2நேः
நஸ்யத் புரஸ்தாத் அநுபேக்ஷணீயம்॥ 44

(ப-ரை) ஸ்த$^{1}$ாவர=செடிகொடிகள் முதலிய அசையாதவைகளும்; ஜங்க$^{2}$மாநாம்=அசைகின்றவாகிய விலங்குகள் மானிடர் முதலியவற்றின்; ஸர்க$^{2}$=பிறப்பிற்கும்; ஸ்தி$^{1}$தி=காப்பதற்கும்; ப்ரத்யவஹார=அழிப்பதற்கும்; ஹேதுஃ=காரணமாயுள்ள; ஸஃ=பரமேசுவரன்; மே=எனக்கு; மாந்யஃ=தொழத்தக்கவர்; புரஸ்தாத்=முன்பாக; நஶ்யத்=நாசமாக்கக் கூடிய; இத$^{2}$ம்=இந்தப் பசு வடிவுள்ள; அக்$^{3}$நேஃ=கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னிகளைவுடைய; கு$^{2}$ரோஃ=ஆசிரியரான வசிட்டருடைய; த$^{3}$நமபி=கைப்பொருளை; அநுபேக்ஷணீயம்=உதாசீனம் செய்வதற்கில்லை.

(க-ரை) சராசரங்களின் ஆக்கல், காத்தல், அழித்தலாகிய முக்காரியங்கட்குக் காரணமாகவுள்ள ஈசன் எனக்குத் தொழத்தக்கவர். மூவன்னிகளுடைய எனது குருநாதரின் கைப்பொருளாகிய இதோ நிற்கும் இப்பசு நாசமடைந்துக்கொண்டிருக்கையில் நான் அதைப் பார்த்துக் கொண்டிருக்கவும் உதாசீனஞ் செய்வதற்கும் இல்லை. (ஏதுவணி)

சு ॥ ஸத்வம் மதீ$^{2}$யேந ஶரீர வ்ரித்திம்
தே$^{2}$ஹேந நிர்வர்தயிதும் ப்ரஸீத$^{2}$ ।
தி$^{2}$நாவஸா நோத்ஸுக பா$^{2}$ல வத்ஸா
விஸ்ரிஜ்யதாம் தே$^{3}$நுரியம் மஹர்ஷேஃ । 45

(ப-ரை) ஸஃ=அம்மாதிரியான; த்வம்=நீ; மதீ$^{2}$யேந=எனது; தே$^{2}$ஹேந=உடலினால்; ஶரீரவ்ரித்திம்=உன்னுடலில் எழுந்த பசியை; நிவர்தயிதும்=நீக்கிக் கொள்ள; ப்ரஸீத$^{2}$=இரங்குவாய்; தி$^{2}$நஅவஸாந=அந்தி வேளையில்; உத்ஸுக=உற்சாகத்துடன் கூடிய; பா$^{2}$ல வத்ஸா=இளங்கன்றையுடைய; மஹர்ஷேஃ=மகாரிஷியினுடைய; இயம்=இந்த; தே$^{3}$நுஃ=நந்தினி தேனுவை; விஸ்ரிஜ்யதாம்=விடுவிக்கப்படுவது ஆகுக.

(க-ரை) சிங்கமே! எந்தனுடலைக் கொண்டு நீ உந்தன் பசியைப் போக்கிக்கொள்ள இரங்குவாயாக. மாலை வேளையில் ‘‘என் தாய் வருவாள்’’ என மிகுந்த உற்சாகத்துடன் எதிர்நோக்கி நிற்கும் இளங்கன்றையுடைய இப்பசுவாகிய நந்தினியை விடுவாய். (ஏதுவணி)

சு ॥ அத²ாந்த⁴காரம் கி²ரிக³ஹ்வ ராணாம்
த³ம்ஷ்ட்ரா மயூகை²: ஶகலாநி குர்வந் ।
பூ⁴யஸ் ஸபூ⁴தே ஶ்வர பார் ஶ்வ வர்தீ
கிஞ்சித்¹ விஹஸ்யார்த¹பதிம் ப³ப⁴ாஷே ॥ 46

(ப-ரை) அத²: = பிறகு; பூ⁴தேஶ்வர = பரமேசுவரனுக்கு; பார்ஶ்வவர்தீ = கிங்கரனான; ஸ: = அச் சிங்கமானது; கி²ரிக³ஹ்வராணாம் = இமயத்திலிருக்கும் குகையின்; அந்த⁴காரம் = இருளை; த³ம்ஷ்ட்ரா = கோரைப் பற்களின்; மயூகை²: = ஒளியால்; ஶகலாநி = துகள்களாக; குர்வந்ஸந் = செய்பவனாய்; கிஞ்சித் = கொஞ்சம்; விஹஸ்ய = சிறித்துவிட்டு; அர்த²பதிம் = திலீப மன்னனைக் கண்டு; பூ⁴ய: = மறுபடியும்; ப³ப⁴ாஷே = கூறியது.

(க-ரை) ஈசனுடைய ஏவலாளனாகிய அந்த சிங்கம் இமயத்தின் குகையிலுள்ள இருளைப் போக்கவல்ல, ஒளிமிகுந்த தனது கோரைப் பற்கள் அகப்பட சற்றே சிறித்துவிட்டு, மேலும், அம்மன்னனைக் கண்டு மறுபடியும் கூறலாயிற்று. (உருவகவுயர்வு நவிற்சியணி)

சு ॥ ஏகாதபத்ரம் ஜக³த: ப்ரபு⁴த்வ
நவம் வய: காந்த மித³ம் வபு ஶ்ச ।
அல்பஸ்ய ஹேதோர் ப³ஹு ஹாது மிச்ச¹ந்
விசார மூட⁴: ப்ரதிப⁴ாஸி மே த்வம் ॥ 47

(ப-ரை) ஏக ஆதபத்ரம் = இரண்டற்றகுடையை உடைய; ஜக³த: = உலகின்; ப்ரபு⁴த்வம் = ஆட்சியை; நவம் = புதிய; வய: = இளமை; காந்தம் = அழகான; இத³ம் = இந்த; வபு: = உடலை; ப³ஹு = பலவற்றை; அல்பஸ்ய = சொற்பமான; ஹேதோ: = பலனை நோக்கி; ஹாதும் = விடுவதற்காக; இச்ச¹ந் = எண்ணும்; த்வம் = நீ; மே = எனக்கு; விசார = நன்மை தீமை காரியங்களை விமரிசனம் செய்வதில்; மூட⁴: = மடத்தனமுடையவனாக; ப்ரதிப⁴ாஸி = தோன்றுகின்றாய்.

(க-ரை) ஒரே குடையின் கீழுள்ள உலகனைத்தையும் ஆட்சி செய்யும் நீ, புது இளமையும் அழகிய உடல் முதலியன உள்ள அவற்றாலாகக் கூடிய நன்மை தீமைகள் விசாரணை செய்து, சொற்ப மான பலனை நோக்கி, அவற்றையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, மடமையுள்ளவன் போல் தோன்றுகிறாய். (வஞ்சனவிற்சியணி)

சு॥ பூ³தாநுகம்பா தவ சேத் இ³யம் கௌ³ஃ

ஏகா ப⁴வேத் ஸ்வஸ்திமதீ த்வத³ந்தே ।

ஜீவந் புநஃ ஶஶ்வ து³பப்லவேப்⁴யஃ

ப்ரஜாஃ ப்ரஜாநாத² பிதேவ பாஸி ॥ 48

(ப-ரை) தவ = உனக்கு; பூ³த அநுகம்பாத் = பிராணிகளிடத்தில் அன்புண்டேல்; த்வத் அந்தே³ஸதி = உனக்கு நாசம் ஏற்பட்டுக் கொண்டிருக்க; ஏகா = ஒன்றாகிய; இயம் கௌ³ஃ = இந்த நந்தினி பசு; ஸ்வஸ்திமதீ = நலம் பெற்றுள்ளது; ப⁴வேத் = ஆயிற்று; ஹே ப்ரஜாநாத² = ஓ அரசனே! த்வம் = நீ; ஜீவந் புநஃ = உயிர்த்திருப்பாயாகில்; பிதேவ = உன் தகப்பனார் போன்று; ப்ரஜா = குடிகளை; உபப்லவேப்⁴யஃ = உபத்திரவங்களினின்று; ஶஶ்வத் = எப்போதும் பாஸி = காப்பாற்றுவாய்.

(க-ரை) நீ உன்னுயிரைப் போக்கிக் கொண்டால் இந்த நந்தினி தேனு மட்டுமே நலமாக வாழும். குடிகளைக் காக்கும் நீ உயிருடன் வாழ்ந்து வந்தாயானால் எல்லா மக்களையும் உனது தகப்பனார் போல நிரந்தரமாக காப்பாற்றிக் கொண்டிருப்பாய் (வஞ்சப்புகழ்ச்சியணி)

அவ ॥ அறநெறி தவறாது குருவின் பயம் நீங்க உபாயம் கூறுகிறது.

சு॥ அதை²க தே⁴நோ ரபராத⁴ சண்டாத்

கு³ரோஃ க்ரிஶாநு ப்ரதிமாத்³ பிபே⁴ஷி ।

ஶக்யோஸ்ய மந்யுர் ப⁴வதா விநேதும்

க³ாஃ கோடிஶஸ் ஸ்பர்யதா க⁴டோத்⁴நீஃ ॥ 49

(ப-ரை) அத² = மற்றொரு விதத்தி⁴ல் = ஏகதே⁴நோ; = ஒன்றான நந்தினீ தேனுவை உடையவனாகலான்; அபராத⁴ = பசுவை உதாசீனஞ் செய்த தவறுக்காக; சண்டாத் = கோபமுள்ளவன் ஆதலின்; க்ரிஶாநு = யஜ்ஞேசனே; ப்ரதிமாத = உவமையாகக் கொண்ட; கு³ரோஃ = வசிட்டரால்; பிபே⁴ஷி = பயப்படுகிறாயா; அஸ்ய = இவ்வசிட்டருடைய; மந்யுஃ = கோபம்; க⁴ட உத்⁴நீஃ = குடம்போன்ற மடியுடைய; கோடிஶஃ = கோடிக்கணக்கிலான; கே³ாஃ = பசுக்களை; ஸ்பர்யதா = வழங்கும்; ப⁴வதா = உன்னால்; விநேதும் = போக்க; ஶக்யஃ = வல்லது.

(க-ரை) அதுவுமின்றி ஒரே ஒரு பசுவை உள்ள வசிட்டருக்கு, பசுவைப் போக்கிய சினத்தை சகிக்கமாட்டாரென்று நினைக்கிறாயா? நீ குடம்போன்ற மடியுடைய பசுக்கள் கோடானுகோடியாக கொடுத்து அக்கோபத்தைப் போகச் செய்யவல்லவனே. (உவமையணி மற்றும் வஞ்சப் புகழ்ச்சியணி)

சு ॥ தத்²ரக்ஷ கல்யாண பரம்பராணாம்
பே³ாக்தார முர்ஜஸ்வல மாத்ம தே²ஹம் ।
மஹீதல ஸ்பர்ஶந மாத்ர பி³ந்நம்
பு²த்²த³ம்ஹி ராஜ்யம் பத²மைந்த்²ர மாஹுஃ ॥ 50

(ப-ரை) தத் = அந்தக் காரணத்தால்; கல்யாண = சுபங்களின்; பரம்பராணாம் = தொடர்களை; பே³ாக்தாரம் = அனுபவித்துக் கொண்டு வரும்; ஊர்ஜஸ்வலம் = வலிமையுடைய; ஆத்ம = உன்னுடைய; தே²ஹம் = உடலை; ரக்ஷ = காப்பாற்றிக்கொள்; பு²த்²த³ம் = நிறைவுற்ற; ராஜ்யம் = நாட்டை; மஹீதல = பூமியின்; ஸ்பர்ஶந மாத்ர = தொடர்பினால் மட்டும்; பி³ந்நம் = வெவ்வேறாகிய; ஐந்த்²ரம் = புலன்களைச் சார்ந்த; பத²ம் = இடமாக; ஆஹுஃ = சொல்கின்றனர்.

(க-ரை) அதனால், பல சவுக்கியங்களை அனுபவித்துக் கொண்டுவரும் உனது வலிபொருந்திய உடலைக் காப்பாற்றிக் கொள். இப் பசுவை அலட்சியம் செய்வதால் இந்திர பதவியற்றுப் போகுமென நினைக்கிறாய் போலும், முன்னோர்கள் எல்லாம் பொருள்களினால் நிறம்பிய நாட்டை. ஆள்வதை, பூமியைச் சார்ந்த இந்திர பதவியெனக் கூறுவார்கள். (வஞ்சநவிற்சியணி)

சு ॥ ஏதாவ து²க்த்வா விரதே ம்ரிகே²ந்த்²ரே
ப்ரதிஸ்வநே நாஸ்ய கு²ஹா க²தேந ।
ஶிலோச்சயோஃபி க்ஷிதிபால முச்சைஃ
ப்ரீத்யா தமேவார்த¹ மப³ாஷதேவ ॥ 51

(ப-ரை) ம்ரிகே²ந்த்²ரஃ = சிங்கம்; ஏதாவத் = இவ்வளவு வார்த்தைகளை, உக்த்வா = சொல்லி; விரதேஸதி = சும்மாயிருக்கையில்; கு²ஹா ஆக²தேந = குகையிலிருந்துவந்த; அஸ்ய = அந்த சிங்கத்தின் ப்ரதிஸ்வநேந = எதிரொலியால்; ஶிலோச்சயோஃபி = இமயமலையும்; ப்ரீத்யா = அன்புடன்; க்ஷிதிபாலம் = திலீபமன்னனை

நோக்கி; தம் அர்த²மேவ = அதே பொருளை; உச்சைஃ = உரக்க; அப³ாஷதேவ = சொல்லிற்றோ வென்பதுபோன்றிருந்தது.

(க-ரை) சிங்கம் இவ்வாறு கூறிவிட்டு வாளாயிருக்கையில் அச்சிங்கத்தின் எதிரொலியானது இமயமலையுங்கூட, அன்பினால் உரத்தக் குரலில் உரைந்ததோவென்பது போன்று தோன்றியது. (பின்வருவிளக்கணி.)

சு॥ நிஶம்ய தே²வாநுசரஸ்ய வாசம்
மநுஷ்ய தே²வஃ புநர ப்யுவாச
தே³ந்வா தத²த்³யாஸிந காதராக்ஷ்யா
நிரீக்ஷ்யமாண ஸ்ஸு²தராம் தயாளுஃ ॥ 52

(ப-ரை) தே²வ அநுசரஸ்ய = பரமசிவனுடைய ஏவலாளாகிய சிங்கத்தின்; வாசம் = வாக்கை; நிஶம்ய = கேட்டு; மனுஷ்ய தே²வஃ = மாந்தர்கட்குப் பிரபுவாகிய திலீப மன்னன்; தத் அத்³யாஸித = ஆக்கிரமிப்பால்; காதர = அச்சத்துடன் கூடிய; அக்ஷ்யச = கண்களுடைய; தே³ந்வா = நந்தினி தேனுவால்; நிரீக்ஷ்யமாண = பார்க்கப்படுபவனாய்; புநரபி = மறுபடியும்; உவாச = கூறினான்.

(க-ரை) சிங்கம் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே, சிங்கத்திடம் சிக்குண்ட நந்தினி தேனுவானது தன்னைப் பயத்துடன் பார்த்துக் கொண்டிருப்பதையுங் கண்டு மிகுந்த தயவுடன், மறுபடியும் சிங்கத்திடம் கூறினான் (தகுதியணி)

அ ॥ என்ன சொல்கிறான் என்பது :—

சு॥ க்ஷதாத் கில த்ராயத இத்யுத²க்²ர
க்ஷத்ரஸ்ய ஶப்²தோ² பு³வநேஷு² ரூட⁴ஃ ।
ராஜ்யேந கிம் தத்²விபரீத வ்ரித்தேஃ
ப்ராணை ருபக்ரோஶ மலீமஸைர்வா ॥ 53

(ப ரை) உத்²க²ர = உன்னதமான; க்ஷத்ரஸ்ய = அரச மரபின்; ஶப்²த³ஃ = சொல்லிய சொல்; க்ஷதாத் = நாசமாவதிலிருந்து; த்ராயதே இவ = காப்பாற்றப் படுவதென்று; பு³வநேஷு = உலகில்; ரூட⁴ஃ கில = அறியப்பட்டதன்றோ; தத் = அந்த; அரச மரபிற்கு; விபரீத வ்ரித்தேஃ = மாறுபட்ட நடவடிக்கையுடைய புருடனுக்கு; ராஜ்யேந = அரசாள்வதால்; கிம் = என்ன பயன்; உபக்ரோஶ = நிந்

தனையால்: மலீமஸ: = அழுக்குற்ற; ப்ராணைர்வா = உயிராலும்; கிம் = என்ன பயன் உண்டு.

(க-ரை) 'க்ஷத்ரம்' என்றாலே நாசமாவதிலிருந்து காப்பாற்றுதல் என்பது உலகில் அறிந்த பொருளன்றோ? அதற்கு மாறாய நடவடிக்கையுடைய புருடனுக்கு அரசபதவி இருந்து என்ன பயன்? நிந்தனையால் அழுக்குற்ற உயிரானது இருந்து மட்டும் என்ன பயன்? (சுருங்கச் சொல்லணி)

அ.வ ॥ அப்பசுவைப்பற்றி மேலும் கூறுகிறான்.

சு ॥ கத$^1$ ந்நு ஶக்யோऽநுநயோ மஹர்ஷே:
விஶ்ராணநாத் ³ந்ய பயஸ்விநீநாம் ।
இமாமநூநாம் ஸுரபே³ ரவேஹி
ருத்³ரௌஜஸாது ப்ரஹ்ருதம் த்வயாऽஸ்யாம் ॥ 54

(ப-ரை) மஹர்ஷே: = வசிட்டனுடைய; அநுநயோநு = சினத்தை; அந்ய = பிற; பயஸ்விநீ நாம் = கறவைகள்; விஶ்ராணநாத் = கொடுப்பதால்; கத$^1$ம் = எவ்வாறு; ஶக்ய: = தணிக்க முடியும்; இமாம் = இந்த நந்தினியை; ஸுரபே³: = காமதே³னுவைவிட; அநூநாம் = குறைந்தது அன்று என; ஆவேஹி = அறிந்துக்கொள்; அஸ்யாம் = இந்த நந்தினீதேனு; த்வயா = உன்னால்; ப்ரஹ்ருதந்து = தாக்குண்டது என்றாலோ; ருத்³ரௌஜஸா = ஈசனின் சாமர்த்தியத்தால் (மட்டுமே).

(க-ரை) வேறு கறவைகளை நான் வசிட்டருக்குக் கொடுத்தாலும் அவர் கோபம் எவ்வாறு தணிக்க முடியும்? இந்த நந்தினீ தேனுவானது காமதேனுவிற்குக் குறைந்தது அன்று. இப்படிப்பட்ட காமதேனுவை ஈசனார் வலியாலன்றி உன்னால் தாக்கக் கூடியதாக எனக்குத் தோன்றவில்லை. (உடனிகழ்ச்சியணி)

சு ॥ ஸேயம் ஸ்வதே³ஹார்பண நிஷ்க்ரியேண
ந்யாய்யா மயா மோசயிதும் ப³வத்த: ।
ந பாரணாஸ்யா த்³விஹதா தவைவம்
ப³வே த³லுப்த ஶ்சமுநே: க்ரியார்த$^1$: ॥ 55

(ப-ரை) ஸேயம் = இந்த நந்தினீபசு; மயா = என்னால்; ஸ்வதே³ஹார்பண = என்னுடலைக் கொடுத்தலென்னும்; நிஷ்க்ரி

யேண = காரியத்தால்; ப⁴வந்தஃ = உன்னால்; மோசமிதும் = விடுவித்தலானது; ந்யாய்யா = முறையானது; ஏவம் = இவ்வாறிருக்கர்; தவ = உன்னுடைய; பாரணா = உணவு; விஹதா = அடியுண்டதாக; நஸ்யாத் = ஆகாது; முநேஃ = முனிவருடைய; க்ரியார்த²ஸ்ச = வேட்டல் என்னும்; அர்த¹ஸ்ச = பயனும்; அலுப்தஃ = குறைவற்றதாக; பவேத் = ஆகின்றது,

(க-ரை) இந்த நந்தினீ தேனுவுக்கு மாறாக எனது உடலை நீ ஏற்று இதை விட்டுவிடுவது முறையானது. இதனால் உனக்குப் பசி நீங்குவது மல்லாமல் வசிட்டருடைய வேட்டல் முதலிய தொழில்களுக்கும் குறைவில்லாமல் இருந்துவிடும். (எளிதின் முடிபணி)

அவ ॥ நீ எவ்வாறோ நானுமவ்வாறென்கிறான்.

சு॥ ப⁴வா நபீத²ம் பரவா நவைதி
மஹாந் ஹி யத்ந ஸ்தவ தே²வத²ாரௌ ।
ஸ்த¹ாதும் நியோக்து ர்நஹி ஶக்ய மக்²ரே
விநாஶ்ய ரக்ஷ்யம் ஸ்வய மக்ஷதேந ॥ 56

(ப-ரை) பரவாந் = சுவாமி வயத்தனாய; ப⁴வாந் அபி = நீயும் இத²ம் = இந்த சொல்லப் போகும் உண்மையை; அவைதி = அறிந்து கொள்கிறாய்; ஹி = எக்காரணத்தால்; தவ = உனக்கு; தே²வத²ாரௌ = தேவதாரு மரத்தின் சார்பில்; மஹாந் = அதிகமான; யத்நஃ = முயற்சியோ; ரக்ஷ்யம் = காப்பாற்றக்கூடிய (பொருளை); விநாஶ்ய = நாசமாக்கி; ஸ்வயம் = தான்; அக்ஷதேந = மனங் கோணாது நியமித்த; நியோக்துஃ = சுவாமியி(குருவி)ன்; அக்²ரே = முன்னால்; ஸ்த¹ாதும் = நான் நிற்க; நஶக்யம்ஹி = முடியாதன்றோ!

(க-ரை) ஏ, சிங்கமே! நீயும் சுவாமிக்கு ஊழியன். உனக்கு தேவதாரு மரம் எவ்வாறு ஆதரிக்கத் தக்கதும் அதிசயமுமானதோ அதாவது எவ்வாறு காக்கப்பட்டு வருகிறதோ, அதுபோல், அவசியம் என்னால் ரட்சிக்கக் கூடியது, இப்பசு. இந்நிலையில், நான் மட்டும் இதனை அலட்சியம் செய்துவிட்டு, எவ்வாறு எனது ஆசான் முன் நிற்பேன்? (குறிப்பு நவற்சியணி)

அவ ॥ அதனால் எப்படியும் அது பாதுகாக்க வேண்டியதே என்கிறான்,

சு॥ கிமப்யஹிம்ஸ்யா ஸ்தவசேந் மதோ஽ஹம்
யஶ:ஶரீரே ப⁴வ மே தயாளு: ।
ஏகாந்த வித்⁴வம்ஸிஷு மத்²வித⁴நாம்
பிண்டேஷ்வநாஸ்தா¹ க²லு பௌ⁴திகேஷு ॥ 57

(ப-ரை) கிமபி = அல்லது; அஹம் = நான்; தவ = உனக்கு; அஹிம்ஸ்ய = கொல்லாமல் விடப்பட்ட; மத:சேத் = சம்மதிப்பேனாகில்; தர்ஹி = அப்போதும்; மே = எனக்கு; யஶ: = புகழ் என்னும்; ஶரீரே = உடலளிக்க; த³யாளு: = தயவுள்ளவனாக; ப⁴வ = ஆவாய்; மத்²வித⁴நாம் = என் போன்ற அறிவுடையோர்க்கு; ஏகாந்த = அவசியம்; வித்⁴வம்ஸிஷு = நசிக்கப் போகும்; பௌ⁴திகேஷு = பூமி முதலாய பூதங்களின் மாறுபாடுகளாலாய; பிண்டேஷு = உடல்களில்; அனாஸ்தா¹ க²லு = விரும்பப்படாததன்றோ?

(க-ரை) என்னைக் கொல்லலாகாதென்ற எண்ணம் உனக்குளதேல் எனக்குப் புகழெனும் அழியா உடலை வழங்குவாயாக. என்னைப் போன்ற மானிடர்கட்கு என்றுமழியாப் புகழுடலை எய்துவது தவிர்த்து, அழியக்கூடிய இவ்வுடல் மீது பற்று இராததன்றோ? (தன்மைநவிற்சியணி)

அ ॥ நட்பால் பின்பற்றலாமென்று கூறுவான் தொடங்கினான்,

சு ॥ ஸம்ப³ந்த⁴ மாப⁴ஷண பூர்வ மாஹு
வ்ரித்த ஸ்ஸநௌ ஸங்க³தயோ ர்வநாந்தே ।
தத்³பூ⁴த நாத²நுக² நார்ஹ ஸித்வம்
ஸம்ப³ந்தி⁴நோ மே ப்ரணயம் விஹந்தும் ॥ 58

(ப-ரை) ஸம்ப³ந்த⁴ம் = நட்பை; ஆப⁴ஷண = பேசுவதையே; பூர்வம் = காரணமாக கொண்டதாய்; ஆஹு: = கூறுகின்றனர்; ஸ: = அவ்வாறாய நட்பு; வநாந்தே = காட்டின் அருகாமையில்; ஸங்க²தயோ: = சம்மந்தப்பட்ட; நௌ = நம்மிருவர்க்கும்; வ்ரித்த: = நடந்தது; தத் = அது காரணத்தால்; ஹேபூ⁴த நாத²நுக² = ஓ, ஈசனுடைய கிங்கரனான சிங்கமே! ஸம்ப³ந்தி⁴ந: = நண்பனான; மே = எனக்கு; ப்ரணயம் = கேட்டவை; விஹந்தும் = வீணாக்க; நார்ஹஸி = தகுந்தவன் அன்று.

(க-ரை) பேசுவதே நட்புக்குக் காரணமானதென்பார்கள். அந்த நட்பு நம்மிருவர்க்கும் இவ்வனத்தின் அருகில் ஏற்பட்டது.

அதனால். பூதநாதனுடைய கிங்கரனாகிய ஓ, சிங்கமே! நீ நண்ப னாகிய எனது வேண்டுகோளைத் தவிர்க்கப் பார்ப்பது அறமன்று. (குறிநிலையணி)

ஸ॥ ததே¹தி க²ாம் முக்தவதே தி²லீப:
ஸத்²ய ப்ரதிஷ்டம்ப³ விமுக்த பா²ஹு:।
ஸந்யஸத ஶஸ்த்³ரா ஹரயே ஸ்வதே²ஹம்
உபாநயத் பிண்ட மி வாமிஷஸ்ய ॥ 59

(ப-ரை) ததே¹தி = அப்படியே ஆகட்டுமென்று; கா²ம் = நந்தினீ தேனுவை; முக்தவதே = விட்டுவிட்ட; ஹரயே = சிங்கத்திற்கு; ஸத்²ய: = உடனே; ப்ரதிஷ்டம்ப³ = கட்டிவிருந்து; விமுக்த = விடுபட்ட; பா³ஹு: = தோள்களுடைய; தி²லீப: = திலீப மன்னன்; ஸந்யஸ்த = விடப்பட்ட; ஶஸ்த்ரஸ்ஸந் = ஆயுதங்களை உடையவனாய்; ஸ்வதே³ஹம் = தன்னுடலில் உள்ள; ஆமிஷஸ்ய; மாமிசத்தை = பிண்டம் இவ = கவளங்களாகக் கொய்து; உபாநயத் = சமர்ப்பித்தான்.

(க-ரை) அவ்வாறே ஆகட்டுமென்று கூறி சிங்கமானது நந்தினியை விட்டுவிட்டது. உடனடியாக சிங்கத்தின் மகத்துவத்தால், கட்டுப்பட்டிருந்த தோள்வலி இப்போது தன் வசமானதால், தன் செய்கைகளால் படைகொண்டு தன் உடலிலிருந்து மாமிசத்தை யறுத்து, கவளங்களாய் செய்து, சிங்கத்தின் எதிரில் நின்று சமர்ப்பித்தான். (தகுதியணி)

ஸ॥ தஸ்மிந் க்ஷணே பாலயிது: ப்ரஜாநாம்
உத்பஸ்யதஸ் ஸிம்ஹ நிபாத முக்²ரம்।
அவாங் முக¹ஸ்யோபரி புஷ்பவ்ரிஷ்டி:
பபாத வித்²யாத³ர ஹஸ்த முக்தா ॥ 60

(ப-ரை) தஸ்மிந்க்ஷணே = அவ்வேளையில்; உக்²ரம் = பயங்கரமான; ஸிம்ஹநிபாதம் = சிங்கம் தன்மீது வீழ்தலை; உத்பஶ்யத = எண்ணிக் கொண்டிருக்கும்; அவாங் முக¹ஸ்ய = நிலநோக்கும்; ப்ரஜாநாம் = குடிமக்களுக்கு; பாலயிது: = ஆள்பவனாகிய திலீப மன்னன்; உபரி = மீது; வித்²யாத³ர = (தேவர்களில் ஒரு வகையைச் சார்ந்த) வித்யாதரர்களுடைய; ஹஸ்த = கைகளால்; முக்தா = விடப்பட்ட; புஷ்பவர்ஷ: = பூமாரி; பபாத = பொழிந்தது.

(க-ரை) உடனே அச்சப்படும் வண்ணம், சிங்கமானது தன் மீது விழுவதுபோல் இருப்பதைக் கண்டு தலையை வளைத்துக் கொண்டு நிலத்தை நோக்கி நிற்கும் திலீப மன்னன் மீது வித்யா தரர்கள் பூமாரி பொழிந்தனர். (வியப்பணி)

சு॥ உத்திஷ்ட[1] வத்ஸே த்யம்ரிதாயமாநம்
வசோ நிஶம்யோத்தி[1]தமுத்தி[1]தஸ்ஸந் ।
த[2]த[2]ர்ஶ ராஜா ஜநநீமிவ ஸ்வாம்
க[3]ா மக்[2]ரதஃ ப்ரஸ்ரவணீம் ந ஸிம்ஹம் ॥ 61

(ப-ரை) ராஜா = அந்த திலீப மன்னன்; அம்ரிதாயமநம் = அமுதைப் போன்றதும்; உத்தி[1]தம் = பிறந்ததும்; ஹே வத்ஸ = ஓ, குழந்தாய்! உத்தி[2]ஷ்ட = எழுந்திரு; இதி = என்னும்; வசஃ = சொல்லை; நிஶம்ய உத்தி[1]தஸ்ஸந் = எழுந்திருந்தவனாய்; அக்[2]ரத = முன்னால்; ப்ரஸ்ரவணீம் = பால் சுரந்துகொண்டுள்ள; க[3]ாம் = நந்தினி தேனுவை; ஸ்வாம் = தன்னுடைய; ஜநநீம் இவ = தாயைப் போல்; த[2]த[2]ர்ஶ = பார்த்தான்; ஸிம்ஹந்து = சிங்கத்தையோ; நத[3]த[2]ர்ஶ = கண்டானில்லை.

(க-ரை) திலீப மன்னன், 'குழந்தாய்! எழுந்திரு' என்னும் அமுதம் போன்ற சொற்களைக் கேட்டு எழுந்தான். அப்போது தன் முன்னால் தாய்ப்போல் நின்றுள்ள நந்தினி பசு பாலைப் பொழிந்துக் கொண்டிருந்தது. சிங்கம் காணாது போயிற்று. (வேண்டல் மற்றும் உவமையணி)

சு॥ தம்விஸ்மிதம் தே[3]நு ருவாச ஸாதே[3]ா
மாயாம் மயோத்[2]ப[3]ாவ்ய பரீக்ஷிதோஸி
ரிஷிப்ரப[3]ாவாந் மயிநாந்தகோபி
பரபுஃ ப்ரஹர்தும் கிமுதாந்ய ஹிம்ஸ்ரஃ ॥ 62

(ப-ரை) விஸ்மிதம் = வியந்துள்ள; தம் = அந்த திலீப மன்னனை நோக்கி; தே[3]நுஃ = நந்தினீ தேனுவானது; உவாச = கூறியது; ஹே ஸாதே[3]ா = சாதுவாகிய திலீப மன்னா! மயா = என்னால்; மாயா = மாயையால்; உத்[2]ப[3]ாவ்ய = உண்டாக்கி; பரீக்ஷிதஃ = சோதிக்கப்பட்டவன்; அஸி = ஆனாய்; ரிஷிப்ர ப[3]ாவாத் = வசிட்டர் மகிமையால்; அந்தகஃ அபி = இயமனும்; மயி = என்னிடம்; ப்ரஹர்தும் = கொல்ல; ப்ரபுஃ = சமர்த்தன்; ந = அல்லன்; அந்ய

ஹிம்ஸ்ர=பிற கொடிய விலங்குகள்; கிமுத=அதெப்படி. ப்ரப⁴வஃ= சமர்த்துள்ளவை; ந=ஆகா.

(க-ரை) அப்போது வியந்துக்கொண்டிருக்கும் திலீப ராஜா வுடன் நந்தினீ தேனு சொன்னதாவது; "உன்னைச் சோதிப் பதற்கு இம்மாய்கையை உண்டாக்கினேன். நீ சாது. வசிட்டருடைய மகாத்மியத்தால் என்னை எமனும் அணுக முடியாது; இவ்வாறிருக்க பிற கொடிய விலங்குகள் என்னை என்ன செய்யக் கூடும்?" (நிர நிறையணி)

சு ॥ ப⁴க்த்யா கு²ரௌ மய்யநுகம்ப யாச

ப்ரீத்யா஽ஸ்மி தே புத்ர வரம் வ்ரிணீஷ்வ ।

நகேவலாநாம் பயஸாம் ப்ரஸூதி

மவேஹி மாம் காமது²க⁴ாம் ப்ரஸந்நாம் ॥ 63

(ப-ரை) ஹேபுத்ர = மகனே! கு²ரௌ = வசிட்டரிடம்; ப⁴க்த்யா=பக்தியாலும், மயி=என்னிடம்; அநுகம்ப யாச= தயவாலும்; தே=உனக்கு; ப்ரீதா=மகிழ்வுடையவள்; அஸ்மி= ஆகிறேன்; வரம்=வேண்டுகோளை; வ்ரிணீஷ்வ=கேட்பாயாக; தத²ஹி=அதுசரி; மாம்=என்னை; கேவலாநாம்=இணையற்ற; பயஸாம்=பாலுக்கு; ப்ரஸூதிம்=காரணமானவளாக; நாவேஹி= அறியவேண்டா; கிந்து = மேலும் என்னவெனில்; ப்ரஸந்நாம்= அனுக்கிரக முள்ளவளாகிய என்னை; காமது²க⁴ா=விரும்பிய வற்றைக் கொடுக்கக் கூடியவளென்று; ஆவேஹி=தெரிந்துக் கொள்வாயாக.

(க-ரை) மகனே! உனக்குள்ள குருபக்தியைக் குறித்தும், என் மீதுள்ள தயவுக்கும் உவந்தேன். உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்: நான் மனநிறைவுற்றால் தேவர்களைப்போல் எண்ணிய வற்றையெல்லாம் கொடுக்கவல்லவளாக என்னை அறிந்துக்கொள். (கற்றோர் நவிற்சியணி)

சு ॥ ததஸ்ஸமாநீய ஸ மாநிதார்தீ¹

ஹஸ்தௌ ஸ்வஹஸ்தார்ஜித வீரஶப்³த³ः ।

வம்ஶஸ்ய கர்தார மநந்த கீர்திம்

ஸுதக்ஷிணாயாம் தநயாம் யயாசே ॥ 64

ு-ரை) ததः = பிறகு; மாநிதார்தீ[1] = பரிசுவழங்கப்பட்ட ாரையுடைய; ஸ்வஹஸ்த = தம் கைகளால்; ஆர்ஜித = ்தித்த; வீர = வீரனென்னும்; ஶப்³த³ः = சொல்லுடைய; அந்த திலீபமன்னன்; ஹஸ்தௌ = கைகளை; தமாநீய = டு; வம்ஶஸ்ய = குலத்திற்கு; கர்தாரம் = தலைவனும்; அநந்த = என்றென்றும் புகழுடைய; தநயம் = மகனை; ஸுதக்ஷிணா சுதக்ஷிணைக்கு உண்டாக; யயாசே = கேட்டான்.

ு-ரை) அப்போது பல இரப்பாரை மகிழச் செய்யும் மாபெரும் ாளனும், தன் தோள்வலியால் பலரைவென்று வீரனென்னும் டைந்து தாழ்மையறியா திலீபமன்னன், தான்றாழ்ந்தவன் கைக்கூப்பி தன்மறபிற்கு கர்த்தாவாய் மிகுந்த புகழ்தேடும் ாத் தன் பட்டத்து தேவியாகிய சுதக்ஷிணா தேவிக்கு அருள டுமென்று இரந்தான். (வேண்டலணி)

ந்தாந காமாய ததே[1]தி காமம்
ராஜ்ஞே ப்ரதி ஶ்ருத்ய பயஸ்வி நீஸா ।
ு[2]க்[2]த்[3]வா பயः பத்ரபுடே மதீ[2]யம்
புத்ரோப பு[3]ங்க்ஷ்வேதி தமாதி[3]தே[2]ஶ ॥ 65

ு-ரை) ஸா = அந்த; பயஸ்விநீ = நந்தினீதேனு; ஸந்தாநகா = மகன் வேண்டுமென விழையும்; ராஜ்ஞே = திலீபமன்னனுக் ததே[1]தி = அவ்வாறே ஆகட்டுமென்று; காமம் = வரத்தை; ஶ்ருத்ய = சூளுரைசெய்து; ஹேபுத்ர = ஓமகனே! மதீயம் = ; பயः = பாலை; பத்ரபுடே = தொன்னையில்; து[2]க்[2]த்[3]வா = ; உபபு[3]ங்க்ஷ்வா = குடிப்பபாயாக; இதி = என்று; தம் = அந்த மன்னனுக்கு; ஆதி[2]தே[2]ஶ = ஆணையிட்டது.

க-ரை அந்த நந்தினீபசுவானது அவ்வாறே ஆகுக என்று ரித்து, ''மகனே! நீ ஒரு தொன்னையில் என் பாலைக் துக் குடி'' என்று ஆணையிட்டது. (வேண்டலணி)

ுத்ஸஸ்ய ஹோமார்த[1] விதே[2]ஶ்ச ஶேஷம்
கு[2]ரோ ரநுஜ்ஞா மதி[3]க[2]ம்ய மாதः ।
ஊத[2]ஸ்ய மிச்ச[1]ாமி தவோப போ[3]க்தும்
ஷஷ்டாம்ஶ முர்வா இவ ரக்ஷிதாயாம் ॥ 66

(ப-ரை) ஹேமாத: = அம்மையே! வத்ஸஸ்யபீதம் = கன்று குடித்த மீதியை; ஹோம = வேள்வியெனும்; ஆர்த[1] = கிரிகையின்; விதே[3]ஶ = அனுட்டானத்தில்; ஶேஷம் = மீதமான; தவ = உன்னுடைய; ஊத[3]ஸ்யம் = பாலை; ரக்ஷிதாயாம் = காக்கப்பட்ட; உர்வ்யா = பூமியின்; ஷஷ்டாம்ஶம் இவ = ஆறில் ஒரு பங்குபோல்; கு[2]ரோ: = ஆசிரியருடைய; அநுஜ்ஞாம் = அனுமதியை; அதி[3]க[2]ம்ய = பெற்று; உபபோ[3]க்தும் = அருந்த; இச்சாமி = எண்ணுகிறேன்

(க-ரை) அதற்குத் திலீப மன்னன்: "அன்னையே! உனது கன்றுக்கும் ஓமத்திற்கும் பயன்படுத்தி மிகுதியான உன்பாலை, என்னால் ஆளப்படும் பூமியின் பலனில் ஏற்படும் ஆறில் ஒரு பங்கு போல், ஆசிரியரின் அனுமதி பெற்று அருந்த விழைகின்றேன்" என்று நந்தினி பசுவிடம் நவின்றான். (தன்மைநவிற்சியணி)

சு॥ இத்த[1]ம் க்ஷிதீஶேந வஶிஷ்ட தே[3]நு:
விஜ்ஞாபிதா ப்ரீததரா ப[2]பூ[3]வ ।
தத[2]ந்விதா ஹைமவதாச்ச குக்ஷே:
ப்ரத்யாயயா வாஶ்ரம மஶ்ரமேண ॥ 67

(ப-ரை) இத்த[1]ம் = இவ்விதமாக; க்ஷிதீஶேந = திலீப மன்னனால்; விஜ்ஞாபிதா = விண்ணப்பிக்கப்பட்ட; வஶிஷ்டதே[3]னு: = வசிட்டருடைய நந்தினியெனும் பசுவானது; ப்ரீததரா = களிப்படைந்தது; ப[2]பூ[3]வ = ஆயிற்று; தத[2]ந்விதா = அந்த திலீபமன்னனுடன் கூடிய; ஹைமவதாத் = இமயத்தின்; குக்ஷே = குகையிலிருந்து; அஶ்ரமேண = சோர்வின்றி; ஆயயாச = வந்து சேர்ந்தது.

(க-ரை) இவ்வாறு திலீபமன்னன் விண்ணப்பித்ததைக்கேட்ட நந்தினி பசுவானது களிப்படைந்து இமயத்துக் குகையை விட்டு சோர்வின்றி, ஆச்சிரமத்தை அடைந்தது. (நிகழ்வினவிற்சியணி)

சு॥ தஸ்ய: ப்ரஸந் நேந்து[2]முக[1]: ப்ரஸாத[2]ம்
[2]குருர் ந்ரிபாணம் கு[2]ரவே நிவேத்ய ।
ப்ரஹர்ஷ சிஹ்நாநுமிதம் ப்ரியாயை
ஶஶம்ஸ வாஸா புநருக்த மேவ ॥ 68

(ப-ரை) ப்ரஸந்ந இந்து[2] = நின்மலமாய மதியைப் போன்று; முக[1]: = முகமுடைய; ந்ரிபாணாம் = அரசர்களுக்கு; கு[2]ரு: = ஆசா

னாகிய திலீபமன்னன்; ப்ரஹர்ஷ = உவகையால்; சிஹ்ந = முகம் முதலியவற்றின் அறிகுறிகளால்; அநுமிதம் = எண்ணிய; தஸ்ய = நந்தினி தேனுவின்; ப்ரஸாத³ம் = அனுக்கிரகத்தை; புநருக்தமேவ = மறுபடியும் சொல்லிய; வாசா = வாக்குகளால்; கு³ரவே = வசிட்டருக்கு; நிவேத்ய = விண்ணப்பித்து; ப்ரியாயை = அன்புள்ள மனைவியாகிய சுதக்ஷிணா தேவிக்கு; ஶஶம்ஸ = சொன்னான்.

(க-ரை) நந்தினியின் அனுக்கிரகமானது முகம் போன்ற உருப்புகளின் வாயிலால் தெரிந்தாலும், அரசனான திலீபமன்னன, களிபெருக்கால், நந்தினி பசு வந்த சங்கதியும் வசிட்டருக்கு அறிவித்து, பிறகு அன்பு மனைவிக்கும் சொன்னான். (நிகழ்வின விற்சியணி)

சு॥ ஸ நந்தி³நீ ஸ்தந்ய மநிந்த³தாத்மா
ஸத்³வத்ஸலே॥ வத்ஸ ஹுதாவஶேஷம் ।
பபௌ வஶிஷ்டே¹ந க்ரிதாப்³யநுஜ்ஞ
ஶுப்⁸ரம் யஶோ மூர்தமிவாதி த்ரிஷ்ணா ॥ 69

(ப-ரை) அநிந்தி³த = குற்றமற்ற; ஆத்மா = சுபாவமுள்ள; ஸத் = நல்லார்களிடம்; வத்ஸல = பிரியமுள்ளவன்; ஸঃ = (ஆகிய) அந்த திலீபமன்னன்; வஶிஷ்டே¹ந = வசிட்டரால்; க்ரித = செய்யப்பட்ட; அப்³யநுஜ்ஞஸ்ஸந் = அனுமதி உள்ளவனாய்; வத்ஸ = கன்று (குடித்து) ஹுத = ஓமத்திலும் (பயன்பட்ட) அவஶேஷம் = மிகுதியான; நந்தினீ = நந்தினீ தேனுவின்; ஸ்தந்யம் = பாலை; ஶுப்⁸ரம் சுத்தமானதும்; மூர்தம் = அளக்கப்பட்டதும்; (ஆனதை) யஶঃ இவ = புகழைப் பெறுவதுபோல்; அதித்ரிஷ்ணஸ்ஸந் = மிக்க ஆசையுடன்; பபௌ = குடித்தான்.

(க-ரை) திலீபமன்னன் வசிட்டரின் அனுமதிபெற்று, கன்றுக்கும் ஓமத்திற்கும் பயன்பட்டதுபோக, மீதமாயிருந்த நந்தினியின் பாலை மிக ஆசையோடு குடித்தான். (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ ப்ராதர்யதே¹க்த வ்ரத பாரணாந்தே
ப்ராஸ்த²ாநிகம் ஸ்வஸ்த்யயநம் ப்ரயுஜ்ய ।
தௌ த³ம்பதீ ஸ்வாம் ப்ரதி ராஜத⁰ாநீம்
ப்ரஸ்த²ாபயா மாஸ வஶீ வஶிஷ்ட¹ঃ ॥ 70

(ப-ரை) வஶீ=புலனடக்கமுள்ள; வஶிஷ்ட¹ஃ=வசிட்டர்; ப்ராதஃ=வைகறையில்; யதே¹ாக்த=முறைப்படியான; வ்ரத=கே³ாஸேவாவிரத; பாரணா=பாரணைக்கு; அந்தே=பிறகு; ப்ராஸ்த¹ாநிகம்=பிரயாணகாலத்திற்கு ஏற்ற; ஸ்வஸ்த்யயநம்=ஆசீர்வாதத்தை; ப்ரயுஜ்ய; பயன்படுத்தி; தௌ=அந்த தம்பதிகளை; (சுதக்ஷிணை திலீபர்களை) ஸ்வாம்=தமது; ராஜ²த³ாநீம் ப்ரதி=பட்டணம் நோக்கி; ப்ரஸ்த¹ாபயா மாஸ=அனுப்பிவைத்தார்.

(க-ரை) பொழுது புலர்ந்ததும் சுதக்ஷிணையும், திலீபனும், கே³ா சேவையென்னும் விரதத்தையும், உண்ணுதலும் முடித்துக் கொண்டு விட்டபிறகு, வசிட்டர் அவர்களைப் பயணகாலத்து வாழ்த்துக்களை நவின்று அவர்களின் நகரத்திற்கு அனுப்பி வைத்தார். (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ ப்ரத²க்ஷிணீ க்ரித்ய ஹுதம் ஹுதாஶம்
அநந்தரம் ப³ர்து ரருந்த³தீஃ ச ।
தே³நும் ஸவத்ஸாம் ச ந்ரிபஃ ப்ரதஸ்தே¹
ஸந்மங்களோ த²க்²ரதர ப்ரப³ாவஃ ॥ 71

(ப-ரை) ந்ரிபஃ=திலீப மன்னன்; ஹுதம்=அவி சொரிதலால் கொழுந்துவிட்டெரியும்; ஹுதாஶம் = அக்கினியை; ப³ர்துஃ=பதியாகிய வசிட்டரை; அநந்தரம்=பிறகு; அருந்த³தீம்=அருந்ததீதேவியை; ஸவத்ஸம்=கன்றுடன் கூடியுள்ள; தேநுஞ்ச=நந்தினி தேனுவையும்; ப்ரத²க்ஷிணீக்ரித்ய=வலம் வந்து வணங்கி; ஸத் மங்களம்=நல்லாசிகளால்; உத²க்²ரதர=மிக்க மேன்மையுள்ள; ப்ரப³ாஸ்ஸந் = மகிமை உடையவனாய்; ப்ரதஸ்தே¹ = புறப்பட்டான்.

(க-ரை) திலீப மன்னன் அவி சொரிந்ததால் கொழுந்து விட்டெரியும் அக்கினியையும், வசிட்டரை, அருந்ததியை, கன்றுடன் கூடிய நந்தினி தேனுவை முறையே வலம் வந்து வணங்கி, நகரத்திற்குப் புறப்பட்டான் (வினைமுதல் விளக்கணி)

சு॥ ஶ்ரோத்ராபி³ராம த்³வநிநா ரதே¹ண
ஸத³ர்ம பத்நீ ஸஹித ஸ்ஸஹிஷ்ணுஃ ।
யயா வநுத்²க³ாத ஸுகே¹ந மார்கே²
ஸ்வநேந பூர்ணேவ மநோரதே¹ந ॥ 72

(ப-ரை) த³ர்மபத்நீஸஹிதஃ = தன் மனைவி சுதக்ஷிணா தேவியுடன் கூடினவனாய்; ஸஹிஷ்ணு = விரோதிகளால் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்பவனும ஆகிய; ஸஃ = அந்த திலீப மன்னன்; ஶ்ரோத்ர = காதுகளுக்கு; அபி⁴ராம = இனிமையான; த்⁴வநிநா - ஒலியுள்ள; மார்கே³ = வழியில்; அநுத்³க⁴ாத = கற்கள் முதலிய தடையற்றும்; ஸுகே¹ந = நிறைவேறிய; மநோரதே¹ந = விருப்பம் கொண்டு; யயௌ = புறப்பட்டான்.

(க-ரை) நோற்றல் முதலியவற்றால் உண்டாகும் வருத்தங் களைத் தாங்கும் திலீப மன்னன் தன் பத்தினியுடன் கூடி, தன் விருப்பம் ஈடேறியதால், வழியில் கற்கள்முதலியன இல்லாது சுகமாய் ஓடும் தேரில், காதுக்கினிமையான ஒலிகளைக் கேட்டு ரசித்திக் கொண்டே சென்றான். (பெருமையணி)

சு॥ தமாஹி தௌத்ஸுக்ய மத³ர்ஶநே

ப்ரஜாஃ ப்ரஜார்த¹ வ்ரத கர்ஶிதாங்க³ம் ।

நேத்ரை பபுஸ்த்ரிப்தி மநாப்நு வத்³பி⁴ஃ

நவோத³யம் நாத¹ மி வௌஷதீ⁴நாம் ॥ 73

(ப-ரை) அத³ர்ஶநேந = இடம் பெயர்ந்து அத்துணை நாட் களும் காணமுடியாமற் போனதாலும்; ஒளி குறைந்ததால் காண முடியாமதிருந்தாலும்; ஆஹித ஔத்ஸுக்யம் = தன் எண்ணமீடேற விழைந்தவனும்; ப்ரஜார்த = உலகத்தையாள மகப்பேறுக்கென; வ்ரத = கே³ாசேவையில் ஈடுபட்டிருந்ததாலும்; கர்ஶித = இளைத்துப் போன; அங்க³ம் = உடலையுடைய; நவோத³யம் = புதிதாய் தோன்றிய; தம் = அந்த திலீபராஜனை; ப்ரஜாஃ = குடிமக்கள்; த்ரிப் திம் = மன நிறைவை; அநாப்நுவத்³பிஃ = அடையாமலுள்ள; நேத்ரைஃ = கண்களால்; ஔஷதீ⁴நாம் = கொடிகளுக்கு; நாத¹மிவ = அதிகாரியாகிய சந்திரனைப் போல்; பபுஃ = பார்த்தனர்.

(க-ரை) வசிட்டரின் ஆச்சிரமத்திற்குச் சென்று அங்கு சிலகாலம் நந்தினீ தேனுவின் சேவையில் விரதம் பூண்டு மெலிந்த உடலுடையவனும் மகப்பேறு வரம் பெற்றுத் திரும்பிவந்த திலீப மன்னனை, குடிமக்கள் வளர்பிறை மதியைக் காண்பதுபோல் மிகுந்த அவாவுடன் மனநிறைவின்றி பார்த்தனர். அதாவது சில காலம் அவ்வரசனைக் காணா திருந்தாலும், அவர் உடல் மெலிந்து காணப்பட்டதாலும், ஈடேறிய எண்ணத்துடன் திரும்பிவந்ததாலும்

அவனை, குடிமக்கள் ஆவலுடன் வெகுநேரம் பார்த்துக்கொண்டே இருந்தனர். (உவமை மற்றும் நிகழ்வினவிற்சியணி)

சு ॥ புரந்த²ர ஸ்ரீ: புரமுத்பதாகம்
ப்ரவிஶ்ய பௌரை ரபி³நந்த்²ய மாந: ।
பு³ஜே பு³ஜங்கே²ந்த்ர ஸமாநஸாரே
பூ³ய ஸ்ஸபூ³மே ர்து³ர மாஸஸஜ்ஜ ॥ 74

(ப-ரை) புரந்தத²ர = தேவர்கோனின்; ஸ்ரீ: = செல்வம் போன்று செல்வமுடைய; ஸ: = அந்த திலீப மன்னன்; பௌரை: = நகர மக்களால்; அபி³ நந்த்²ய மாந: = மகிழப் பட்டவனாய்; உத்பதாகம் = ஏற்றப்பட்ட கொடியுடைய; புரம் = நகரத்தை; ப்ரவிஶ்ய = நுழைந்து; பு³ஜங்கே³ந்த்²ர = ஆதிசேடனுக்கு; ஸமாந = நிகரான; ஸாரே = வலிமையுடைய; பு³ஜே = தோளில்; பூ³ய: = மறுபடியும்; பூ³மே: = பூமியின்; து³ரம் = பாரத்தை; ஆஸஸஜ்ஜ = தாங்கினான்.

(க-ரை) தேவேந்திரனைப் போல் செல்வமுடைய திலீப மன்னன் மக்களால் துதிக்கப்பட்டவனாய், கொடிகள் ஏற்றப்பட்ட நகரத்தில் நுழைந்து மறுபடியும் பூபாரம் தாங்கி அரசாண்டான். (விரியுவமையணி)

சு ॥ அத¹ நயநஸமுத்த¹ம் ஜ்யோதி ரத்ரேரிவ த்²யௌ:
ஸுரஸரிதி²வ தேஜோ வஹ்நி நிஷ்ட்¹யூத மைஶம் ।
நரபதி குலபூத்யை க²ர்ப³மாத³த்த ராஜ்ஞீ
கு²ருபி³ ரபி³நிவிஷ்டம் லோகபாலாநு ப³ாவை: ॥ 75

இதி காளிதாஸ க்ரிதௌ ரகு²வம்ஶ மஹாகாவ்யே த்விதீய ஸ்ஸர்க²:

(ப-ரை) அத¹ = பிறகு; த்²யௌ: = ஆகாயம்; அத்ரே: = அத்ரி மா முனியின்; நயந ஸமுத்த¹ம் = கண்களில் பிறந்த; ஜ்யோதி ரிவ = சந்திரனைப்போல்; ஸுரஸரித் = தேவகங்கை; வஹ்நி = அக்கினியால்; நிஷ்ட்¹யூதம் = வைக்கப்பட்ட; ஐஶம் = பரம சிவனைச் சார்ந்த; தேஜ: = குமாரஸ்வாமியைப் போலும்; ராஜ்ஞீ = சுதக்ஷிணாதேவி; நரபதி = திலீப மன்னனின்; குல = வமிசத்தின்; பூ³த்யை = ஐசுவரியத்திற்காக; கு²ருபி³ = பெரிதான; லோகபால =

திக்குப்பாலர்களின்; அநுபாவைஃ = ஒளிகளால்; அபி நிவிஷ்டம் = நுழையப்பட்ட; கர்பம் = சூலை; ஆதத்த = பெற்றனள்.

(க-ரை) பிறகு, சுதக்ஷிணாதேவி சந்திரனைப் போன்ற ஒளியுடன், முருகனைப் போன்ற பராக்கிரமத்துடன், திக்குப்பாலர்களின் ஆக்கத்துடன் கூடிய மகனுள்ள சூல்கொண்டாள். (தொகையுவமையணி)

இது காளிதாஸ ரியற்றிய ரகுவம்ச மகா காப்பியத்தில் இரண்டாம் சருக்கத்திற்குத் திருத்தணிவாழ் ஸ்ரீவித்யாநந்தரெனும் செ. ராமலிங்காசாரியரா லியற்றப்பட்ட தெளிவுரை.

# ரகுவம்ச மகா காவியம்

## மூன்றாம் சருக்கம்

சு॥ அதே¹ப்ஸிதம் ப³ர்து ருபஸ்தி¹தோத³யம்
ஸகீ¹ஜநோ த்³வீக்ஷண கௌமுதீ² முக¹ம் ।
நித³ாந மிக்ஷ்வாகு குலஸ்ய ஸந்ததே
ஸஸு³தக்ஷிணா தௌ³ஹ்ரித லக்ஷணம்த³தௌ³ ॥

(ப-ரை) அத¹ = கருந்தரித்த பிறகு; ஸு³த³க்ஷிணா = ஸுதக்ஷிணா தேவி; உபஸ்தி¹தோத³யம் = பலனடைந்த; ப³ர்துः = பதியாகிய திலீப மன்னனுக்கு; ஈப்ஸிதம் = எண்ணிய எண்ணத்தின் உருவாயும்; ஸகீ²ஜந = தோழிகளின்; உத்³வீக்ஷண = பார்வைக்கு; கௌமுதீ²முக¹ம் = நிலவு தோன்றுவது போன்றும்; இக்ஷ்வாகு குலஸ்ய = இக்ஷ்வாகு அரசன் மறபில்; ஸந்ததேः = பாரம்பரியத்திற்கு; நித³ாநம் = மூலக்காரணமாகிய; தௌ³ஹ்ரித³ = சூலின்; லக்ஷணம் = சின்னத்தை; த³தௌ³ = அடைந்தாள்.

(க-ரை) பிறகு சுதக்ஷிணா தேவி தன் பர்த்தாவுக்குப் பிரியமாகவும் தோழிகளின் கண்களுக்கு விருந்தாகவும் இக்ஷ்வாகுவின் மறபிற்கு காரணமாகியுள்ள சூலின் அறிகுறிகளை அடைந்தாள். (ஒற்றை மணிமாலையணி)

சு ॥ ஶரீரஸாத³ா த³ஸமக்³ர பூ³ஷணா
முகே¹நஸாலக்ஷ்யத லோ³த்ர பாண்டுநா ।
தநுப்ரகாஶே நவிசேயதாரகா
ப்ரபா³த கல்பா ஶஶிநேவ ஶர்வரீ ॥ 2

(ப-ரை) ஶரீர = உடலின்; ஸாத³ாத் = மெலிவால்; அஸமக்³ர = மிதமான; பூ³ஷணா = நகைகள் அணிந்தவளாயும்; லோத்³ர = லோத்திரமென்னும் பூப்போன்று; பாண்டுநா = வெண்மையான; முகே¹ந = முகத்துடன்; உபலக்ஷிதா = தோன்றும்; ஸா = அந்த சுதக்ஷிணா தேவி; விசேய = தேடினாலன்றி காணக்கூடிய; தாரகா = விண்மீன்களையுடைய; தநு = சொற்பமாகிய; ப்ரகாஶேந = ஒளியுடைய ப்ரப³ாத கல்பா = காலைநேரத்து; ஶஶிநா = சந்திரனுள்ள; ஶர்வரீவ = இரவுபோல்; அலக்ஷ்யத = தோற்றங்கொண்டாள்.

(க-ரை) உடல் மெலிந்தமையால், சில நகைகளை மட்டும் அணிந்த சுதாக்ஷிணா தேவி லோத்திரப்பூ போன்ற வெளுத்த முகமுள்ளவளாய் சில விண்மீன்கள் மட்டும் காணக்கூடிய வைகரை வேளைக்கு நிகராய இரவில்தோன்றி சற்றே ஒளியுள்ள சந்திரனைப் போல் மக்களால் பார்க்கப்பட்டாள். (உவமை மற்றும் புனைவுளி யொப்புமைக் கூட்டவணி)

சு॥ தத³ாநநம் ம்ரித்ஸுரபி³ க்ஷிதீச்வரோ
ரஹ ஸ்யுபாக்³ராய ந த்ரிப்தி மநாயயௌ ।
கரீய ஸிக்தம் ப்ரிஷிதை꞉ பயோமுசாம்
ஸுசிவ்யபாயே வநராஜி பல்லவம் ॥ 3

(ப ரை) க்ஷிதீச்வர꞉ = திலீபமன்னன்; ரஹஸி = தனிமையில்; ம்ரித் = மண்ணால்; ஸுரபி³ = நறுமணமுடைய; தத் = அந்த சுதக்ஷிணாதேவியின்; ஆநநம் = முகத்தை; உபாக்³ராய = முகர்ந்து; ஶுசிவ்யபாயே = முதுவேனில் கடைசியில்; பயோமுக¹ாம் = மேகங்களின்; ப்ரிஷிதை꞉ = திவலைகளால்; ஸிக்தம் = நனைக்கப்பட்ட; வனராஜி = நீர்த்தாமரையால் ஏற்பட்ட; பல்வலம் = அற்பமான குட்டையை; உபாக்³ராய = முகர்ந்து; கரீவ = யானையை போல்; த்ரிப்திம் = மன நிறைவை; அநாயயௌ = அடையாமற்போனான்.

(க-ரை) திலீப மன்னன் தனிமையில் மண்ணுண்டமையால் மணம் கொண்ட அந்த சுதக்ஷிணா தேவியின் முகம், வேனிற்கால மேகங்களின் திவலைகளால் நனைந்த காட்டிலுள்ள சிறு குட்டைகளின் மணத்தை யானை முகர்ந்து மனநிறைவற்றதுபோல் திருப்தி அடையவில்லை (கரவுவெளிப்படுப்பணி மற்றும் பதப்பொருட்காட்சியணி)

சு ॥ தி³வம் மருத்வாநிவ பே⁴ாக்ஷ்யதே பு⁴வம்
தி³க³ந்த விஸ்ராந்ரதே²ா ஹி தத்ஸுத꞉ ।
அதோ²ாऽபி⁴லாஷே ப்ரத²மம் தத²ாவிதே⁴
மநோப³லம் த³ந்யரஸாந்விலங்க்⁴யஸா ॥ 4

(ப-ரை) ஹி = எக்காரணத்தால்; தி³க் அந்த = திசை முனைகளில்; விஸ்ராந்த = பரவிய; ரத²꞉ = தேர் உடைய; தத்ஸுத꞉ = அந்த சுதக்ஷிணா தேவிமகன்; மருத்வாந் = இந்திரன்; தி³வமிவ = தேவருலகமும் போன்று; பு⁴வம் = பூமியை; பே⁴ாக்ஷ்ய = அனுபவிப்பானோ; அத꞉ = அக்காரணத்தால்; ப்ரத²மம் = ஆதியில்; ஸா = அந்த

சுதக்ஷிணா தேவீ; தத$^{1}$ரவிதே$^{3}$ = மண்ணுருவான; அபிலாஷே = பிற பொருள்களை; விலங்$^{3}$ய = விட்டு; மநः = மனதை; ப$^{2}$ப$^{2}$ந்த$^{3}$ = கட்டினாள்.

(க-ரை) அந்த ஸுதக்ஷிணாதேவி பூமியனைத்தும் ஆளும் மகனைப் பெறுவதற்காய அறிகுறிகளாக பிறபொருள்களை விட்டு மண்ணுருவாய பொருளையே முதலில் விரும்பியவள் ஆனாள். (விரியுவமை மற்றும் விதியணி)

சு॥ ந மே ஹ்ரியா ஶம்ஸதி கிஞ்சி தீ$^{2}$ப்ஸிதம்
ஸ்ப்ரிஹாவதீ வஸ்துஷு கேஷு மாக$^{3}$தீ$^{3}$ ।
இதிஸ்ம ப்ரிச்ச$^{1}$ த்யநுவேல மாத்$^{2}$ரிதः
ப்ரியா ஸகீ$^{1}$ ருத்தர கோஸ லேஶ்வரः ॥ 5

(ப-ரை) மாகதீ$^{3}$ = (மகதநாட்டரசு மகளான) சுதக்ஷிணா தேவி; ஹ்ரியா = வெட்கத்தால்; கிஞ்சித் = எதனை; ஈப்ஸிதம் = விரும்பிய பொருளோ அதை; மே - எனக்கு; நஶம்ஸதி = செப்ப மாட்டாள்; கேஷு = எந்த; வஸ்துஷு = பொருட்களில்; ஸ்ப்ரிஹாவதி = விருப்பமுள்ளதோ; இதி = இவ்வாறென்று; அநுவேலம் = ஒவ்வொரு கணமும்; ஆத்$^{2}$ரிதः = ஆதரவுடன் கூடிய; உத்தரகோஸலேஶ்வரः = திலீப மன்னன்; ப்ரியா = சுதக்ஷிணாதேவியின்; ஸகீ$^{3}$ = தோழிகள்; ப்ரிச்$^{1}$ச ஸ்ம = கேட்டான்.

(க-ரை) சுதக்ஷிணா தேவி வெட்கத்தால் தனக்கெதன் மீது விருப்பமுண்டோ அதை கூறமாட்டாள். அதனால், அவளுக்கு எப்பொருள் மீது விருப்பமுண்டோ அதனை அறிந்துக் கொள்வதற்கு திலீபன் அவளது தோழிகளை அவ்வப்போது ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தான். (நுட்பவணி)

சு॥ உபேத்ய ஸா தே$^{2}$ாஹத$^{3}$ து$^{2}$ःக$^{1}$ ஶீலதாம்
யதே$^{2}$வ வவ்ரேத த$^{2}$பஶ்ய த$^{2}$ாஹ்ரிதம் ।
நஹீஷ்ட மஸ்யத்ரிதி$^{2}$வேऽபி பூ$^{8}$பதே
ரபூ$^{3}$ த$^{2}$நாஸாத்$^{2}$ய மதி$^{0}$ஜ்ய த$^{8}$ந்வநः ॥

(ப-ரை) ஸா = அந்த சுதக்ஷிணாதேவி; தே$^{2}$ாஹத$^{2}$ = சூல் கொண்ட எண்ணத்தால்; து$^{2}$ःக$^{1}$ஶீலதாம் = வருத்தம்; உபேத்ய = அடைந்த; யத் = எப்பொருளை; வவ்ரே = விழைந்த

ணளோ; தத் = அப்பொருளை; ஆஹ்ரிதம் = கொண்டுவரப்பட்டதாய்; அபஶ்யதே²வ = பார்த்தும்; ஹி = ஏக்காரணத்தால்; அதி³ஜ்யத³ந்வ = தொடுக்கப்பட்ட வில்லுடைய; அஸ்ய = இந்த; பூ; பதேஃ = திலீப மன்னனுக்கு; இஷ்டம் = விரும்பிய பொருள்; த்ரிதி³வேஃபி = சொர்க்கத்திலும்; நாஸாத்³யம் = அடைய முடியாததாய்; நாபூ³த் = இல்லாது போயிற்று

(க-ரை) சுதக்ஷிணாதேவி சூல் கொண்டனள் ஆதலால், எந்தப் பொருளை ஆசைப் பட்டாலும் அது கொண்டு வந்து தரப்படும். ஏனெனில் அவள் விரும்பும் பொருள் சொர்கத்தில் இருந்த போதிலும் அதை அடைதல் என்பது திலீப மன்னனுக்குப் பெற முடியாததன்று. (கருத்துடைமையணி)

ஸு॥ க்ரமேண நிஸ்தீர்ய சதே²ஹத³வ்யத³ாம்
ப்ரசீயமாநாவயவா ரராஜஸா ।
புராண பத்ராபக²மா த³நந்தரம்
லதேவ ஸந்நத்³த³ மநோஜ்ஞ பல்லவா ॥ 7

(ப-ரை) ஸா = அந்த சுதக்ஷிணாதேவி; க்ரமேண = படிப்படியாக; தே³ஹத³ = சூல்கொண்டவளின் விழைவாலாய; வ்யத³ஞ்ச = துயரை; விஸ்தீர்ய = கடந்து; ப்ரசீயமாந = பேணப்பட்ட; அவ்யவாஸதீ = உறுப்புகளுடையவளாய்; புராண = பழைய (பழுத்த); பத்ர = இலைகளின்; அபக²மாத் = உதிர்ந்த; அநந்தரம் = பிறகு; ஸந்நத்³த³ = பிறந்த; மநோஜ்ஞ = மனதைக் கொள்ளைக்கொள்ளும்; பல்லவாம் = துளிரிலைகளுடைய; லதேந = கொடியைப் போன்று; ரராஜ = மிளிர்ந்தனள்.

(க-ரை) சுதக்ஷிணாதேவி வரவர சூல் உண்டான துயர் நீங்கி, உறுப்புகள் திடங்கொள்ள, பழுத்த இலைகள் உதிர்ந்த பிறகு, மனதைக் கொள்ளைக் கொள்ளும்படி தளிர்ந்துவரும் கொழுந்திலைகள்போன்று ஒளிமிக்கவளானாள். (நிகரெடுத்துக்காட்டுவமையணி)

அவ ॥ பிற அறிகுறிகளும் புனைந்துரைக்கப்படுகிறது.

ஸு॥ தி³நேஷு க³ச்ச²த்ஸு நிதாந்த பீவரம்
ததீ³ய மாநீல முக²ம் ஸ்தநத்³வயம் ।
திரஶ்ச கார ப்³ரமராபி³ லீநயோஃ
ஸுஜாதயோஃ பங்கஜ கோஶயோ ஶ்ரியம் ॥ 8

(ப-ரை) தி²நேஷு=சூல் கொண்டவள் எண்ணிய நாட்கள்; க²ச்ச¹த்ஸுஸத்ஸு=கடந்துகொண்டேசெல்கையில்; நிதாந்த=மிகவும்; பீவரம்=பருத்த; ஆநீல=அனைத்தும் கருமையான; முக¹ம்=முலைநுனிகளுடைய; தத்³யம்=அந்த சுதக்ஷிணாதேவியின்; ஸ்தநத்வயம்=இரு முலைகளும்; ப்³ரமர=வண்டுகளாலும்; அபி³லீநயோ:=சூழப்பட்ட; ஸுஜாதயோ:=அழகான; பங்கஜ கோஶயோ:=தாமரை மொட்டுக்களின்; ஶ்ரியம்=ஒளியை; திரஸ்சகார=தோற்கடித்தன.

(க-ரை) பல பொருட்கள் மீது ஆசைக்கொள்ளும் நாட்கள் கழியவே சுதக்ஷிணாதேவியின் கொங்கைகளனைத்திலும் கறுநிறம் படர, கறுத்த முலை நுனிகளுடையவளாய், மேலே வண்டுகள் சூழாநிற்கும் தாமரை மொட்டுகளின் ஒளியை தோற்கடித்தாள். (தற்குறிப்பணி)

ஹ॥ நித³ாந க²ர்ப³ா மிவ ஸாக³ராம்ப³ராம்
ஶமீ மிவாப்³யந்தரலீந பாவகாம் ।
நதீமிவாம்த ஸ்ஸலிலாம் ஸரஸ்வதீம்
ந்ரிப ஸ்ஸஸத்வாம் மஹிஷு மமந்யத ॥ 9

(ப-ரை) ந்ரிப:=திலீப மன்னன்; ஸஸத்வாம்=சூல் கொண்டுள்ளவளும்; மஹிஷும்=பட்டதரசியாகிய; சுதக்ஷிணாதேவியை; நித³ாந=நிதியை; க²ர்ப³ம்=வயிற்றில் உள்ள; ஸாக³ராம்ப³ராமிவ=பூமியைப் போன்று; அப்³யந்தர=இடைப் பிரதேசத்தில்; லீந=அடங்கியுள்ள; பாவகாம்=வன்னியையுடைய; ஶமீமிவ=வன்னிமரம் போல்; அந்த:=உள்ளடங்கிய; ஸலிலாம்=நீருள்ள; ஸரஸ்வதீம்=சரஸ்வதி என்ற ஆறு போன்றும்; அமந்யத=எண்ணினான்.

(க-ரை) திலீப மன்னன் கருவுற்றிருந்த சுதக்ஷிணாதேவியை ரத்தினங்களடங்கிய பூமியைப் போலும், வன்னியைக் கருவில் கொண்டுள்ள வன்னிமரம் போன்றும், அந்தர்வாகினியாகிய சரஸ்வதி நதிபோன்றும் நினைத்தான். (அதாவது—அந்த கருவிலுள்ள மகவு அரசனாய், ஒளி மிகுந்து மிகத்தூய்மையானவனாக இருப்பான் என்று எண்ணினான்) (விரிவுவமையணி)

ஹ॥ ப்ரியாநுராக³ஸ்ய மநஸ்ஸமுந்நதே:
பு³ஜார்ஜிதாநாம்ச தி³க²ந்த ஸம்பதா³ம் ।

யத[1]ாக்ரமம் பும்ஸவநாதி[2]கா: க்ரியா
த்[3]ரிதேஶ்ச தீ[3]ரஸ்ஸத்[2]ரிஶ ர்வ்யத[3]த்தஸ: ॥ 10

(ப-ரை) தீ[3]ர:=வித்வானான; ஸ:=திலீபமன்னவன்; ப்ரியா= அன்புள்ளவளான சுதக்ஷிணா தேவி மீது; அநுராக[2]ஸ்ய=அன்புக் கும்; மநஸ்ஸமுந்நதே:=உதாரத்திற்கும்; பு[3]ஜஆர்ஜிதாநாம்= தோள்வலிமையால் சம்பாதித்த; தி[2]க் அந்த=திசை முனைகளில்; ஸம்பத[3]ாஞ்ச=செல்வங்களுக்கும்; த்[3]ரிதேஶ்ச=மகன் உண்டாகப் போகிறான் என்ற மகிழ்ச்சியால்; ஸத்[2]ரிஶீ=தகுந்த; பும்ஸவந= சீமந்தம்; ஆதி[2]கா:=முதலிய; க்ரியா:=சடங்குகளை; யத[1]ாக்ரமம்= முறை தவறாது; வ்யத[3]த்த=செய்தான்.

(க-ரை) பண்டிதனாகிய திலீப மன்னன் அன்பு மனைவி யான சுதக்ஷாதேவி அன்புக்கும், தன் உதாரத்திற்கும், தோள் வலிமையால், எல்லாதிசைகளிலும் சம்பாதித்த செல்வங்கட்கும், மகன் பிறக்கிறானென்ற மகிழ்ச்சிக்குகந்தவாறு சீமந்தம் முதலிய கிரிகைகளை முறைதவறாது செய்தான். (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ ஸுரேந்த்[2]ர மாத்ராஶ்ரித க[2]ர்ப[3]கௌ[2]ரவா
த்ப்ரயத்ந முக்தாஸநயா க்[2]ரிஹாக[2]த: ।
தயோபசாரா ஞ்ஜலி கி[1]ந்ந ஹஸ்தயா
ஸநந்த பாரிப்லவ நேத்ரயா ந்ரிப: ॥ 11

(ப-ரை) க்ரிஹ ஆக[2]த:=இல்லத்தை நோக்கி வந்த; ந்ரிப:= திலீப மன்னன்; சுரேந்த்[2]ர=திக்குப் பாலர்களின்; மாத்ரா=அம்சங் களாலும்; ஆஶ்ரித=நுழையப்பட்ட; க[2]ர்ப[3]=கருவின்; கௌரவாத்= பளுவால்; ப்ரயத்ந=முயற்சியாலும்; முக்த=விடப்பட்ட; ஆஸ நயா=பீடமுள்ளவளும்; உபசார = உபசாரத்தின் பொருட்டு; அஞ்ஜலி=அஞ்சலியில்; கி[1]ந்ந=துயருடன் கூடிய; ஹஸ்தயா= கைகள் உடையவளும்; பாரிப்லவ=சஞ்சலமான; நேத்ரயா= கண்களுடையவளும்; (ஆகிய) தயா=அந்த சுதக்ஷிணா தேவியால் ஸநந்த=மகிழ்ந்தான்.

(க-ரை) திலீபமன்னன் தன் இல்லம் சேர்ந்து, திக்குப் பாலர் களின் புகழைப் பெற்று, வயிற்றிலுள்ள சிசுவின் பளுவால் மிக்க முயற்சியுடன் தனக்கு மரியாதை யளிக்கும் தன் அன்பு மனைவி யாகிய, சுதக்ஷிணா தேவியைக் கண்டு களித்தான். (பொதுமை யணி)

12

ஃ ॥ குமார ப்³ரித்யா குஶலை ரநுஷ்டி¹தே
பி³ஷக்²பி³ ராப்தை ரத¹ க³ர்ப³ ப³ர்மிணி ।
பதிஃ ப்ரதீதஃ ப்ரஸ வோந்முகீ¹ம் ப்ரியாம்
த³த³ர்ஶ காலே தி³வ மப்³ரிதா மிவ ॥ 12

(ப-ரை) அத¹=பிறகு; குமாரப்ரித்யா=குழந்தை மருத்துவத்தில்; குஶலைஃ = நிபுணரான; ஆப்தைஃ = நட்புடைய; பி³ஷக்²பி³=மருத்துவர்களால்; க³ர்ப³ ப³ர்மிணி=கருவைப் பேணுதல்; அநுஷ்டி¹தே ஸதி=செய்யப்பட்டது; காலே=பத்தாம் மாதம்; (முதுவேனிற்குப் பிறகு); ப்ரஸவ=பெறுவதற்கு; உந்முகீ¹=எதிர்நோக்கும்; ப்ரியாம்=அன்புமிக்க சுதக்ஷிணா தேவியை; அப்³ரிதா=முகில் சூழ்ந்த; தி³வமிவ=வானம் போன்று; பதிஃ=பர்த்தாவான திலீப மன்னன்; ப்ரதீதஸ்ஸந்=மகிழ்வுற்று; த³த³ர்ஶ=கண்டான்.

(க-ரை) கர்ப்பிணி மருத்துவத்தில் நிபுணர்களான தனது நண்பர்களைக் கொண்டு எல்லா மருத்துவமும் செய்துகொண்டிருக்க, பத்தாம் மாதம் முதுவேனிற் கடந்து மழைப் பொழியத் தக்கதாய் அடர்ந்த முகில்கள் சூழ்ந்துள்ள வானம்போன்று பிரசவ வேதனையோடிருந்த சுதக்ஷிணா தேவியை திலீபமன்னன் மகிழ்ச்சியோடு கண்டான். (உருவகவணி)

ஃ ॥ க்³ரஹைஸ்ததஃ பஞ்சபி³ ருச்ச ஸம்ஸ்தி¹தைஃ
அஸூர்யகை³ ஸ்ஸூசித ப³ாக்²ய ஸம்பத³ாம் ।
அஸூத புத்ரம் ஸமயே ஶசீஸமா
த்ரிஸாத³நா ஶக்தி ரிவார்த்¹ மக்ஷயம் ॥ 13

(ப-ரை) ததஃ=பிறகு; ஶசீஸமாஃ=சசீதேவிக்கு நிகரான; ஸா=அந்த சுதக்ஷிணா தேவி; ஸமயே=பத்தாம் மாதத்தில்; உச்ச=சிறப்பிடங்களில்; ஸம்ஸ்தி¹தைஃ=உள்ளவையும்; அஸூர்யகை² = பரியோடு சேராதுமுள்ள; பஞ்சபி³ஃ = ஐந்தாகிய; க்ரஹைஃ=கிரகங்களாய்; ஸூசித=குறிக்கும்; ப³ாக்யஸம்பத³ம்=செல்வமிக்க; புத்ர=மகனை; த்ரி=வலிமைமிக்க மந்திரங்கள்; ஸாத³நா=கொடுக்கவல்ல; ஶக்திஃ=வலிமை; அக்ஷயம்=அழிவற்ற அர்த¹மிவ=பொருள் போன்று அஸூத=பெற்றனர்.

(க-ரை) பிரபுக்கள் பொதுவாக அவரவர் பாக்கியத்தைப் பொருத்து இரண்டு மூன்று நான்கு கோள்கள் உச்சமான விடுகளில்

உள்ளபோது பிறக்கின்றனர். அவ்வாறிருக்க; மிக உயர்ந்த பதவி யைக்குறிக்கும் ஐந்து கிரகங்களும் மறையாமல் மிக உச்சத்தில் உள்ள நல்லவேளையில்: அரசாட்சியானது பிறர் அடையப்படாத ஆலோசனைகளை, துணிவெனும் அரசியலின் அமைவின் உருவா கிய வலிமை எவ்வாறு மேன்மை மிக்க செல்வத்தை கொடுக்குமோ, அவ்வாறே சசீதேவிக்கு நிகரான சுதக்ஷிணாதேவி மாபெரும் பாக்கியவானாகிய மகனை ஈன்றாள். (மிகுதினவிற்சியணி)

சு॥ தி²ஶ: ப்ரஸேது² ர்மருதோ வபு ஸ்ஸுக²ா:
ப்ரத²க்ஷிணார்சி ர்ஹவி ரக்²நி ராத²தே² ।
ப²பூ³வ ஸர்வம் ஶுப⁴ஶம்ஸி தத்க்ஷணம்
ப⁴வேஹி லோகாப்⁴யுத²யாய தாத்²ரிஶீம் ॥ 14

(ப-ரை) தத்க்ஷணம் = அப்போது; தி²ஶ: = திக்குகள்; ப்ரஸேது: = தூய்மையாயிற்று; மருத: = வாயுக்கள்; ஸுகா = உல்லாச மாக; வபு: = வீசிற்று; அக்நி: = வேள்வி நாதனான அக்கினி; ப்ரத³க்ஷிண = வலஞ்சுழலும்; அர்சிஸ்ஸந் = கொழுந்துகளுடையவ னாய் ஹவி = நெய் முதலிய அவிகளை; ஆத²தே² = ஏற்றனர்; இத்த²ம் = இதுபோல்; ஸர்வம் = எல்லாமும்; ஶுபஶம்ஸி = நன்மை யைக்குறிப்பன; ப²பூ³வ = ஆயிற்று; தத²ாஹி = அதுபோலவே; தாத்²ரிஶீம் = அந்த ரகுமன்னனைப் பேயன்றவர்களின்; ப⁴வ: = பிறப்பானது; லோக = உலகத்தின்; அப்⁴யுத²யாய = மேன்மைக்கே; ப¹வதி = ஆகிறது.

(க-ரை) அப்போது திசை நான்கும் தூய்மையாய் ஒளித்தன. தென்றல் இதமாக வீசியது. அக்னியானவன் வலமாகச் சுழலும் கொழுந்துவிட்டுக் கொண்டு அவிகளை ஏற்றான். இம்மாதிரி உலக நன்மைக்கு தேவர்களின் மகிழ்ச்சியை அறிவிக்கும் எல்லா நல்ல அறிகுறிகளும் தென்பட்டன. (மாலைவிளக்கணி)

சு॥ அரிஷ்ட ஶய்யாம் பரிதோவிஸாரணா
ஸுஜந்மந ஸ்தஸ்ய நிஜேந தேஜஸா
நிஶீத² தீ²பாஸ் ஸஹஸா ஹதத்²விஷோ:
ப²பூ³வு ராலேக்¹ய ஸமர்பிதா இவ ॥ 15

(ப-ரை) அரிஷ்ட = பிரசவ விடுதியில்; ஶய்யாம் = படுக்கையை பரித: = எங்கும், விஸாரிணா = பரவும்; ஸுஜன்மந: = தகுந்த

பரப்புடைய; தஸ்ய = அந்த மகவின்; நிஜேன = தன்னுடைய; தேஜஸா = ஒளியில்; ஸஹஸா = சீக்கிரமாக; ஹத = போக்கப்பட்ட; த்²விஷः = ஒளியுள்ள; நீஶீத² = நள்ளிரவில்; தீபாः = விளக்குகள்; ஆலேக்¹ய = சித்திரத்தில்; ஸமர்பிதா = வைக்கப்பட்டவை போன்று; ப²பூ⁸வ = ஆயிற்று.

(க-ரை) பிரசவ விடுதியில் படுக்கையில் வைக்கப்பட்டுள்ள சிசுவின், எங்கும் பரவிய ஒளியால் புறக்கணிக்கப்பட்ட விளக்குகள், சித்திரங்களில் காண்பவைப் போன்று ஆயிற்று. (மிகுதினவிற்சியணி)

சு ॥ ஜநாய ஶுத்³த⁴ாந்த சராய ஶம்ஸதே
குமார ஜந்மாம்ரிதஸம் மிதாக்ஷரம் ।
அதே²ய மாஸீத் த்ரயமேவ பூ⁴பதேः
ஶஶிப்ரப⁴ம் ச¹த்ரமுபேச சாமரே ॥ 16

(ப-ரை) பூ⁸பதேः = திலீப மன்னனுக்கு; அம்ரித = அமுதுடன்; ஸம்மித = நிகரான; அக்ஷரம் = எழுத்துக்கள் உள்ள; குமாரஜந்ம = மகனின் பிறப்பை; ஶம்ஸதே = கூறும்; ஶுத்³த⁴ாந்த = அந்தப்புரத்தில்; சராய = வாழும்; ஜநாய = மக்களுக்கு; ஶஶி = சந்திரனின்; ப்ரப⁸ம் = ஒளியைப்போல் ஒளிக்க; ச¹த்ரம் = குடையை; உபே⁸ = இரண்டான; சாமரே = சாமரங்களும்; த்ரயமேவ = மூன்றுமே; அதே²யம் = கொடுக்கக்கூடாதது; ஆஸீத் = ஆயிற்று.

(க-ரை) திலீப மன்னனுக்கு அமுதுக்கு நிகரான எழுத்துக்கள் உண்டாகும்படி மகனின் பிறப்பை அறிவித்த அந்தப்புறத்தில் வாழ் மகளிருக்கு வெண்குடையும் சாமரங்கள் இரண்டுமாக மூன்றுந் தவிர மற்றவை யாவும் அன்பளிப்பாக அளிவிக்கப்பட்டன. (ஏனெனில், அவை மூன்றும் அரசர்க்கு இன்றியமையாதிருக்க வேண்டியவை). (வீறுகோளணி).

சு ॥ நி¹வாத பத்²ம ஸ்திமிதேந சக்ஷுஷா
ந்ரிபஸ்ய காந்தம் பிப²தஸ் ஸுதாநநம் ।
மஹோத³தே³ः பூரஇவேந்து³ தர்ஶநாத்
கு²ரு ப்ரஹர்ஷः ப்ரப³பூ⁸வ நாத்மநு ॥ 17

(ப-ரை) நிவாத = காற்றில்லாத இடத்திலுள்ள; பத்ம = தாமரையைப் போல்; ஸ்தி¹மிதேந = அசைவற்ற; சக்ஷுஷா =

கண்ணால்; காந்தம்=மனதுக்குகந்த; ஸுத ஆநநம்=மகனுடைய முகத்தை; பிப²தः=பார்த்துக் கொண்டுள்ள; ந்ரிபஸ்ய=திலீப மன்னனுடைய; கு²ரு:=அதிகமான; ப்ரஹர்ஷ=மகிழ்ச்சி; இந்து² த²ர்ஶநாத் = சந்திரனைப்பார்த்தால்; கு²ரு: = அதிகான; மஹோத³தே⁴:=பெருங்கடலை; பூர இவ=வெள்ளம் நிரப்புவது போல்; ஆத்மநி=உடலில்; நப்ரப²பூ⁴வ=பிடிக்காமற் போயிற்று.

(க-ரை) ஸமுத்திரன் முழுமதியைப் பார்த்தபோது பொங்கி நிற்பதுபோல், திலீபமன்னன் குமாரனின் மனங்கவர் முகத்தைக் கண்கொட்டாது, காற்றில்லா விடத்தில் தாமரையைப்போல் அசைவற்றக் கண்ணால் பார்த்தவண்ணம் ஆனந்தத்தில் மூழ்கி இருந்தான். (உவமையணி)

சி॥ ஸ ஜாதகர்மண்யதிலே தபஸ்விநா
தபோவநா தே²த்ய புரோத³ஸா க்ரிதே।
தி²லீபஸூநுர் மணி ராகரோ த்³ப³வः
ப்ரயுக்த ஸம்ஸ்கார இவாதி⁴கம் ப²பெ⁴ள ॥ 18

(ப-ரை) ஸः தி²லீபஸூநுः= அந்த திலீப மன்னனுடைய மகன்; தபஸ்விநா=தவத்திற் சிறந்த; புரோத³ஸா=வசிட்டரால்; தபோவநாத்=தவம் செய்யும் காட்டிலிருந்து; ஏத்ய=வந்து; அகி¹லே=எல்லா; ஜாதகர்மணி=ஜாத கருமம் என்னும் சடங்குகள்; க்ரிதே ஸதி=செய்துக் கொண்டிருக்க; ப்ரயுக்த=செய்யப்பட்ட; ஸம்ஸ்காரः=சாணைப் பிடித்தல் முதலிய தொழில்களால் உண்டாகிய; ஆகரः=கனியில்; உத்³ப³வः=பிறந்த; மணிரிவ=ரத்தினங்களைப் போல்; அதி⁴கம்=மிகவும்; ப²பெ⁴ள=மிளிர்ந்தான்.

(க-ரை) தபோவனத்திலிருந்து புரோகிதரான வசிட்ட முனிவர்தாம் வந்திருந்து அரசகுமாரனுக்கு ஜாதகருமம் முதலிய சடங்குகள் அனைத்தும் நடத்திக் கொடுத்ததால், அந்த மகவு வசிட்டர் மந்திர மகிமையால், சுரங்கத்திலிருந்து வெட்டி எடுத்துவந்த மணிக்குச் சாணை பிடித்தால் எவ்வாறு அதிகப் பிரகாசமாக இருக்குமோ அதுபோல் பிரகாசித்தான். (மென்மேலுயர்ச்சியணி)

சு॥ ஸுக¹ஶ்ரவோ மங்க²ள தூர்ய நிஸ்வநாः
ப்ரமோத² ந்ரித்தைஸ் ஸஹ வாரயோஷிதாம்।
ந கேவலம் ஸத²மநி மாக³தீ⁴ः பதேः
பதி வ்யஜ்ரிம்ப⁴ந்த தி²வௌகஸா மபி ॥ 19

(ப-ரை) ஸு¹ஶ்ரவாঃ = செவிக்கினிய; மங்க²ள = பொலிவுக் குகந்த; தூர்ய = பல இசைக் கருவிகளின்; நிஸ்வநாঃ = ஒலிகள்; வாரயோஷிதாம் = வேசியர்களின்; ப்ரமோத² = மகிழ்ச்சியாலான; ந்ரித்தைஸ்ஸஹ = நாட்டியத்துடன்; மாக²தி³பதேঃ = திலீப மன்ன னுடைய; ஸத்³மநி கேவலம் = வீட்டிலேயே; ந வ்யஜ்ரிம்ப³ந்த = பரவவில்லை; கிம்து = மேலும்; தி²வௌகஸாம் = தேவர்களின்; பத்¹யபி = ஆகாயத்திலும்; வ்யஜ்ரிம்ப³ந்த = பரவியது.

(க-ரை) செவிக்கினிய மங்கள வாத்தியங்களும், கீதங்களும், வேசியர்களின் நாட்டியங்களும் திலீப மன்னனுடைய வீட்டில் மட்டுமன்றி ஆகாயத்திலும் (ஒலித்தன) செய்யப்பட்டது. (வினை முதல் விளக்கணி)

சு॥ ந ஸம்யத ஸ்தஸ்ய ப²பூ⁴வரக்ஷிது
த்²விஸர்ஜயே த்²யம் ஸுதஜந்ம ஹர்ஷிதঃ ।
ருணாபி³த⁴ாநாத்ஸ்வயமேவ கேவலம்
தத²ா பித்ருணா முமுசேஸ ப²ந்த⁴ நாத் ॥ 20

(ப-ரை) ஸுத = மகனுடைய; ஜந்ம = பிறப்பால்; ஹர்ஷிதஸ் ஸந் = மகிழ்ந்தவனாய்; யம் = யாரை; விஸர்ஜயேத் = விடுவிப் பானோ; ரக்ஷிது = காப்பாற்றுகிறவனாகிய; தஸ்ய = அந்த திலீப மன்னனுக்கு; ஸம்யதঃ = கட்டுண்ட குற்றவாளிகள்; நப²பூவ = இல்லாமலிருந்தனர்; கிந்து = மற்றும்; தத²ா = அக்காலத்தில்; ஸঃ = அந்த திலீப மன்னன்; பித்ருணாம் = தென்புலத்தாருடைய; ருண = கடன் என்னும்; அபி³த⁴ாநாத் = பெயருடைய; ப²ந்த⁴நாத் = கட்டி லிருந்து; ஸ்வயமேவ கேவலம் = தானொருவன் மட்டுமே; முமுசே = விடுதலைப் பெற்றான்.

(க-ரை) திலீப மன்னன் வெகுவாக அறனறிந்து அரசாண் டான். அதனால், திருடு முதலிய குற்றங்கள் நடந்ததில்லை. குடிகளில், எவரும் கைதுசெய்யப்படவில்லை. அதனால், தனக் குண்டாய மகப்பேறின் மகிழ்ச்சியால் கருணை கூர்ந்து சிறையி லிருந்து விடுவிக்கக்கூடிய குற்றவாளிகள் ஒருவருமில்லை. அதற்குப் பதிலாக, தானே தனக்கு மகன் பிறந்ததால், தென்புலத்தாரின் கடனிலிருந்து, விடுவித்துக் கொண்டான். (முறையிலுயர்வு நவிற்சியணி)

சு ॥ ஶ்ருதஸ்ய யாயாத³ய மந்த மர்ப⁸க
ஸ்தத¹ா பரேஷாம் யுதி³ சேதி பார்தி¹வ: ।
அவேக்ஷ்ய த⁸ாதோர் க²மநார்த¹ மர்த¹வி
ச்சகார நாம்நா ரகு³மாத்ம ஸம்ப⁸வம் ॥ 21

(ப-ரை) அர்த¹வித் = சொற்பொருளை தெரிந்தவனாகிய; பார்தி¹வ: = திலீப மன்னன் அயம் = இந்த; அர்ப⁸க: = குழந்தை; ஶ்ருதஸ்ய = நூல்களின்; அந்தம் = கரையை; யயாத் = அடைந்தவனாகி; க²மநார்த¹ம் = வரும்பொருளை; அவேக்ஷ்ய = ஆலோசித்து ஆத்மஸம்ப⁸வம் = தன் மகனை; ரகு²ம் = ரகுவென்னும்; நாம் நா = பெயர்சூட்ட; சகார = செய்தான்.

(க-ரை) சொல்லின் பொருளை யறிந்த திலீப மன்னன் தன் மகன் நூலறிவும், பகை வெற்றியும் அடைவானெனத் தெரிந்து அவனுக்கு அப்பொருள் அடங்கப்பெற்ற 'ரகு³' என்ற பெயர் சூட்டினான். (காரணமாலையணி)

சு ॥ பிது: ப்ரயத்நா த்ஸ ஸமக்³ர ஸம்பத²:
ஶுபை⁸ஶ் ஶரீராவ யவைர் தி³நேதி³நே ।
புபோஷ வ்ரித்³தி³ம் ஹரித³ஶ்வ தீ³தி³தே
ரநுப்ரவேஶா தி³வ ப³ாலசந்த்³ரமா: ॥ 22

(ப-ரை) ஸ: = அந்த ரகுமகாராஜன்; ஸமக்³ர ஸம்பத²: = பரிபூரணமான செல்வமுள்ளவனாய்; பிது: = தந்தையாகிய திலீப மன்னனுடைய ப்ரயத்நாத் = முயற்சியால்; ஶுபை⁸: = அழகான; ஶரீர = உடலின்; அவயவை: = உறுப்புகளால்; ஹரித³ஶ்வ = பரிதியின்; தீ³தி³தே: = சுடர்களை; அநுப்ரவேஶாத் = ஓட்டி நுழைவதால்; ப³ாலசந்த்³ரமா இவ = இளமதியைப்போல்; தி³நேதி³நே = நாள்தோறும்; வ்ரித்³தி³ம் = வளர்தல்; புபோஷ = பேணினான்.

(க-ரை) ரகுமன்னன் சகல சம்பத்துக்களுமுடைய தன் தகப்பனாரான திலீப மன்னனுடைய பேணுதலால், அழகான உடலுறுப்புகள் கொண்டுள்ளவனாய், மதியின் வளர்பிறை ரவியின் சுடர்களால் நாள்தோறும் வளர்வது போன்று வளர்ந்து வந்தான். (நிகரெடுத்துகாட்டுவமையணி)

சு॥ உமாவ்ரிஷாங்கௌ ஶரஜந்மநா யத¹ா
யத¹ா ஜயந்தேந ஶசீ புரந்த³ரௌ ।

ததா ந்ரிபஸ்ஸாச ஸுதேந மாகதீ

நநந்தது ஸ்தத் ஸத்ரிஸேநதத்ஸமௌ ॥ 23

(சு-ரை) உமாவ்ரிஷாங்கௌ = பார்வதியும் பரமேசுவரனும்; ஶரஜந்மநா = குமாரஸ்வாமியால்; யதா = எவ்வாறு; நநந்ததுः = மகிழ்ந்தனரோ; ஶசீ புரந்தரௌ = சசீதேவியும் இந்திரனும்; ஜயந்தேந = ஜயந்தன் என்னும் மகனால்; யதா = எவ்வாறு; நநந்ததுः = மகிழ்வுற்றனரோ; ததா = அவ்வாறு; தத்ஸமௌ = அந்த பார்வதிபரமசிவன் சசீ தேவேந்திரர்கள் போல் நிகரான; ஸா = அந்த; மாகதீ = சுதக்ஷிணா தேவியும்; ந்ரிபஶ்ச = திலீப மன்னனும்; தத் = அந்த குமரன் ஜயந்தர்கள் போல்; ஸத்ரிஶேந = நிகரான; ஸுதேந = மகனால்; ந நந்ததுः = மகிழ்ந்தனர்.

(க-ரை) பார்வதி பரமசிவனார்களும், சசியும் தேவேந்திரர்களும் முறையே அவர்களின் மகன்களாகிய முருகன், ஜயந்தன் களால் எவ்வாறு மகிழ்ந்தனரோ அதேபோல், அவர்களுக்கு நிகரான சுதக்ஷிணா திலீபர்கள் அந்த தேவ மகன்களுக்கு நிகரான தம் மகனுடன் மகிழ்ந்தனர். (நிகர்தொடர்முழுதுவமையணி)

சு॥ ரதாங்க நாம்நோ ரிவ பாவ பந்தநம்

பபூவ யத் ப்ரேம பரஸ்ப ராஶ்ரயம் ;

விபக்த மப்யேக ஸுதேந தத்தயோः

பரஸ்பரஸ்யோபரி பர்யசீயத ॥

(ப-ரை) ரதாங்க நாம்நோரிவ = சக்ரவாளம் என்னும் புட்களின் ஆண் பெண்ணினம் போன்று; தயோः = அந்த சுதக்ஷிணா திலீபர்களுக்கு; பாவபந்தநம் = மனதையீர்க்கும்படியான; பரஸ்பராஶ்ரயம் = ஒன்றோடொன்றொத்த; யத் = எந்த; ப்ரேம = அன்பானது பபூவ = ஆயிற்றோ; தத் = அந்த நட்பு; ஏகா = ஒருவரான; ஸுதேந = மகனால்; விபக்தமபி = பிரிக்கப்படாதாயினும்; பரஸ்பரஸ்ய = ஒருவர்க்கொருவரின்; உபரி = மீதும்; பர்யசீயதே = வளர்ந்தது.

(க ரை) சுதக்ஷிணா தேவியும் திலீபமன்னனும் ஒருவரை மற்றவர் இடையராது நினைத்துக் கொண்டு மிகுந்த அன்பு கொண்டிருந்தனர். அவர்கள் ஒரே மகனான ரகுமன்னனிடம் கொண்ட மிகுந்த அன்பானது அவர்களிடையே இருந்துவந்த அன்பைக் குறைத்துவிடவில்லை. (கருத்துடையடையணி)

சு ॥ உவாச த³ாத்ர்யா ப்ரத¹மோதி³தாநிம்
த்யயௌ ததீ²யா மவலம்ப்³ய சாங்கு³ளிம் ।
அபூ⁸ச்ச நம்ரஃ ப்ரணிபாத ஶிக்ஷயா
பிதுர்முத³ம் தேந ததாந ஸோர்ப³கஃ॥ 25

(ப-ரை) ஸஃ = அந்த; அர்ப³க = குழந்தை; த³ாத்ர்யா = செவிலித் தாயால்; ப்ரத¹ம = முதலில்; உதி³தானிம் = கற்பிக்கப்பட்ட சொற்களை; உவாச = சொன்னான்; ததீ²யாம் = அந்த செவிலித் தாயினுடைய; அங்கு³ளிம் = விரலை; அவலம்ப்³ய = பிடித்துக் கொண்டு; யயாச = நடந்து வந்தான்; ப்ரணிபாத = வணங்குதல் பற்றிய; ஶிக்ஷயா = கற்பித்தலினால்; நம்ரஃ = வணக்கம் செலுத்துதல்; அபூ³தி²திசயத் = ஆனான் என்பது எதுவுண்டோ; தேந = அக்காரணத்தால்; பிதுஃ = தகப்பனாரன திலீப மன்னனுக்கு; முத³ம் = மகிழ்ச்சியை; ததாந = பரவச் செய்தான்.

(க-ரை) அக்குழந்தை செவிலித் தாயால் கற்பிக்கப்பட்ட சொற்களை உச்சரித்துக்கொண்டும்; அவளின் விரல்களைப் பிடித்துக்கொண்டு நடக்கவும், தாய் தந்தை ஆசான்களுக்கு வணக்கம் செலுத்தவும் கற்றான். இவற்றைக் கண்ணுற்ற தந்தையாகிய திலீப மன்னன் மிகுந்த மகிழ்வெய்தினான். (பொதுமையணி)

சு ॥ தமங்க மாரோப்ய ஶரீரயோக²ஜை
ஸ்ஸுகை¹ர் நிஷிஞ்சஞ்ச மிவாம்ரிதம் த்வசி ।
உபாந்த ஸம்மீலித லோசநோ ந்ரிப:
சிராத் ஸுதஸ்பர்ஶ ரஸஜ்ஞதாம் யயௌ ॥ 26

(ப-ரை) ஶரீர = உடலின்; யோக² = சம்மந்தமாக; ஜைஃ = பிறந்த; ஸுகை¹ஃ = சுகங்களால்; த்வசி = தோலில்; அமிரிதம் = அமுதத்தை; நிஷிதஞ் சம் இவஸ்தி¹தம் = மொழிவதுபோல் தோன்றும்; தம் = அக்குமாரனை; அங்கம் = தொடைமீது; ஆரோப்ய = ஏற்றிக்கொண்டு; உபாந்த = அருகிலுள்ள இடங்களில்; ஸம்மீலித = சுமக்கப்பட்ட; லோசநஸ்ஸந் = கண்களுடையவனாய்; சிராத் = வெகுகாலம்; ஸுத = மகனுடைய; ஸ்பர்ஶ = தொடுதலினால்; ரஸ = உணர்வை; ஜ்ஞதாம் = உணர்ந்தவனுடைய ஞானத்தை; யயௌ = அடைந்தான்.

(க-ரை) அன்பால் தொடுமளவில் அமுதுபோன்று தோன்றும் உடலுடைய மகனை வெகுகாலம் குழந்தை இல்லாதிருந்த திலீப

மன்னன் தன் தொடைமீது வைத்துக்கொண்டு, மகனை யெடுத்துக் கொள்வதால், உண்டான மகிழ்ச்சியை கண்கள் மூடிக்கொண்டவனாய் அனுபவித்தான். (பாதி கண்கள் மூடுதலானது பேரானந்தத்தின் குறிப்பாகும்). (நினைப்பணி)

ஸ ॥ அமம்ஸ்த சாநேந பரார்த்[1]ய ஜந்மநா
ஸ்தி[1]தே ரபே[3]த்தா ஸ்தி[1]திமந்த மந்வயம் ।
ஸ்வமூர்தி பே[3]தே[2]ந கு[2]ணாக்[2]ர வர்திநா
பதிః ப்ரஜாநா மிவ ஸர்க[3] மாத்மநః ॥ 27

(ப-ரை) ஸ்தி[1]தேः=மரியாதைக்கு; அபே[3]த்தா=ஆள்பவனாகிய; ஸः=அந்த திலீப மன்னன்; பர்யார்த[1]=மேன்மையான; அந்வயம்=வம்சத்தை; ப்ரஜாநாம்=மக்களுக்கு; பதிः=பிரபுவான; கு[2]ண=சத்துவம் முதலிய குணங்களிலும்; வித்தை வினயங்களிலும்; அக்[2]ரவர்திநா = முதலில் நடந்த; ஸ்வ = தன்னுடைய; மூர்திபே[3]தே[2]ந=அவதாரவிசேடமாய விஷ்ணுவால்; ஆத்மநः= தன்னுடைய; ஸர்க[2]மிவ=ஆக்கலைப் போன்று; ஸ்திதி மந்தம்= நிலையுள்ளதாக; அமம்ஸ்த=எண்ணினான்;

(க-ரை) பிரஜாதிபதியாகிய பிரமன் சத்துவகுணம் மிகுந்தவனாய் தன் அவதாரமாயுள்ள விஷ்ணுவால் தன்னுடைய படைப்பு காக்கப்படுகிறதென்று எண்ணுவதுபோல் உலகவழக்கிற்கு எதிராக திலீப மன்னன், வரத்தின் மகத்துவத்தால், நல்லோரையில் உத்தமமான பிறவியெடுத்த தன்மகன் ரகுமகா ராஜனுக்கு உண்டாய அதிசயிக்கத் தக்க அடக்கம் முதலிய குணங்களால் தன் வம்சத்திற்குப் புகழைத் தேடித்தருவானென்று நிச்சயித்தான். (உவமை யணி)

ஸ ॥ ஸ வ்ரித்தசௌலஶ் சலகாக பக்ஷைः
அமாத்ய புத்ரைஸ் ஸவயோபி[3] ரந்விதः ।
லிபேர் யத[1]ாவத் க்[2]ரஹணேநவாங்மயம்
நதீ[2]முகே[1] நேவ ஸமுத்[2]ர மாவிஶத் ॥ 28

(ப-ரை) வ்ரித்த சௌலः=செய்யப்பட்ட சௌலமென்னும் கிரிகை (கா தணிவிழா)வுடைய; ஸः=அந்த ரகுமன்னன்; சல= அசைகின்ற; காகபக்ஷः=தலைமுடியுடையவனும்; ஸவயோபி[3]= தன் வயதுக்குச் சமமான வயதுள்ள நண்பர்களான; அமாத்ய புத்ரைः=அமைச்சர்களின் மைந்தர்களோடு; அந்விதஸ்ஸந்=

கூடினவனாய்; லிபே: = ஐம்பதெழுத்துக்களின் எழுதும் பயிற்சி; ய[1]ாவத க்[2]ரஹணேந = நன்கறிந்து; பயின்றதால்; வாங்மயம் = சொற்றொகுப்பை; நதீ[2] = ஆற்றின்; முகே[1]ந = கழிமுனையால்; கஶ்சித் = ஏதோ ஒரு (முதலை முதலிய நீர்வாழ்) பிராணி; ஸமுத்[2]ரம் இவ = கடல்போன்று; ஆவிஶத் = பிரவேசித்தது.

(க-ரை) ரகுமன்னன் காதணி முதலிய சடங்குகள் செய்வித்த பிறகு, அசையும் தலைமுடியுடன் சமவயதுடைய மந்திரிகளுடைய பிள்ளைகளுடன் கூடி வாசித்துக் கொண்டுள்ள அவனுக்குச் சொற்றொகுப்புக்கள் யாவும் ஆற்றின் கழிமுகத்திலிருந்து நீர்வாழ் முதலை முதலான பிராணிகள் கடலுக்குள் எளிதில் பிரவேசிப்பது போல், அறிந்துக் கொண்டான். (விரிவுவமையணி)

சு॥ அதோ[1]பநீதம் விதி[3]வத்[2] விபஶ்சிதோ
விநிந்யு ரேநம் கு[2]ரவோ கு[2]ருப்ரியம் ।
அவந்த்[3]ய யத்நாஶ்ச ப[2]பூ[3]வ ரத்ரதே
க்ரியாஹி வஸ்தூப ஹிதா ப்ரஸீத[2] ॥ 29

(ப-ரை) அத[1] = பிறகு; விதி[3]வத் = நூன்முறைப்படி; உபநீதம் = பூநூல் அணிவித்து; கு[2]ருப்ரியம் = ஆசான்களுக்கு மிகுந்த அன்புடன் நடப்பவனாய்; ஏநம் = இந்த ரகுமன்னனை; விபஶ்சித: = புலவர்களாய; கு[2]ரவ: = குரவர்கள்; அத்ர = இந்த ரகுவின்பட்சம்; அவந்த்[2]ய = வீணாகாத; யத்நாஶ்ச = பிரயத்னம் உள்ளவர்களாய்; பபூ[2]வ: = ஆனார்கள்; தத[2]ாஹி = அப்படி இருக்கையில்; க்ரியா = பயிலுதல்; வஸ்து = நல்லவனிடம்; உபாஹிதா ஸதி = பயன்படுத்தப்பட்டதாக; ப்ரஸீத[2]தி = பலிக்கிறது.

(க-ரை) பிறகு பூநூல் அணிவிக்கப்பட்டு, குருமார்களுக்கு அன்பு சுட்டும் ரகுமன்னனுக்கு வித்வான்களான உவாத்திகள் கல்வியை கற்பித்தனர். அவர்களின் முயற்சிகள் வீணாகாமல் மிகவும் பலனளித்து வந்தன. எவ்வாறெனின், நன்னிலத் திட்ட விதைகள் நற்பயனளித்தல் கண்கூடன்றோ, (மென்மேலுயற்சியணி)

சு॥ தி[3]யஸ் ஸமக்[2]ரைஸ் ஸகு[2]ணை ருத[3]ாரதீ[3]:
க்ரமாச் சதஸ்ரஶ் சதுரர்ண வோபமா: ।
ததாரவித்யா: பவநாதி பாதிபி[2]:
தி[2]ஶோ ஹரித்[2]பி[3]ர்ஹரிதா மிவேஶ்வர: ॥ 30

(ப-ரை) உத³ாா=மேலாய; தீ²ః=புத்தியுள்ள; ஸ்ః=அந்த ரகுமன்னன்; ஸமக்³ரைః=முழுமையான; தி³யః=புத்தியுடைய; கு³ணைః=சேவித்தல் முதலியகுணங்களால்! சதுரர்ணவை=நான்கு கடல்களே; உபமாః=உவமையாக உள்ளதும்; சதஸ்ரః=நான்காய; வித்³யா!=தருக்கம் முதலிய வித்தைகளும்; ஹரிதாம்=திக்கு களுக்கு; ஈஶ்வரః=பிரபுவான சூரியன்! பவந=காற்றை; அதிபா தி³பி³ః=மீறும்படியான; ஹரித்³பி³ః=குதிரைகளால்; சதஸ்ரః= நான்காய; திஶஇவ=திக்குகள் போன்று; க்ரமாத்=முறையே; ததார=தாண்டினான்.

(க-ரை) திக்குகட்டுகு அதிபனாகிய சூரியன் நான்கு கடல்கள் போன்ற நான்கு திசைகளின், காற்றினை மிஞ்சும் வேகமுடைய தனது புரவிகளால் எவ்வாறு தாண்டுவானோ அதுபோல், நற்குணங்களின் குன்றாய் விளங்கும் ரகு சேவித்தல் முதலிய புத்தியும் குணங்களும், காற்றை மிஞ்சும் வேகம் அனைத்தையும் பயன்படுத்தி நான்கு வித்தைகள், தருக்காதி சாத்திரங்கள், ஆகிய வற்றைக் கடந்தான். (சிறப்பணி)

ஈ ॥ த்வசம் ச மேத்⁴யாம் பரித³ாய ரௌரவீ
மஶிக்ஷி தாஸ்த்ரம் பிதுரேவ மந்த்ரவத் ।
ந கேவலம் தத்³கு³ரு ரேகபார்தி¹வః
க்ஷிதாவபூ⁴ தே³க து³நுர் த³ரோஃபிஸః ॥ 31

(ப-டர) மேத்⁴யாம்=பரிசுத்தமான; ரௌரவீம்=மானைச் சார்ந்த; த்வசம்ச=தோலை; பரித³ாய அணிந்து; மந்த்ரவத்= மந்திரத்துடன் கூடிய; அஸ்த்ரம் = ஆக்னேயம் முதலிய= பாணங்களை; பிதுரேவ=தகப்பனாரைப் போலவே; அஶிக்ஷித= பயின்றான்; தத்³குரு³ః=அந்த ரகுவின் தந்தையாகிய திலீப மன்னன்; ஏகபார்தி¹வః=ஒரே அரசனாகி; நாபூ⁴த்=ஆகவில்லை; கிந்து=மேலும் என்னவெனில்;

(க-ரை) மேலும் ரகுமன்னன் கறுநிற மான்தோல் அணிந்து பிரம்மசாரியாய் மந்திரத்துடன் கூடிய ஆக்னேயம் முதலிய பாணங் களை விடும் கல்விகளை தந்தையாகிய திலீப மன்னனிடமே கற்றான். ஏனெனில், அந்த தீலீப மன்னன் அரசனாக இருந்ததே அல்லாது வில்வித்தையில் அப்போதிருந்த அத்துணைபேர்களைவிட நிபுணனாக இருந்தான். (தன்மை நவிற்சியணி.)

ஸு ॥ மஹோக்ஷதாம் வத்ஸரஸ் ஸ்ப்ரிஶந்நிவ
த்²விபேந்த்²ர ப³ாவம் கலப⁴ ஶ்ரயந் நிவ ।
ரகு⁴ஃ க்ரமா த்³யௌவநபி³ந்ந ஶைஶவஃ
புபோஷ காம்பீ³ர்ய மநோஹரம் வபுஃ ॥ 32

(ப-ரை) ரகுஃ = ரகுமன்னன்; க்ரமாத் = முறையே; யௌவந = இளம்பருவத்தால்; பி³ந்ந = போக்கிய; ஶைஶவஸ்ஸந் = குழந்தைப் பருவமுடையவனாய்; மஹோக்ஷதாந் = பெருங் காளைப்பருவத்தை; ஸ்ப்ரிஶந் = அடைந்த; வத்ஸதர இவ = கன்றுபோலும்; த்³விபேந்த்³ரபா³வம் = பெரிய யானைப் பருவம்; ஶ்ரயந் = அடைந்த; கலப⁴ இவ = யானைக்குட்டி போலும்; காம்பீ³ர்யமநோஹரம் = சபல பாவனையால் மனதைக் கவரும் அழகான; வபுஃ = உடலை; புபோஷ = பேணினான்.

(க-ரை) பிறகு ரகுமன்னன் இளம் பருவமடைந்து பேரேறு போன்று, பெரிய கரியைப் போலும் பருவமடைந்து, கெட்டச் செய்கைகள் யாதுமின்றி, மிக கம்பீரமும், நல்ல அழகும் உள்ள உடல் உடையவன் ஆனான். (தன்மை நவிற்சியணி)

ஸு ॥ அத²ாஸ்ய கோ³தாந விதே⁴ ரநந்தரம்
விவாஹ தீ³க்ஷாம் நிர்வர்த யத்³குரு³ஃ।
நரேந்த்³ர கந்யாஸ் தமவாப்ய ஸத்பதிம்
தமோ நுத³ம் தக்ஷஸுதா இவாப³பு⁴ஃ ॥ 33

(ப-ரை) கு³ருஃ = தந்தையாகிய திலீப மன்னன்; அஸ்ய = இந்த ரகு மன்னனுக்கு; கோ³தா³ந = பசுவை நன்கொடையாக அளித்தல் என்னும் கிரியை; விதே⁴ஃ = செய்வதைவிட; அநந்தரம் = பிறகு; விவாஹ = திருமண; தீக்ஷாம் = விரதத்தை; நிவர்தயத் = நிறைவேற்றப்பட்டான்; அத¹ = பிறகு; நரேந்த்³ரகந்யாஃ = அரச கன்னியர்கள்; தம் = அந்த ரகுமன்னனை; தக்ஷஸுதாம் = ரோகிணி முதலிய விண்மீன்கள்; தமோநுத³மிவ = சந்திரனைப்போல்; ஸத்பதிம் = நல்ல கணவனாக; அவாப்ய = அடைந்து; ஆப³பு⁴ஃ = மிளிர்ந்தான்

(க-ரை) தந்தையாகிய திலீப மன்னன் ரகுமன்னனுக்கு கோதானத்துடன் கூடிய திருமணத்தை முடித்து வைத்தான். அரசு கன்னியர்களாகிய அம்மணப் பெண்கள் நல்ல கணவனை அடைந்து ரோகிணி முதலிய விண்மீன்கள் சந்திரனைக் கணவனாக அடைந்ததுபோல் மகிழ்ந்தனர். (நிரநிறையணி)

ஸ்ரீ ॥ யுவா யுக²வ்யாயத பாஹுரம்ஸலஃ
கவாடவக்ஷாஃ பரிணத்²த³ கந்த³ரஃ ।
வபுஃ ப்ரகர்ஷா த்³ஜயத்² கு³ரும் ரகு³ஃ
தத²ாऽபி நீசைர் விநயா த்³த்²ரிஶ்யத ॥ 34

(ப-ரை) யுவா = இளம் பருவத்தனனாகிய; யுக² = நுகத்தடியைப் போன்ற; வ்யாயத = நீண்ட; பா³ஹூ: = தோள்களுடையவனும்; அம்ஸலஃ = பருத்தவனும்; கவாட = கதவைப்போன்ற; வக்ஷஃ = மார்புடையவனும்; பரிணத்²த³ = விரிவான; கண்ட¹ஃ = கழுத்துடையவனாகிய; ரகு³ஃ = ரகுமன்னன்; வபுஃ = உடலின்; ப்ரகர்ஷாத் = அதிகத்தால்; கு³ரும் = தந்தையாகிய திலீப மன்னனை; அஜயத் = வென்றான்; தத²ாபி = ஆயினும்; விநயாத் = அடக்கத்தால்; நீசைஃ = அற்பனாக; அத்³ரிஶ்யத் = காணப்பட்டான்.

(க-ரை) ரகுமன்னன் யௌவன முடையவன் ஆதலால், தந்தையாகிய திலீப மன்னனைவிட நீண்ட தோள்கள், விரிந்த மார்பு, பருத்த கழுத்து இவை பெற்றிருத்தலால், மேம்பட்டவனாகவும், அடக்கம் கொண்டுள்ளதால், மிகவும் சொற்பமானவனாகவும் இருந்தான். அதாவது-தந்தையாகிய திலீபனைவிட யௌவனத்தால் வலிமையுடையவனாக இருப்பதில் அதிகமாகவும், அடக்கம் காட்டுவதால் சொற்பமானவனாகவும் இருந்து வந்தான். (உவமை மற்றும் வாக்கியப் பொருட்காட்சியணி)

ஸ்ரீ॥ ததஃ ப்ரஜாநாம் சிரமாத்மநா த்³ரிதாம்
நிதாந்த கு³ர்வீம் லகு³ இஷ்யதா து³ரம் ।
நிஸர்க³ ஸம்ஸ்கார விநீத இத்யஸௌ
ந்ரிபேண சக்ரே யுவராஜ ஶப்³த³ பா³க் ॥ 35

(ப-ரை) ததஃ = பிறகு; ஆத்மநா = தன்னால்; சிரம் = வெகு காலமாக; த்³ரிதாம் = ஆண்டுவரப்பட்டதும்; நிதாந்த = மிகவும்; கு³ர்வீம் = அதிகமான; ப்ரஜாநாம் = மக்களுடைய; து³ரம் = காக்கும் பளுவையும்; லகு³இஷ்யதா = அற்பமாகச் செய்யப்போகும்; ந்ரிபேண = திலீப மன்னனால்; அஸௌ = இந்த ரகுமன்னன்; நிஸர்க³ = சுபாவத்தாலும்; ஸம்ஸ்கார = நூல் பயின்றதாலும்; விநீதஃ = அடக்கமுள்ளவன்; இதி = என்பதால்; யுவராஜ = இளவரசன் என்னும்; ஶப்³த³ = சொல்லை; பா³க் = அடைந்தவனாக; சக்ரே = செய்யப்பட்டான்.

(க-ரை) திலீப மன்னன் தான் வெகுகாலமாக செய்துவந்த குடிகளை ஆளும் முயற்சியை குறைத்துக் கொள்ளும் சுபாவத்தா லும், நூல்களைப் பயின்றதால் அடக்கமுடைய ரகுமன்னனுக்கு இளவரசு பட்டமளித்தான். (விதியணி)

சு॥ நரேந்த்²ர மூலாயதநா த²நந்தரம்
தத²ாஸ்பத²ம் ஸ்ரீர் யுவராஜ ஸம்ஜ்ஞிதம் ।
அக²ச்ச த²ம்ஶேந கு²ணாபி⁸லாஷிணீ
நவாவதாரம் கமலா தி²வோத்பலம் ॥ 36

(ப-ரை) கு³ண = அடக்கம் முதலிய குணங்களை அதாவது நறுமணத்தை; அபி⁸லாஷிணீ = விழையும்; ஸ்ரீ: = அரசெனும் இலக்குமி; நரேந்த்²ர = திலீப மன்னனெனும்; மூலாயதநாத் = முதலி டத்திலிருந்து; அநந்தரம் = அருகில் உள்ளவனும்; யுவராஜ ஸம்ஜ் ஞிதம் = இளவரசனெனும் பெயருடைய; தத் = அந்த ரகுவென்னும்; ஆஸ்பத²ம் = இடத்தை; கமலாத் = தாமரையிலிருந்து; நவ = புதிய; அவதாரம் = பிறப்புடைய; உத்²பல இவ = நீராம்பல் போல்! அம் ஶேந = பாகத்தால்; அக⁸ச்ச¹த் = அடைந்தாள்.

(க-ரை) நறுமணத்தை விழையும் இலக்குமி மாலையில் வாடும் தாமரையிலிருந்து, குவளையை அடைவது போல்; அடக்கம் முதலிய குணங்களை விழையும் அரசெனுமிலக்குமி திலீபமன்னனிட மிருந்து பிறகுவரும் இளவரசனான ரகுமகாராஜனை அடைந்தனள். (நிரநிறையணி)

சு ॥ விப⁸ாவஸு~ஸ் ஸாரதி³நேவ வாயுநா
க³நவ்யபாயேந க²ப³ஸ்திமா நிவ ।
ப²பூ³வதே நாதிதராம் ஸு~துஸ்ஸஹः
கடப்ரபே³தே²ந கரீவ பார்தி¹வः ॥ 37

(ப-ரை) ஸாரதி³நா = உதவியாகிய; வாயுநா = காற்றால்; விப⁸ாவ ஸு~ரிவ = அக்கினியைப் போல்; க³நவ்யபாயேந = கூதிர்ப் பருவத்தால்; க²ப³ஸ்திமாந் இவ = சூரியனைப் போன்றும்; கட = கன்னம்; ப்ரபே³தே²ந = உடைவதால்! கரீவ = யானையைப் போலும்; பார்தி¹வः = திலீப மன்னன்; தேந = அந்த ரகு⁸மன்ன னால்; அதிதராம் = மிகுந்த; ஸு~து²ஸ்ஸஹ = சகிக்கக் கூடாதவன்;
ன்.

(க-ரை) வாயுவுடன் கூடிய அக்கினியும், முகில்கள் அடங்கியுள்ள கூதிர்க்காலத்து சூரியனும், மதநீர் சொரியும் யானையும் எவ்வாறு சகிக்க முடியாதவைகளாக இருக்குமோ அதுபோல், ரகுவுடன் கூடிய திலீபமன்னன் அசாத்தியனாக இருந்தான். (நிகரெடுத்துக் காட்டுவமையணி)

ஸ ॥ நியுஜ்ய தம் ஹோம துரங்க² ரக்ஷணே

த³நுர்த³ரம் ராஜஸுதை ரநுத்³ருதம் ।

அபூர்ண மேகே ஶதக்ர தூபம :'ப

ஶதம் க்ரதூநாம் அபவிக்³ந மாபஸ: ॥ 38

(ப-ரை) ஶதக்ரது = தேவேந்திரனை; உபம: = உவமையாகக் கொண்ட; ஸ: = திலீப மன்னன்; ராஜஸுதை: = அரசப்புதல்வர் களால்; அநுத்³ருதம் = கூடி; த³நுர்த³ரம் = வில்லேந்தியுள்ள; தம் = அந்த ரகுமன்னனை; ஹோம = வேள்விக்குரிய; துரங்க² = குதிரைகளை; ரக்ஷணே = காப்பதில்; நியுஜ்ய = நியமித்து; ஏகேந = ஒரு வேள்வியால்; அபூர்ணம் = குறைந்த; க்ரதூநாம் = அசுவ மேதங்களின்; ஶதம் = நூறை; அபுவிக்³நம் யத²ாதத²ா = குறைபாடுகள் வாரா வண்ணம்; அப = அடைந்தான்.

(க-ரை) தேவேந்திரனுக்கு நிகரான திலீபமன்னன் அரசப் புதல்வர்களே பரிவாரங்களாக உள்ள ரகுமன்னனை வேள்விக்குரிய புரவிகளைக் காக்கும் வேலையில் நியமித்து ஒன்று குறைவான நூறு (தொண்ணூற்றொன்பது) அசுவமேத யாகங்களைச் செய்தான். (உவமை மற்றும் வீறுகோளணி)

ஸ ॥ தத: பரம் தேந மக²ாய யஜ்வநா

துரங்க² முத்ஸ்ரிஷ்ட மநர்க²ளம் புந: ।

த³நுர்ப்³ரிதா மக்³ரத ஏவ ரக்ஷிணாம்

ஜஹார ஶக்ர: கில கூ²ட³ விக்ரஹ: ॥ 39

(ப-ரை) தத:பரம் = தொன்னூற்றொன்பது புரவிவேள்விகளும் செய்து முடித்த பிறகு; யஜ்வநா = முறைப்படி வேள்வி செய்த; தேந = அந்த திலீப மன்னனால்; மக²ாய = வேள்வி செய்ய; உத்ஸ்ரிஷ்டம் = விடப்பட்ட; அநர்க²ளம் = தடையற்ற; துரங்க²ம் = குதிரையை; த³நுர்ப்³ரிதாம் = வில்லேந்திய, ரக்ஷிணாம், காவலாளிகளின், அக்³ரதஏவ = முன்னாலேயே; ஶக்ர: = தேவேந்திரன்; கூ²ட³ = மறைந்த; விக²ரஹஸ்ஸந் = உடலுடன்; ஜஹாரகில = கவர்ந்தான்.

(க-ரை) பிறகு திலீப மன்னவன் மறுபடியும் நூறாவது அசுவ மேத யாகம் செய்தற் பொருட்டு விடப்பட்டு அட்டியிலாது செல்லும் குதிரையை, அதைக் காக்கும் வில்லாளர்களுக்கெதிரிலேயே தேவேந்திரன் மறைந்த உடலுடையவனாக வந்து அதைக் கவர்ந்து சென்றுவிட்டான். (நிகழ்வினவிற்சியணி)

சு॥ விஷாத² லுப்த ப்ரதிபத்தி விஸ்மிதம்
குமார ஸைந்யம் ஸபதி³ ஸ்தி¹தம் சதத்¹
வஸிஷ்ட தே³நு ஶ்ச யத்²ரிச்ச யாக²தா
ஶ்ரித ப்ரப³ாவ த³த்²ரிஶே³த¹ நந்தி¹நீ ॥ 40

(ப-ரை) தத் = அந்த; குமார = ரகுமன்னனின்; ஸைந்யம் = படைகள்; தத்க்ஷணம் = உடனடியாக; விஷாத² = எண்ணிய எண்ணம் ஈடேறாது பங்கமடைந்ததால்; லுப்த = கடந்த; ப்ரதிபத்தி = செய்யக்கூடிய ஞானமுண்டாகியதாய்; விஸ்மிதம் ஸத் = வியப்புடன் கூடியதாய்; ஸ்தி¹தஞ்ச = இருந்ததாயிற்று; அத¹ = பிறகு; ஶ்ருத = கேள்வியுற்ற; ப்ரப³ாவ = மகத்துவமுடைய; யத்²ரிச்சயா = தானாக; ஆக²தா = வந்த; நந்தி²னீ = நந்தினிஎன்னும் பெயருடைய; வஸிஷ்டதே³நு ஶ்ச = வசிட்டருடைய பசுவை; த³த்ரு²ஶே = பார்க்க நேர்ந்தது,

(க-ரை) ரகுமன்னனுடைய படைகள் தாமிழந்த புரவியைக் குறித்து மனங்கலங்கினவர்களாய் செய்வதறியாது வியப்புற்றிருந்தனர். அவ்வமயம் எப்பசுவினுடைய மகத்துவத்தை முன்பு அவர்கள் கேள்வியுற்றிருந்தனரோ அந்த நந்தினி என்னும் பெயருடைய வசிட்டரின் பசுவானது தானாகவே அங்கு வரலாயிற்று. (தொடர்பின்மையணி)

சு॥ தத²ங்க நிஷ்யந்த² ஜலேந லோசநே
ப்ரம்ரிஜ்ய புண்யேந புரஸ்க்ரிதஸ் ஸதாம் ।
அதீந்த்²ரி யேஷ்வ ப்³யுப பந்ந த³ர்ஶநோ
ப²பூ³வ ப³ாவேஷு தி²லீப நந்த²நঃ ॥ 41

(ப-ரை) ஸதாம் = நன்மக்களால்; புரஸ்க்ரிதঃ = பூசை செய்யப்பட்ட; தி³லீபநந்த²நঃ = திலீபனுடைய மகனான ரகுமகாராஜாவின்; புண்யேந = தூய்மையால்; தத் = அந்த நந்தினி பசுவின்; அங்க = உடலுறுப்புகளிலிருந்து; நிஷ்யந்த² = வெளிப்பட்ட திரவமெனும்;

ஜலேந=நீரால் (அதாவது மூத்திரத்தாலும்); லோசநே=கண்களை; ப்ரம்ரிஜ்ய=கழுவிக்கொண்டு; அதீந்த்$^{2}$ரியேஷ்வபி=புலன்களை மீறினவனாயினும்; ப$^{3}$ாவேஷு=பொருள்களில்; உபபந்ந=பிறந்த; த$^{3}$ர்ஶந=கண்கூடாய் பார்க்கும் வல்லமையுடையவனாக; ப$^{3}$பூ$^{4}$வ=ஆனான்.

(க-ரை) ரகுமன்னன் புனிதப் பசுவின் மூத்திரத்தால் தன் கண்களைத் துடைத்துக்கொண்டு, அதன் மகிமையால், மாந்தர் கண்களுக்கு அகப்படாத பொருள்கள் யாவும் அவன் கண்களுக்குத் தோன்றும் வல்லமையைப் பெற்றான். (எளிதின் முடிபணி)

ஸ ॥ ஸபூர்வதঃ பர்வத பக்ஷ ஶாதநம்
த$^{3}$த$^{3}$ர்ஶ தே$^{3}$வம் நரதே$^{3}$வ ஸம்ப$^{4}$வঃ ।
புநঃ புநঃ ஸூத நிஷித்$^{3}$த$^{4}$ சாபலம்
ஹரந்த மச்வம் ரத$^{1}$ரஸ்மி ஸம்யதம் ॥ 42

(ப-ரை) நரதே$^{2}$வ=திலீப மன்னனால்; ஸம்ப$^{4}$வঃ=உண்டாய; ஸঃ=அந்த ரகுமன்னன்; புநঃ புநঃ=மேலும் மேலும்; ஸூத=தேரோட்டியான 'மாதலி' என்பவனால்; நிஷித்$^{2}$த$^{4}$=தடுக்கப்பட்ட; சாபலம்=வேகமாய் ஓடும்; ரத$^{1}$=தேரின்; ரஸ்மி=வலிக்கயிற்றால்; ஸம்யதம்=கட்டப்பட்ட; அச்வம்=குதிரையை; ஹரந்தம்=கடத்திச் செல்லும்; பர்வத பக்ஷஶாதநம்=முன்பு மலைகளின் இறகுகளை வெட்டி வீழ்த்தியவன்; (தேவேந்திரன்); பூர்வதঃ=கீழ்த்திசையிற் செல்வதை; த$^{3}$த$^{3}$ர்ஶ=கண்டான்.

(க-ரை) தேவேந்திரன் தன் தேரோட்டியால் அந்தக் குதிரையை தன் தேரின் வலிக்கயிற்றால் தேருக்குக் கட்டி, கடத்திக் கொண்டு கீழ்த்திசையை நோக்கிச் செல்வதை ரகுமன்னன் கண்டான். (நிகழ்வினவிற்சியணி)

ஸ ॥ ஶதைஸ் தமக்ஷ்ணா மநிமேஷ வ்ரித்திபி$^{4}$ர்
ஹரிம் விதி$^{3}$த்வா ஹரிபி$^{4}$ச்ச வாஜிபி$^{4}$ঃ ।
அவோச தே$^{3}$நம் க$^{3}$க$^{3}$நஸ்ப்ரிஶா ரகு$^{4}$ஸ்
ஸ்வரேண தீ$^{4}$ரேண நிவர்தயந் நிவ ॥ 43

(ப-ரை) ரகு$^{4}$=ரகுமன்னன்; தம்=அந்த குதிரையைக் கொண்டு செல்கிறவனை; அநிமேஷவ்ரித்திபி$^{4}$ঃ=கொட்டாத கண்கள்; ஶதைঃ=நூற்றுக்கணக்கானவற்றாலும்; ஹரிபி$^{4}$ঃ=பச்சை

நிறமுள்ள; வாஜிபி³: ச=குதிரைகளாலும்; ஹரிம்=தேவேந்திரன் என்று; விதி³த்வா=அறிந்து; க²க²நஸ்ப்ரிஶா=ஆகாயம் பரவக் கூடிய; தீ³ரேண=கம்பீரமான; ஸ்வரேண=குரலுடன்; நிவர்த யந்நிவ=பின்னுக்குத் திருப்புகிறவன்போல்; ஏநம்=தேவேந்திரனை நோக்கி; அவோசத்=கூறினான்.

(க-ரை) அப்போது ரகுவானவன் குதிரையைக் கடத்திச் செல்வோன், கொட்டா இமைகளுடன் கூடிய ஆயிரங் கண்கள் உள்ளவனாகவும் இருப்பதால் தேவேந்திரனென வறிந்து, அவனைத் தடுப்பவன்போல் உரத்தக் குரலில் அவனை நோக்கி நவின்றான். (கரவு வெளிப்படுப்பணி)

சு ॥ மக¹ாம்ஶ பு³ாஜாம் ப்ரத¹மோ மநீஷிபி³:
தமேவ தேவேந்த்³ராஸத² நிக²த்²யஸே ।
அஜஸ்ர தீக்ஷா ப்ரயதஸ்ய மத்²கு²ரோ:
க்ரியா விக⁴ாதாய கத¹ம் ப்ரவர்தஸே ॥ 44

(ப-ரை) ஹேதே²வேந்த்ர=ஓ, தேவேந்திரனே!=மநீஷிபி³:= அறிவாளிகளால்; த்வமேவ=நீயே; மக¹=வேள்விகளில்; அம்ஶ:= அவிப் பகுதிகளை; பு³ாஜாம்=உண்டுவரும் தேவர்களில்; ப்ரத¹ம:= முதல்வனாக; ஸத²ா=எப்போதும்; நிக²த்²யதே=சொல்லப் படுகின்றாய்; தத¹அபி=அப்படி இருந்தும்; அஜஸ்ர=எப்போதும்; தீக்ஷா=யாக தீக்ஷையில்; ப்ரயுதஸ்ய=நியமம் பெற்றுள்ள; மத்கு³ரோ:=என் தகப்பனாராகிய திலீப மன்னனுடைய; க்ரியா விக⁴ாதாய=வேள்வியைக் வெருக்க; கத¹ம்=எவ்வாறு; ப்ரவர் தஸே=நடந்துக்கொள்கிறாய்?

(க-ரை) ஓ தேவேந்திரனே! வேள்விகளில் அவிஸ் பகுதிகளைப் புசிக்கும் தேவர்களில் நீயே முதலானவன் என்று சொல்லப் படுகிறாய். அப்படியிருக்க என் தந்தையார் செய்யும் வேள்வியை நீயே ஏன் கெடுக்க முயல்கிறாய்? (முரண் விளைந்தழிவணி)

சு ॥ த்ரிலோக நாதே³ந ஸத²ா மக¹த்³விஷ
ஸ்வயா நியம்யா நநு தி³வ்ய சக்ஷுஷா ।
ஸசேத் ஸ்வயம் கர்ம ஸுத³ர்ம சாரிணாம்
தவ மந்தராயோ பு³வஸி ச்யுதோ விதி³: ॥ 45

(ப-ரை) த்ரிலோக=மூவுலகங்கட்கும்; நாதே¹ந=தலைவ னான; தி²வ்ய சக்ஷுஷா=ஞானதிருட்டி உடைய; த்வயா=

உன்னால்; மக${}^1$த்${}^2$விஷ: = வேள்விக்கு கெடுதி செய்வோர்; ஸத${}^2$ா = எப்போதும்; நியம்யா நநு = தண்டிக்கத் தக்கவர்களன்றோ? ஸ: = அப்படிப்பட்ட; த்வம் = நீ; த${}^3$ர்மசாரிணா = அறத்தைக் கடைப் பிடிப்பவர்களின்; கர்மஸு = வேள்விகட்கு; ஸ்வயம் = சுயமாக (நீயாக)வே; அந்தராய: = கெடுதி செய்பவன்; ப${}^3$வஸிசேத் = ஆனாயாகில்; விதி${}^3$: = கடமைகள்; ச்யுத: = வீழும்.

(க-ரை) மூவுலகங்கட்கும் தலைவனாகிய நீ, வேள்விக்குக் கெடுதி செய்வோர்களை ஞானக் கண்ணால் எப்போதும் அறிந்து தண்டிக்கவேண்டிய நீயே கடமைகளைச் சரிவர செய்து வருவோரின் வேள்விகட்கு கெடுதி செய்வயேல் அந்த கடமைகள் நின்றுபோமல்லவா? (ஏதுவணி)

சு ॥ தத${}^2$ங்க${}^2$ மக்${}^3$ர்யம் மக${}^2$வந் மஹாக்ரதோ
ஏமும் துரங்க${}^3$ம் ப்ரதிமோக்து மர்ஹஸி ।
பத${}^1$ஶ்ஶுசேர் த${}^2$ர்ஶயிதார ஈஶ்வரா
மலீமஸா நாத${}^2$த${}^2$தே நபத்${}^2$த${}^3$திம் ॥ 46

(ப-ரை) ஹே, மக${}^2$வந் = ஓ இந்திரனே! தத் = அதனால்; மஹாக்ரதே = அசுவமேத யாகத்திற்கு; அங்க${}^2$ம் = கருவியானதும்; அக்${}^3$ர்யம் = மேலானதும்; அமும் துரங்க${}^3$ம் = ஆகிய இப்புரவியை; ப்ரதிமோக்தும் = விட்டுவிட; அர்ஹஸி = தக்கவனாகின்றாய்; தத${}^1$ஶஸி = அதுசரி; ஶுசே: = தூய்மையான; பத${}^1$: = வழியை; த${}^3$ர்ஶயிதார: = காண்பிக்கும்; ஈஶ்வரா: = பெரியோர்கள்; மலீமஸாம் = கெட்ட; பத்${}^2$த${}^3$திம் = வழியை; நாத${}^2$த${}^2$தே = ஏற்கமாட்டார்கள்.

(க-ரை) ஓ, தேவேந்திரனே! அதனால், நீ பெரும் வேள்வியான அசுவமேத யாகத்தைச் செய்ய இன்றியமையாக் கருவியாகிய இப்புரவியை விட்டு விடுவாயாக. நல்வழியை நாடி, பிறர்க்கு வழி காட்டியாய் நிற்கும் பெரியோர்கள் கெட்ட வழியை நாடமாட்டார்கள். (வேண்டலணி)

சு॥ இதி ப்ரக${}^2$ல்ப${}^3$ம் ரகு${}^3$ணா ஸமீரிதம்
வசோ நிஶம்யாதி${}^3$பதிர் தி${}^2$வௌகஸாம் ।
நிவர்தயாமாஸ ரதம் ஸவிஸ்மய:
ப்ரசக்ரமே ச ப்ரதி வக்து முத்தரம் ॥ 47

(ப-ரை) இதி = இவ்வாறு; ரகு³ணா = ரகு²மன்னனால்; ஸமீ ரிதம் = கூறப்பட்ட; ப்ரக²ல்ப³ம் = கம்பீரமான; வசஃ = வார்த்தை களை; நிஶம்ய = கேட்டு; தி²வௌகஸாம் = தேவர்கட்கு; அதி³பதிஃ = பிரபுவான தேவேந்திரன்; ஸவிஸ்மயஸ்ஸந் = வியந்தவனாய்; ரத²ம் = தேரை; நிவர்த்யாமாஸ = பின்னுக்குத் திருப்பினான்; உத்தரம் = பதிலை; ப்ரதிவக்தும் = திரும்பவும் சொல்ல; ப்ரசக்ர மேச = தொடர்ந்தான்.

(க-ரை) இவ்வாறு ரகுமன்னவன் கூறிய கம்பீரமான சொற் களைக் கேட்ட இந்திரன் வியப்படைந்தவனாய் தன்னுடைய தேரை பின்னுக்குத் திருப்பி பதில் கூறத் தொடங்கினான். (நிகழ் வினவிற்சியணி)

ஸ்ரீ॥ யத¹ர்த² ராஜந்ய குமார தத்தத¹
யஶஸ்து ரக்ஷ்யம் பரதோ யஶோத⁸நைஃ ।
ஜக³த் ப்ரகாஶம் தத²ஶேஷ மிஜ்யயா
ப⁸வத்²கு³ருர் லங்க³யிதும் மமோத்யா ॥ 48

(ப-ரை) ஹேராஜந்ய குமார = ஓ, அரச குமாரனே! யத் = எந்த வாக்யத்தை; ஆத்த = சொல்கின்றாயோ; தத் = அவ்வாக்கி யம்; தத¹ = அவ்வாறே; கிந்து = மற்றுமென்னவெனின்; யஶோ த⁸நஃ = புகழையே ஆக்கமாகக் கொண்டவர்களால்; பரதஃ = பகை வர்களால்; யஶஃ = புகழ்; ரக்ஷ்யம் = காக்கப்படத் தக்கது; ப⁸வத் = உன்னுடைய; கு²ருஃ = தந்தையான திலீப மன்னன்; ஜக²த் = உலகத்தில்; ப்ரகாஶம் = புகழுடையதும்; அஶேஷம் = அனைத்து மாய; மம = எனது; தத் = அந்த புகழை; இஜ்யா = வேள்வியால்; லங்க³யிதும் = மீறுவதற்கு; உத்²யதஃ = முயற்சித்தான்.

(க-ரை) அரசகுமாரனே! நீசொன்னது சரியே. ஆனாலும், புகழையே ஆக்கமெனக் கருதி நடப்போர்கள் தங்களது புகழுக்கு ஊறுதனைப் பிறர் விளைவிக்காமல் காத்துக்கொள்வார்கள். இது மிக அவசியம். உன் தந்தை உலகறிந்த என் புகழை இழிவுபடுத்த முயற்சித்தான். (பிரிதினவிற்சியணி)

ஸ்ரீ॥ ஹரிர் யதை¹கஃ புருஷோத்தமஸ் ஸ்மிரிதோ
மஹேஶ்வரஸ் த்ர்யம்ப²க ஏவ வாஸரஃ ।
தத¹ா விது³ர் மாம் முநயஶ் ஶதக்ரதும்
த்²விதீய கா²மீ நஹி ஶப்³த² ஏஷஸஃ ॥ 49

(ப-ரை) யத²ா = எவ்வாறு; ஹரிஃ = விஷ்ணுவானவர்; ஏக ஏவ = ஒருவரே; புருஷோத்தமஃ = புருடோத்தமனாக; ஸ்மிரிதஃ = எண்ணப்படுகிறாரோ; யதா² = எவ்வாறு; த்ர்யம்ப²கஏவ = ஈசனே, மஹேஶ்வரஃ = மகேசுவரனாக; ஸ்மிரித = எண்ணப்படுகிறாரோ; அபரஃ = மற்றொருவர்; ததா² = அவ்விதம்; நஸ்மிரித = எண்ணப்படுவதில்லை; ததா² = அதுபோல்; முநயஃ = முனிவர்கள்; மாம் = என்னை; ஶதக்ரதும் = நூறு வேள்வியனாக; விது³ஃ = அறிகின்றனர்; நஃ = எங்களுடைய; ஏஷஃ = இந்த மூவிதமான; ஶப்³த³ஃ = சொல்; த்³விதீயகாம் = இரண்டாமவனை அடையக் கூடியது; நஹி = அன்று.

(க-ரை) எவ்வாறு விட்டுணுவைப் புருடோத்தமனென்றும், ஈசனை மகேசுவரனென்றும் சொல்லப்படுகிறதோ அவ்வாறே முனிவர்கள் என்னையும் 'ஶதக்ரது'—அதாவது - நூறு வேள்விகள் செய்தவன் என்பார்கள். இப்பெயர்கள் மூன்றும் முறையே எங்கள் மூவருக்கு மட்டும் உரியவை; மற்றவர்கட்குப் பொருந்தாது. (வாக்கியப் பொருட்காட்சியணி)

சு॥ அதோ²ऽயம ஶ்வஃ கபிலாநு ஸாரிணா
பிதுஸ் த்வதீ³யஸ்ய மயாऽப ஹாரிதஃ ।
அலம் ப்ரயத்நேந தவாத்ர மாநிதா²ஃ
பத³ம் பத³வ்யாம் ஸக³ரஸ்ய ஸந்ததேஃ ॥ 50

(ப-ரை) அதஃ = இதனால்; த்வி³தீயஸ்ய = உனது; பிதுஃ = தந்தையினுடைய; அயம் = இந்நூறாவதாகிய; அஶ்வஃ = குதிரை; கபில = கபிலரென்னும் முனிவரை; அநுஸாரிணா = அனுசரித்த; மயா = என்னால்; அபஹாரித = கடத்தப்பட்டது; அத்ர = இக்குதிரையில்; தவ = உன்க்கு; ப்ரயத்நேந = முயற்சி; அலம் = வேண்டாம்; ஸக³ரஸ்ய = சகரமா மன்னனின்; ஸந்ததேஃ = மரபினர்களின்; பத³வ்யாம் = வழியில்; பத³ம் = அடிகளை; மா நித⁸ = வைக்காதே.

(க-ரை) இதனால், உன் தந்தையின் இந்நூறாவதாகிய புரவியை நான் கடத்திவந்தேன். இது சார்பாக நீயாதொரு முயற்சியும் செய்யவேண்டாம். ஏனெனில், முன்பு சகரமா மன்னனுடைய மகன்கள் வேள்வி புரவிக்காக கபில முனிவருக்குத் தொந்திரவு கொடுத்து நாசமடைந்ததுபோலாகிவிடும். (நிகரெடுத்துக்காட்டுவமையணி)

சு ॥ ததஃ ப்ரஹஸ்யாப ப⁴யஃ புரந்த²ரம்
புநர் ப²ப³ாஷே துரக²ஸ்ய ரக்ஷிதா ।
க்³ரிஹாண ஶஸ்த்ரம் யதி²ஸர்க²ஏஷதே
நக¹லு வநிர்ஜித்ய ரகு³ம் க்ரிதீ ப³வாந் ॥ 51

(ப-ரை) ததஃ = பிறகு; துரக²ஸ்ய = குதிரைக்கு; ரக்ஷிதா = காவலான ரகுமன்னன்; ப்ரஹஸ்ய = சிரித்து; அபப³யஸ்ஸந் = அச்சமின்றி; புநஃ = மறுபடியும்; ஹே தே²வேந்த்²ர = ஓ, தேவர் கடங்கோனே! ஏஷஃ = இக்குதிரையை விடாததே; தே = உனக்கு; ஸர்கே²ாயதி = நிச்சயமான தாயின்; தர்ஹி = இப்போதே; ஶஸ்த்ரம் = ஆயுதத்தை; க்²ரிஹாண = ஏந்துவாயாக; ப³வாந் = நீ; ரகு²ம் = ரகு மன்னனை; அநிர்ஜித்ய = வெல்லாமலேயே; க்ரிதீ = நிறைவுற்றவனாக; நக¹லு = ஆகமாட்டாய்.

(க-ரை) அப்போது குதிரையைக் காத்துவந்த ரகுமன்னன் சிரித்து, அச்சம் நீங்கியவனாய், தேவேந்திரனைக் கண்டு, ஓ, தேவராசனே! நீ இக்குதிரையை விடமுடியாதென்ற முடிவு செய்வாயாகில் நீ என்னுடன் போர் புரிந்து அல்லாது உன் எண்ணம் ஈடேறியதாக ஆகாது. (தன்குண மிகையணி)

சு ॥ ஸஏவ முக்த்வா மக³வந்த முந்முக¹ஃ
கரிஷ்யமாணஃ ஸஶரம் ஶராஸநம் ।
அதிஷ்ட¹ த²ாலீட³ விஶேஷ ஶோபி³நா
வபுஃ ப்ரகர்ஷேண விட²ம்பி² தே ஶ்வரஃ ॥ 52

(ப-ரை) ஸஃ = அந்த ரகுவரசன்; உந்முக¹ஸ்ஸந் = எதிர் நின்று; மக³வந்தம் = இந்திரனை நோக்கி; ஏவம் = இவ்விதமாக; உக்த்வா = சொல்லி; ஶராஸநம் = வில்லை; ஸஶரம் = அம்புடன் கூடியதாக; கரிஷ்யமாண = செய்பவனாய்; ஆலீட³ = வலதுகால் முன்வைத்து ஆயத்தம் செய்து; விஶேஷ = அதிகமான; ஶோபி³நா = மிளிர்கின்ற; வபுஃ = உடலின்; ப்ரகர்ஷேண = மேன்மையுடன்; விட²ம் பி²த = பின்பற்றப்பட்ட; ஈஶ்வரஸ்ஸந் = பரமேசனை உடைத்தவனாகி; அதிஷ்ட¹த் = நின்றிருந்தான்.

(க-ரை) என்று கூறி, தேவேந்திரனுக்கெதிரில், வில்லேந்தி போர் செய்ய முயன்றவனாய் ஈசுவரனைப்போல் நின்றிருந்தான். (பொருட்காட்சியணி)

ஃ ॥ ரகே³ா ரவஷ்டம்ப³ மயேந பத்ரிணா
ஹ்ரிதி² க்ஷதோ கே²ாத்ரபி³த²ப்ய மர்ஷஃ।
நவாம்பு²த²ா நீக முஹூர்த லாஞ்ச¹நே
த³நிஷ் யமோக³ம் ஸமத²த்த ஸாயகம் ॥ 53

(ப-ரை) ரகே³ாஃ = ரகுமகாராஜனுடைய; அவஷ்டம்ப³மயேந = நிலையுள்ள; பத்ரிணா = அம்பினால்; ஹ்ரிதி² = இதயத்தில் = கே²ாத் ரபி³த் அபி = தேவேந்திரனும்; நவ = புதிய; அம்பு²த² = மேகங்களின்; அநீக = கூட்டத்திற்கு; முஹூர்த = கணநேரத்தில்; லாஞ்ச¹நே = சின்னமான; த³நுஷி = வில்லில்; அமோக³ = பழுதிலா; ஸாயகம் = அம்பை; நநுத³த்த = தொடுத்தான்.

(க-ரை) ரகுமன்னன் விடுத்த நிலைத்த பாணங்களால் மார்பைத் தாக்கப்பட்ட இந்திரன் கோபமுற்று, கணநேரம் புதிய முகில்களுக்கு அறிகுறியாகிய தனது வில்லை எடுத்து பழுதுபடாத தொரு பாணத்தை அதில் தொடுத்தான். (பொதுமையணி)

ஃ ॥ தி²லீப ஸூநோஸ் ஸ ப்²ரிஹத்² பு³ஜாந்தரம்
ப்ரவிஸ்ய பீ³மாஸுர ஸோணி தோசிதஃ।
பபாவநாஸ்வாதி²த பூர்வ மாஸுகஃ²ஃ
குதூஹலே நேவ மநுஷ்ய ஸோணிதஃ ॥ 54

(ப-ரை) பீ³ம = அச்சமூட்டும்; அஸுர = அரக்கர்களின்ஃ ஸோணித = ரத்தத்திய்; உசிதஃ = அறிமுகமாய; ஸஃ = அவ்விந்திரனால்; விடப்பட்ட; ஆஸுக²ஃ = பாணம்; தி²லீபமாநேஃ = ரகு மன்னனுடைய; ப்²ரிஹத் = பெரிய; பு³ஜ = தோள்களின்; அந்தரம் = நடுவில் ப்ரவிஸ்ய = நுழைந்து; அநாஸ்வாதி²த பூர்வம் = இதற்குமுன் சுவைக்காத; மநுஷ்ய ஸோணிதம் = மனித ரத்தத்தை; குதூஹலேந = ஆர்வங் காட்டுவதுபோல்; பபௌ = குடித்தது.

(க-ரை) அச்சமூட்டும் அரக்கர்களின் ரத்தத்தைக் குடித்துப் பழகிய இந்திரனுடைய பாணமானது ரகுவின் அகன்ற மார்பில் நுழைந்து, முன்னெப்போதுமே சுவைத்திராத மனித ரத்த மெவ்வாறு இருக்குமோவென ஆர்வத்துடன் குடித்தது. (மிகை யொற்றுமை யுருவகவணி)

ஃ ॥ ஹரேஃ குமாரோஃபி குமாரவிக்ரம
ஸ்ஸுர த்²விபாஸ்ப¹ாலந கர்கஸாங்கு²ளௌ।

புஜே ஶசீ பத்ரகவிஶேஷ காங்கிதே
ஸ்வநாம சிஹ்நம் நிசகா[1]ந ஸாயகம் ॥ 55

(ப-ரை) குமார = முருகக் கடவுளின்; விக்ரம: = வீரத்துக்கு நிகரான; குமார: அபி = ரகுமன்னனும்; ஸுரத்[2]விப = ஐராவதத்தின்; ஆஸ்ப[1]லன = தட்டுவதால்; கர்கஶ - கடினமான; அங்கு[2]ளௌ = விரல்கள் உடைய; ஶசீ = சசீ தேவியின்; பத்ரகவிஶேஷ: = மகரபத்திரம் முதலியவற்றின்; அங்கிதே = குறியுள்ளதாய் செய்யப்பட்ட; ஹரே: = தேவேந்திரனுடைய; பு[3]ஜே = தோள்களில்; ஸ்வ = தன்னுடைய; நாம = பெயரே; சிஹ்நம் = குறியாகவுள்ள; ஸாயகம் = பாணத்தை; நிசக[1]ாந = நாட்டினான்.

(க-ரை) குமரனைப் போன்ற வீரமுடைய ரகுமகாராஜனும் ஐராவதமென்னும் யானையைத் தட்டுதலால் கடினமான தேவேந்திரனின் புயத்தில் தன்பெயர் அடையாளமுள்ள ஒரு பாணத்தை நாட்டினான். (விரியுவமையணி)

சு॥ ஜஹார சாங்யேந மயூர பத்ரிணா
ஶரேண ஶக்ரஸ்ய மஹாஶநி த்[3]வஜம் ।
சுகோப தஸ்மை ஸ ப்[3]ரிஶம் ஸுரஶ்ரிய:
ப்ரஸஹ்ய கேஶவ்ய பரோபணாதி[2]வ ॥ 56

(ப-ரை) அந்யேவ = மற்றொன்றாய்; மயூர பத்ரிணா = மயிலிறகுகளுடைய; ஶரேண = பாணத்தால்; ஶக்ரஸ்ய = தேவேந்திரனுடைய; மஹத் - மேன்மையான; அஶநி = வஜ்ராயுத உருவான; த்[3]வஜம் = கொடியை; ஜஹார = துண்டித்தான்; ஸ: = அந்த தேவேந்திரன்; ஸுரஶ்ரிய: = தேவர்களுடைய இலக்குமியின்; ப்ரஸஹ்ய = பலாத்காரமாக; கேஶ: = மயிர்களின்; பரோபணாதி[2]வ = தரிப்பது போன்று; தஸ்மை = அந்த ரகுமன்னனிடம்; ப[3]ரிஶம் = மிகுந்த; சுகோப = கோபமுற்றான்.

(க-ரை) மேலும் அந்த ரகுமன்னன் மிகுந்த வலிமையுள்ள தேவேந்திரனுடைய கொடியை மயிலிறகுகளுடைய மற்றொரு பாணத்தால் வீழ்த்தினான். இதனால், தேவர்களுடைய இலக்குமியின் மயிர்களை பலாத்காரமாக தறித்தது போலாயிற்று. தேவராஜன் ரகுவின்மீது வெகுண்டான் (மிகைபெற்றுவமை உருவகவணி)

சு ॥ தயோருபாந்தஸ் தி[1]த ஸித்[2]த[3] ஸைநிகம்
க[2]ருத்மதா ஶீ விஷபீ[3]ம த[2]ர்ஶநை: ।

ப²பூ³வ யுத்²த³ம் துமுலம் ஜயைஷிணோ
ரதே¹ா முகை¹ ரூர்த்²வ முகை¹ம்ச பத்ரிபி³ஃ ॥ 57

(ப-ரை) ஜயைஷிணோஃ=வெற்றியை விரும்பிய; தயோஃ= அவர்கள் இருவரும் (இந்திரனும் ரகுவும்) க²ருத்மத்=கருடனைப் போல்; ஆஶீவிஷ=பாம்புகளைப் போலும்; பீ³ம=அச்சமூட்டும்; த³ர்ஶநைஃ=பார்வையுள்ள; அதே¹ாமுகைஃ=கீழ்நோக்கியவையும்; ஊர்த்³வ முக¹ம்சைவ=மேநோக்கியவையும் ஆகிய; பத்ரிபி³ஃ= பாணங்களால்; உபாந்த=அருகில் உள்ள இடத்தில்; ஸ்தி¹த= நின்றிருக்கும் ஸித்²த³=தேவர்கள்; ஸைநிகம்=படைகள் உள்ளதும் துமுலம்=ஓசையுள்ள; யுத்²த³ம்=போர்; ப²பூ³வ = ஆயிற்று. (நடந்தது)

(க-ரை) ஒருவரையொருவர் வெல்ல வேண்டுமென்ற எண்ணங் கொண்டு இந்திரனும் ரகுவும் கருடனும் பாம்பும் போலுள்ள பாணங் களை ஒருவர் மீதொருவர் எய்தினர். தேவேந்திரனின் பாணங்கள் கீணோக்கியும், ரகுவின் அம்புகள் மேனோக்கியும் பரவியன. சமீபத்திலுள்ள தேவர்களும் படைகளும் உடைய பெரும் போரா யிற்று. (உவமையணி)

ஸ ॥ அதிப்ரப²ந்த³ ப்ரஹிதாஸ்த்ர வ்ரிஷ்டிபி³
ஸ்தமாஶ்ரயம் து²ஷ்ப்ர ஸஹஸ்ய தேஜஸஃ ।
ஶஶாக நிர்வாபயிதும் ந வாஸவஸ்
ஸ்வத ஶ்ச்யுதம் வஹ்நி மிவாத்³பி³ ரம்பு²த³²ஃ ॥ 58

(ப-ரை) வாஸவஃ=தேவராஜன்; அதிப்ரப²ந்த³] = மிகவும் இடைவிடாது; ப்ரஹித=பயன் படுத்தப்பட்ட; அஸ்த்ர = ஆயுதங் களின்; வ்ரிஷ்டிபி³ஃ=மழையால்; துஷ்ப்ரஹஸ்ய=துக்கத்தாலும் சகிக்க முடியாத; தேஜஸஃ=பராக்கிரமத்திற்கு; ஆஶ்ரயம்=இருப் பிடமாகிய; தம்=அந்த ரகுமன்னனை; அம்புத²ஃ=நீரினாலான; ஸ்வதஃ=தன்னாலும்; ச்யுதம்=வெளிப்பட்ட; வஹ்நிமிவ=அக்கி னியைப் போல்; நிர்வாபயிதும்=தணிக்கச் செய்ய; நஶஶாக= வல்லமையற்றுப் போனான்.

(க-ரை) தேவேந்திரன் இடைவிடாது தொடுத்துவிடும் பாணங் களின் தொடர்ச்சியால் எம்மாத்திரமும் சகிக்க முடியாத பிரதாபங் கொண்ட தன் னம்சத்தாலுண்டான ரகுமன்னனை, மேகமானது தண்ணீரால் தன்னுள்ளிருந்து வெளிப்பட்டு விழுந்த இடியை

எவ்வாறு தணிக்க முடியாதோ அவ்வாறு வெல்ல முடியாது போயிற்று. (விரியுவமையணி)

சு ॥ ததஃ ப்ரகோஷ்டே[1] ஹரி சந்த[2]நாங்கிதே
ப்ரமத்[1]யமா நார்ணவதீ[3]ர நாதி[2]நீம் ।
ரகு[3]ஃ ஶஶாங்கார்த[1] முகே[1]ந பத்ரிணா
ஶராஸநஜ்யா மலுநாத்[2] பி[2]டௌஜஸஃ ॥ 59

(ப-ரை) தத[2]ஃ = பிறகு; ரகு[3]ஃ = ரகுமன்னன்; ஹரிச[2]ந்தந = நற் சந்தனத்தால்; அங்கிதே = பூசப்பட்டுள்ள; ப்ரகோஷ்டே = முழங் கைக்குக் கீழ்; ப்ரமத்[2]யமாந = கடையப்பட்ட; அர்ணவ = கடலைப் போல்; தீ[3]ர = கம்பீரமாய்; நாந்தி[2]நீம் = ஒலிக்கும்; பீடௌஜஸஃ = தேவேந்திரனுடைய; அர்த[1] = பாதிமதிபோன்ற; முகே[1]ந = நுனி உடைய; பத்ரிணா = பாணத்தால்; அலுநாத் = அறுத்தான்.

(க-ரை) பிறகு ரகுமன்னன் தன் பாதிமதி போன்ற (அர்த்த சந்திர) பாணத்தால், தேவேந்திரனுடைய சந்தனம் பூசிய முழங் கைகளுக்குக் கீழ், கடையப்பட்ட கடல் போன்று அவ்வப்போது இழுப்பதால் ஏற்பட்ட பேரொலி செய்துக் கொண்டு இருந்த அவனது வில்லின் நாணை அறுத்துவிட்டான். (நிகழ்வினவிற்சியணி)

சு॥ ஸ சாப முத்ஸ்ரிஜ்ய விவ்ரித்[2]த[3] மஸ்த்ரஃ
ப்ரணாஶநாய ப்ரப[2]லஸ்ய வித்[3]விஷஃ ।
மஹீத்[3]ர பக்ஷவ்யப ரோபணோசிதம்
ஸ்பு[1]ரத் ப்ரப[3]ாமண்டல மஸ்த்ர மாத்தே ॥ 60

(ப-ரை) விவ்ரித்[2]த[3] = பெருகிய; மத்ஸர = பகைக்கொண்ட; ஸஃ = அந்த தேவேந்திரன்; சாபம் = வில்லை; உத்ஸ்ரிஜ்ய = விட்டு; ப்ரப[2]லஸ்ய = வலிமிகுந்த; வித்[2]விஷஃ = பகைவனான ரகுமன்னனை ப்ரணாஶாய = அழிப்பதற்கு; மஹீத்[3]ர = மலைகளின்; பக்ஷ = இறகுகளை; வ்யபரோபண = வெட்டுவதில்; உசிதம் = பழகிய; ஸ்புரத் = ஒளிக்கும்; ப்ரப[3]ாமண்டலம் = கதிர்கள் உள்ள; அஸ்த்ரம் = வஜ்ராயுதத்தை; ஆத[3]தே[2] = பெற்றுக்கொண்டான்.

(க-ரை) பகைமை பெருகிய தேவேந்திரன் வில்லைக் கை விட்டு, மலைகளின் இறகுகளை வெட்டியதும், ஒளிமிக்கதுமான வஜ்ராயுதத்தை, வலிமிகுந்த பகைவனாகிய ரகுமன்னனைக் கொல்லும் பொருட்டு கையிலேந்தினான். (தன்மைநவிற்சியணி)

ஃ॥ ரகு³ர் ப்³ரிஶம் வக்ஷஸி தேந தாடிதஃ
பபாத பூ⁴மௌ ஸஹஸைநிகாஶ்ருபிஃ ।
நிமேஷ மாத்ரா த³வதூ⁴யச வ்யத¹ாம்
ஸஹோத்தி¹தஸ் ஸைநிக ஹர்ஷநிஸ்வநைஃ ॥ 61

(ப-ரை) ரகு³ஃ=ரகுமன்னன்; தேந=அந்த வஜ்ராயுதத்தால்; ப்³ரிஶம்=மிகுந்து; வக்ஷஸி=மார்பில்; தாடிதஸ்ஸந்=அடிபட்டவனாய்; ஸைநிக=படைகளுடைய; அஶ்ருபி⁴ஸ்ஸஹ=கண்ணீருடன்; பூ⁴மௌ=தரைமீது; பபாத=சாய்ந்தான்; நிமேஷமாத்ராத்=கணப் பொழுதில்; வ்யத¹ாம்=துன்பத்தை; அவதூய³=விட்டவனாய்; ஸைநிக=ஸேனையின்; ஹர்ஷ=மகிழ்ச்சியால்; நிஸ்வநைஸ்ஸஹ=சிங்கநாதத்துடன்; உத்தி¹தஶ்ச=எழுந்திருந்தான்.

(க-ரை) ரகுமன்னன் அந்த வஜ்ஜிராயுதத்தின் மாரபில் அடியுண்டவனாகி, தன் சேனைகள் கண்ணீர் மல்க தரைமீது விழுந்து கண நேரத்தில் அதை அலட்சியம் செய்து உடனே எழுந்தான். அப்போது படைவீரர்கள் சிங்கநாதம் செய்தனர். (மிகுதிநவிற்சியணி)

ஃ॥ தத¹ாபி ஶஸ்த்ர வ்யவஹார நிஷ்டு¹ரே
விபக்ஷ ப³ாவேஸ்திர மஸ்ய தஸ்துஷஃ ।
துதோஷ வீர்யாதிஶயேந வ்ரித்ரஹா
பத³ம்ஹி ஸர்வத்ர குணைர் நிதீ³யதே ॥ 62

(ப-ரை) தத¹ாபி=அந்த வஜ்ஜிராயுதத்தின் அடிப்படுதலிலும்; ஶஸ்த்ர வ்யவஹார=ஆயுதத் தொழிலால்; நிஷ்டு¹ரே=கடினமான; விபக்ஷப³ாவே=பகைமையில்; ஸ்தி¹ரம்=நிலையாக; தஸ்துஷஃ=இருக்கும்; அஸ்ய=இந்த ரகுமன்னனின்; வீர்யாதிஶயேந=பராக்ரமத்தின் மிகுதியால்; வ்ரித்ரஹா=தேவேந்திரன்; துதோஷ=மகிழ்வுற்றான்; தத¹ாஹி=அவ்வாறிருக்க; கு³ணைஃ=குணங்களால்; ஸர்வத்ர=பகைவர், நட்டார், அலட்சியமாயினோர் ஆகிய எல்லாரிடமும்; பத³ம்=சமபாவத்தை=நிதீ³யதே=வைக்கப்படுகிறது.

(க-ரை) இவ்வாறு வஜ்ஜிராயுதத்தால் தாக்கியும், வெல்ல முடியாது நிற்கும் ரகுமன்னனுடைய அற்புதமான பராக்கிரமத்துக்குத் தேவேந்திரன் மெச்சினான். குணவான்களுக்குப் பகைவர் நட்டாராகிய அனைவரிடமும் சமப்பார்வை இருப்பது இயற்கை அன்றோ. (மிகுதி நவிற்சியணி)

சு ॥ அஸங்க² மத்²ரிஷ்வபி ஸாரவத்தயா
ந மே த்வத²ந்யேந விஸோட⁸ மாயுத⁸ம் ।
அவேஹி மாம்ப்ரீத ம்ரிதே துரங்க²மாத்
கிமிச்ச¹ஸீதி ஸ்பு¹டமாஹ வாஸவஃ ॥ 63

(ப-ரை) ஸார வத்தயா = வலிமை மிக்கதாகையால்; அத்²ரிஷ்வபி = மலைகளிலும்; அஸங்க²ம் = தடையற்றிருந்த; மே = எனது; ஆயுத³ம் = வஜ்ஜிராயுதமானது; த்வத் அந்யேந = நீயல்லாது மற்றவரால்; நவிஸோட⁸ம்; சகிக்கப்படவில்லை; ஆவேஹி = தெரிந்துக்கொள்; துரங்க²ம் ஆத்²ரிதே = புரவியைத் தவிர்த்து; கிம் = எதை; இச்ச¹ஸி = விரும்புகிறாய்; இதி = என; வாஸவஃ = தேவேந்திரன்; ஸ்பு¹டம் = தெளிவாக; ஆஹ = உரைத்தான்.

(க-ரை) தேவேந்திரன் ரகுமன்னனிடம், "மலைகளின் இறகுகளைத் தறித்த வலிமைமிக்க எனது வஜ்ஜிராயுதத்தின் தாக்குதலைத் தாங்கி நின்றவன் நீ ஒருவன் மட்டுமல்லாது மற்றெவருமே தப்பியதை யான் கண்டிலேன்; ஆகையால், உன்மீது எனக்கு அன்பு உண்டாகியது என அறிவாயாக; இப்புரவியைத் தவிர்த்து, வேறென்ன வேண்டுமோ கேள்" என்றான். (இன்பவணி)

சு ॥ ததோ நிஷங்க²ாத²ஸமக்²ர முத்²த்³ரிதம்
ஸுவர்ண புங்க¹ த்²யுதிரம் ஜிதாங்கு²ளிம் ।
நரேந்த்²ர ஸூநுஃ ப்ரதி ஸம்ஹரந் நிஷும்
ப்ரியம் வத²ம் ப்ரத்யவத² த்ஸுரேஶ்வரம் ॥ 64

(ப-ரை) ததஃ = பிறகு; நரேந்த்³ரஸூநுஃ = ரகுமன்னன்; நிஷங்க²ாத் = அம்புறாப் பொதியிலிருந்து; அஸமக்²ரம் யத²ாதத¹ா = முடிவுறாதது போன்று; உத்³ரிதம் = மேலுக்கெடுத்து; ஸ்வர்ண = பொன்னாலாய; புங்க¹ = பிடியின்; த்²யுதி = ஒளியால்; ரஞ்ஜித = மிளிரச் செய்த; அங்கு²ளிம் = விரல்களுடைய; இஷும் = பாணத்தையும்; ப்ரதி ஸம்ஹரஸ்ஸந் = பின்னுக்கு இழுத்துக் கொண்டவனாய்; ப்ரியம்வத³ = அன்பு மொழிகளால்; ஸுரேஶ்வரம் = தேவேந்திரனை நோக்கி; ப்ரத்யவதத் = பதிலைக் கூறினான்.

(க-ரை) அதற்கு ரகுமகாராஜன் அம்புறாப்பொதியிலிருந்து, பாதியளவுக்கு மேலே கொண்டுவந்த அம்பை மறுபடியும் அதிலேயே

விட்டுவிட்டு, நல்லதைச் சொல்லும் தேவேந்திரனைப் பார்த்து மறு மொழி நவின்றான். (தகுதியணி)

சு॥ அமோச்ய மஶ்வம் யதி² மந்யஸே ப்ரபே³ா
ததஸ் ஸமாப்தே விதி³நைவ கர்மணி ।
அஜஸ்ர தீக்ஷாப்ரயதஸ் ஸ மத்²கு²ரு:
க்ரதோ ரஶேஷேண ப¹லேந யுஜ்யதாம் ॥ 65

(ப-ரை) ஹேப்ரபே³ா = ஓ, தேவேந்திரனே! அஶ்வம் = புரவியை; அமோச்யம் = விடக்கூடாததாக; மந்யஸேயதி = நினைத்தாயெனின்; தத: = ஆனால்; அஜஸ்ர: = எப்போதுமே; தீ²க்ஷா = வேள்வி என்னும் விரதத்தில்; ப்ரயத: = ஆழ்ந்துள்ள; ஸ: = அந்த; மத்²கு²ரு: = எனது பிதா; விதி³நைவ = நூல் (சாத்திரங்) களைக் கொண்டே; கர்மணி = வேள்வியென்னும் கிரிகையை; ஸமாப்தே = முடிக்கப்பட்டதாய் ஆவதற்கு; க்ரதோ: = அசுவமேத யாகத்தின்; ப¹லேந = பலனால்; அஶேஷேண = எல்லாவற்றுடனும்; யுஜ்யதாம் = கூடியுள்ளதாகட்டும்.

(க-ரை) ஐயனே! குதிரை விடத்தக்கதன்றென்று எண்ணு வையேல், விரதத்துடன் கூடிய எனது பிதாவின் அசுவமேத யாகப் பலனை (குதிரையின்றியே) நிறைவுற்றதாகச் செய்தருள்வாய். (வேண்டலணி)

சு॥ யத¹ாச வ்ரித்தாந்த மிமம் ஸதோ²க²த
ஸ்த்ரிலோசநை காம்ஶதயா து²ராஸத²: ।
தவைவ ஸந்தே²ஶ ஹரா த்²விஶாம்பதிஸ்
ஶ்ரிணோதி லோகேஶ தத¹ா விதீ³யதாம் ॥ 66

(ப-ரை) ஸதோ²க²த: = வீடு திரும்பிய; த்ரிலோசநை: = பரமேசுவரனுடைய; ஏகாம்ஶதயா = ஒரே அம்சமுடையவனாதலால் து²ராஸத²: = கிடைக்கப்பெறாத; விஶாம்பதி: = நரேந்திரனாகிய திலீப மன்னன்; யத¹ா = எவ்வாறு; இமம் வ்ரித்தாந்தம் = இச்செய்தியை; தவ = உன்னுடைய; ஸந்தே²ஶஹராத் ஏவ = தூதுவனாலேயே; ஶ்ரிணோதி = கேட்கிறானோ; ஹேலோகேஶ = ஓ தேவேந்திரனே! தத¹ா = அதுபோல்; தீ³யதாம் = செய்யப்படட்டும்.

(க-ரை) மேலும் ஈசுவர சம்மந்தமான எட்டு மூர்த்திகளுடன் யாக தீட்சையால் ஒரு மூர்த்தியாய் விளங்குவதால், மிக்க பராக்

கிரமமுடைய, வீட்டிலுள்ள, என் பிதாவான திலீபமன்னருக்கு இச்செய்தியை நீர் உமது தூதுவர் வாயிலாகவே சொல்லி அனுப்ப வேண்டும். (வேண்டலணி)

ஸு॥ த்தே[1]தி காமம் ப்ரதி ஶுஶ்ருவாந் ரகே[4]ாஃ
யத[2]ாக[2]தம் மாதலிஸாரதி[3]ர் யயௌ ।
ந்ருபஸ்ய நாதிப்ரமநாஸ் ஸதோ[3]ா க்[3]ருஹம்
ஸுதக்ஷிணாஸுநு ரபி ந்யவர்தத ॥ 67

(ப-ரை) மாதலிஸாரதிஃ='மாதலி' என்பவனைத் தேரோட்டியாகக் கொண்ட தேவேந்திரன்; ரகே[2]ாஃ=ரகு மன்னனுடைய; காமம்=எண்ணத்தை; ததே[1]தி=அவ்வாறே ஆகட்டுமென்று; ப்ரதிஶுஶ்ருவாந்=சூளுரைத்தவனாய்; யத[2]ாக[2]தம் = வந்தது போலவே; யயௌ=திரும்பிச் சென்றனர்; ஸுதக்ஷிணா ஸுநுரபி= ரகுமன்னனும்; ஸதோ[2]க்ருஹம்=ஸபாமண்டபத்தை நோக்கி; ந்யவர்தத=திரும்பிச் சென்றான்.

(க-ரை) தேவேந்திரன் அவ்வாறே ஆகட்டுமென நவின்று திரும்பிச் சென்றான். ரகுமன்னனும் புரவியை இழந்த எண்ணத்துடன் தனக்குக் கிடைத்த வெற்றிக்கு மனநிறைவுறாமலேயே தன்னுடைய நகரத்திற்குச் சென்றுவிட்டான். (பொதுமையணி)

ஸு॥ த மப்[4]யநந்த[2] த்ப்ரத[1]மம் ப்ரபோ[3]ாதி[3]ஃ
ப்ரஜேஶ்வரஶ் ஶாஸந ஹாரிணா ஹரேதஃ ।
பராம்ருஶந் ஹர்ஷ ஜலேந பாணிநா
ததீ[2]ய மங்க[2]ம் குலிஶ வ்ரணாங்கிதம் ॥ 68

(ப-ரை) ஹரேஃ=தேவேந்திரனுடைய; ஶாஸநஹாரிணா= உத்தரவைக் கொண்டு செல்பவனால்; ப்ரத[1]மம்=முதன்முதலில்; ப்ரபோ[2]ாதி[3]தஃ=அறிவிக்கப்பட்ட; ப்ரஜேஶ்வரஃ=திலீப மன்னன்; ஹர்ஷஜலேந=ஆனந்தக் கண்ணீரால் குளிர்ந்த; பாணிநா=கை களால்; குலிஶ=வஜ்ஜிராயுதத்தின்; வ்ரண=புண்களால்; அங்கிதம்=அடையாளமுள்ளதாய் செய்யப்பட்ட; ததீ[2]யம்=அந்த ரகு மன்னனின்; அங்க[2]ம்=உடலை; பராம்ருஶந்ஸந்=தொடுக்கின்றவனாய்; தம்=அந்த ரகுவை; அப்[3]யநந்த[2]த்=பாராட்டினான்.

(க-ரை) தேவேந்திரன் திலீப மன்னனுக்குத் தன் தூதுவன் வாயிலாக அவ்வாறே சொல்லியனுப்ப, அதற்குத் திலீப மன்னன்

மிகுந்த மகிழ்வுற்று, வஜ்ஜிராயுதத்தால் அடியுண்ட ரகுவின் உடலை, தன் குளிர்ந்த கைகளால் தடவிக் கொடுத்து அவனை மெச்சிக்கொண்டான். (இன்பவணி)

சு ॥ இதி க்ஷிதீசோ நவதிம் நவாதி³காம்
மஹா க்ரதூநாம் மஹநீய சாஸநஃ :
ஸமாருருக்ஷுர் தி²வ மாயுஷஃ க்ஷயே
ததாந ஸோப¹ாந பரம்பராமிவ ॥ 69

(ப-ரை) இதி = முன்கூறியதுபோல்; மஹநீய = மகத்தான; சாஸநஃ = உத்தரவுடைய; க்ஷிதீசஃ = திலீப மன்னன்; மஹா மேன்மையான; க்ரதூநாம் = அசுவமேத யாகங்களின்; நவாதி³காம் நவதிம் = தொண்ணூற்று ஒன்பதை; ஆயுஷஃ = ஆயுவை; க்ஷயே = தாண்டிய பிறகு; தி²வம் = தேவ வுலகை; ஸமாருருக்ஷுஸ்ஸந் = ஏறும் எண்ணம் கொண்டவனாய்; ஸோப¹ாந = படிகளின்; பரம் பராம் இவ = வரிசைப்போல்; ததாந = விரிவு படுத்தினான்.

(க-ரை) திலீப மன்னன் தன் ஆயுட் கடைசியில் தேவலோகம் செல்லும் எண்ணத்துடன் அதற்குப் படிகள் அமைத்தவாறு தொண்ணூற்றொன்பது அசுவமேத யாகங்களைச் செய்தான். (உருவகம்)

சு ॥ அத²ஸ விஷய வ்யாவ்ரித் தாத்மா யத¹ாவிதி²ஸூநவே
ந்ரிபதிககுத³ம் த³த்வா யூநேஸிதாதப வாரணம் ।
முநிவந தருச்ச¹ாயாம் தே³வ்யா தயா ஸஹ ஸிச்ரியே
க²ளித வயஸா மிக்ஷ்வாகூணா மித³ம் ஹிகுலபத்ரம் ॥ 70

இதி காளிதாஸ க்ரிதௌ ரகு³வம்ஸே மஹாகாவ்யே த்ரிதீய ஸ்ஸர்க³ஃ.

(ப-ரை) அத¹ = பிறகு; விஷயவ்யாவ்ருத்தாத்மா = கேட்டல் முதலிய புலன் வழிக் கொள்ளுதலிலிருந்து திரும்பிய; ஆத்மா = சித்த முடைய; ஸஃ = அந்த திலீபமன்னன்; யதாவிதி¹ = நூன்முறையை ஒட்டி; யூநே = இளம் வயதுடைய; ஸூநவே = மகனாகிய, (ரகு மன்னனுக்காக) ந்ரிபதி = அரசனுக்கு; ககுத³ம் = சின்னமாகிய; ஸிதாதபவாரணம் = வெண்குடையும்; த³த்வா = கொடுத்து; தயா = அந்த; தேவ்யாஸஹ = சுதக்ஷிணா தேவியுடன்ஃ முநிவந = முநியுள்ள காட்டிலிருக்கும்; தரு = மரத்தின்; ச¹ாயாம் = நிழலில்; ஸிச்ரியே = அண்டினான்; தத¹ாஹி = அப்படியிருக்க: க²ளித = கடந்துவிட்ட;

வயஸாம் = வயதையுடைய; இக்ஷ்வாகூணாம் = இக்ஷ்வாகு நாட்டரசர் கட்கு; இதம் = இந்த (காட்டுக்குச் செல்லுதல்) குல = மறபில் கடைப்பிடித்துவரும்; வ்ரதம் ஹி = விரதமே யன்றோ!

(க-ரை) திலீப மன்னன் எல்லாந் துறந்து அரசனுக்கு அறிகுறியாக வெண்குடையை இளம் வயதினான தன் மகனாகிய ரகு மகாராசனுக்கு ஒப்படைத்து மனைவியுடன் வானப் பிரத்த நெறியை நடத்துவதற்கு வனாந்திரம் சென்றான். இக்ஷ்வாகுவம்சத்து அரசர்களுக்கு, வயோதிக காலத்தில் வானப் பிரத்தமென்னும் ஆச்சிரமத்தைக் கடைப்பிடித்தல் வழக்கமே அன்றோ. (உடனிகழ்ச்சியணி)

இது காளிதாசனாலியற்றப்பட்ட ரகுவம்சத்தில் மூன்றாம் சருக்கத்திற்குத் திருத்தணிவாழ் ஸ்ரீவித்யானந்தரெனும் செ. ராமலிங்காசாரியாராலியற்றப்பட்ட தெளிவுரை.

# ரகுவம்ச மகா காவியம்

## நாகன்றாம் சருக்கம்

க॥ ஸராஜ்யம் கு²ருணாத²த்தம் பதி பத்²யாதி³கம் ப³பெ²ள ।
தி³நாந்தே நிஹிதம் தேஜஃ ஸவித்ரேவஹுதாஶநஃ ॥ 1

(ப-ரை) ஸஃ = அந்த ரகுமகாராசன்; கு²ருணா = தந்தையாகிய திலீப மன்னனால்; த³த்தம் = கொடுக்கப்பட்ட; ராஜ்யம் = அரசை; ப்ரதிபத்²ய = அடைந்து; திநாந்தே = மாலையில்; ஸவித்ரா = சூரியனால்; நிஹிதம் = கொடுக்கப்பட்ட; தேஜஃ = ஒளியை; ப்ரதிபத்³ய = அடைந்து; ஹுதாஶந இவ = வன்னியைப் போல்; அதி³கம் = மிகுதியாக; ப³பெ²ள = பிரகாசித்தான்.

(க-ரை) ரகுமன்னன் தன் தகப்பனராகிய திலீப மன்னனால் கொடுக்கப்பட்ட அரசையேற்று மாலை வேளையில் பரிதியால் கொடுக்கப்பட்ட ஒளிப் பொருந்திய வன்னியைப் போல் மிகவும் பிரகாசித்தான். (மிகையொற்றுமை உருவகவணி)

உ॥ தி³லீபாநந்தரம் ராஜ்யே தந்நிஶம்ய ப்ரதிஷ்டி¹தம் ।
பூர்வம் ப்ரதூ³மிதோ ராஜ்ஞாம் ஹ்ருத³யேऽக்நி ரிவோத்தி¹தம் ॥ 2

(ப-ரை) திலீபாநந்தரம் = திலீப மன்னனுக்குப் பிறகு; ராஜ்யே = நாட்டில்; ப்ரதிஷ்டி¹தம் = இளவரசானாக்கப்பட்ட; தம் = அந்த ரகுமன்னனனை; நிஶம்ய = கேட்டு; பூர்வம் = முன்பு; (திலீபன் காலத்தில்); ராஜ்ஞாம் = பகைத்த அரசர்களின்; ஹ்ருத³யே = மனதில்; ப்ரதூ³மிதஃ = புகையைக் கண்டு; அக்³நிஃ = துயரத்தை; உத்தி¹த இவ = ஒளித்ததோவென்று இருந்தது.

(க-ரை) எதிரி மன்னர்கள் திலீபனுககுப் பிறகு ரகுமகாமன்னன் இளவரசனானதைக் கேட்டதும், அவர்களுடைய இதயத்தில் புகைந்துக் கொண்டு இருந்தக் கனலானது தலை தூக்கியது போலாயிற்று. அதாவது திலீபன் விஷயத்தில் மிகவும் அச்சப்பட்டுக் கொண்டிருந்தனர்; அந்தப்பயம் இப்போது அதிகமாயிற்று. (மிகையதன் செய்கையுருவகவணி)

சு ॥ புருஹூத த்[3]வஜஸ்யேவ தஸ்யோந் நயந பங்க்தய:।
நவாப்[3]யுத்த[1]ாந த்[2]ர்ஶிந்யோ நநந்து[2]: ஸப்ரஜா: ப்ரஜா:॥ 3

(ப-ரை) புருஹூத:=தேவேந்திரனுடைய; த்[3]வஜஸ்யேவ=கொடியைப் போன்ற; தஸ்ய=அந்த ரகு மன்னனுடைய; நவ—புதிய; அப்[3]யுத்[2]த[1]ாந=உயர்வை; த்[2]ர்ஶந:=காணும்படியான; ஸப்ரஜா:=சந்ததியாருடன் கூடிய; ப்ரஜா:=மக்கள்; உத்=உயர்த்தப்பட்ட; நயந=கண்களின்; பங்க்தயஸ் ஸத்[2]ய:=வரிசைகள் உடையவர்களாய்; நநந்த[2]ு:=மகிழ்ந்தனர்;

(க-ரை) மக்கள் தம்முடைய மக்களுடன் கூடி ஒவ்வொரு வருடமும், அரசர்களால் செய்யப்படும் இந்திரக் கொடியின் விழாவில் அதன் உச்சியை எவ்வாறு கண்களை உயர்த்திப் பார்த்து மகிழ்வார்களோ அவ்வாறே புதிதாய் அரசுக்கு வந்த ரகுமன்னனுடைய மேன்மையைக் கண்ணாறக் கண்டு மகிழ்ந்தனர். (விரிவுரையணி)

சு ॥ ஸமமேவ ஸமாக்ராந்தம் த்[2]வயம் த்[2]விரத[2]க[2]ாமிநா ।
தேந ஸிம்ஹாஸநம் பித்ர்யம் அகி[1]லம் சாரிமண்டலம் ॥ 4

(ப-ரை) த்[2]விரத[2]=யானையைப் போல்; க[2]ாமிநா=செல்லும்; தேந=அந்த ரகுமன்னனால்; பித்ர்யம்=தகப்பனாரைச் சார்ந்த; ஸிம்ஹாஸநம் = அரியணையையும்; அகி[1]லம் = எல்லா; அரிமண்டலம்; பகைவர்களின் நாடுகளையும்; த்[2]வயம்=ஆகிய இரண்டினையும்; ஸமமேவ=ஒரே நேரத்தில்; ஸமாக்ராந்தம்=பற்றிக் கொள்ளலாயிற்று.

(க-ரை) மதகரியைப் போன்ற நடையுடைய ரகுமன்னன் தன்னரியணையை ஏற்றவுடன் பகையரசர்கள் அவனுக்குப் பயந்து கீழ்ப்பணிந்தனர். (உவமை மற்றும் வீறுகோளணி)

அ ॥ சிங்காதனம் ஏறியபின் அவனது அரசு விளக்கப்படுகிறது.

க ॥ ச[1]ாயாமண்டல லக்ஷ்யேண தமத்[2]ருஶ்யா கிலஸ்வயம் ।
பத்[2]மா பத்[2]மாதபத்ரேண பே[3]ஜேஸாம்ராஜ்ய தீக்ஷிதம் ॥ 5

(ப-ரை) ப[2]த்மா=இலக்குமியால்; ஸ்வயம்=தாமாக; அத்[3]ருஶ்யதம்கில=தென்படாதவனாய்; ச[1]ாயாமண்டல = ஒளியின் திரளால் (குடையின் நிழலால் என்றும் தொனி) லக்ஷ்யேண = எண்ணக் கூடிய; பத்[2]மாத பத்ரேண=தாமரையென்னும் குடை

யால்; ஸாம்ராஜ்ய = நாடாண்மையில்; தீ[2]க்ஷிதம் = ஊக்கங் கொண்டுள்ள ; தம் = அந்தரகு மன்னன் ; பே[3]ஜே = அடைந்தனள்.

(க-ரை) ரகுமகாராஜன் அரியணையேறியதும் அவருக்குண்டாகிய ஒளியின் திரளானது தாமரை என்னும் குடையைப் போல் தெரிந்தது. இதனால், அரசனெனும் மலராள் அவனுக்குக் குடையைப் பிடித்துக் கொண்டிருப்பது போன்று இருந்தது. (உயர்வுனவிற்சியணி)

அ॥ மற்றும் அவனுக்கு நாமகளின் சாந்நித்தியம் கூறுதல்.

சு॥ பரிகல்பித ஸாங்நித்[3]யா காலேகாலேசவந்தி[2]ஷு ।
ஸ்துத்யம் ஸ்துதிபி[3] ரர்த்[1]யாபி[3] ருப பத்தே ஸரஸ்வதீ ॥ 6

(ப-ரை) ஸரஸ்வதீச = சரசுவதி தேவியும்; காலேகாலே = உரிய காலத்தில்; வந்தி[2]ஷு = துதிப்பாடகர்களில்; பரிகல்பித = செய்யப்பட்ட; ஸாந்நித்[3]யாஸதி = ஸாந்நித்யமுடையவளாய்; ஸ்துத்யம் = துதிக்கத்தக்க ரகுமன்னனை; அர்த்[1]யாபி[3]ஃ = பொருள் நிறைந்த; ஸ்துதிபி[3]ஃ = துதிப்பாடல்களால் உபதஸ்தே[1] = தொழுதனர்.

(க-ரை) அந்தந்த வேளைகளில் வந்தியும் மாகதர்களும் ரகுமன்னனை, அவனது குண நலன்களைத் துதி செய்ய, அரசர்கள் விட்டுனு, திக்குப் பாலர்கள் போன்ற பெருமை உடையவர்கள் எனுங் கூற்றுக் கேற்ப, தேவ பாவனையோடு அவனை சரசுவதியே துதி செய்வது போன்று தோன்றிற்று. (உயர்வுளவிற்சியணி)

சு॥ மநு ப்ரபி[3]ர்திபிர் மாங்யைஃ பு[3]க்தா யத்[2]யபி ராஜபி[3]ஃ ।
தத[1]ாப்யநங்ய பூர்வேவ தஸ்மிந் நாஸீத்[2] வஸுந்த[3]ரா ॥ 7

(ப-ரை) வஸுந்த[3]ரா = பூமியானதுஃ மநுப்ரபிர்திபி[3]ஃ = மநுவென்னும் மாமன்னன் முதலிய; மாந்யைஃ = பூசிக்கத்தக்கஃ ராஜபி[3]ஃ அரசர்களால்; பு[3]க்தாயத்[3]யபி = அனுபவிக்கப்பட்டதே; தத[1]ாபி = ஆயினும்; தஸ்மின் = அந்த ரகுமன்னனைப் பொறுத்தமட்டில்; அநந்ய பூர்வேவ = முன்பு பிறரால் அனுபவிக்காதது போல்; ஆஸீத் = ஆயிற்று.

(க-ரை) இப்புவியானது முன்பு மனு முதலிய புகழ்வாய்ந்த பல மன்னர்களால் ஆளப்பட்டதே ஆயினும் ரகுவின் அதிசயமான ஈதல்

போன்ற நற்குணங்களையொட்டி இதுபோன்ற அரசன் இதுவரை ஆண்டதில்லை என்ற புகழை அடைந்தான். (உயர்வுனர்விற்சி யணி)

அவ ॥ அதற்குக் காரணங்கள் கூறப்படுகின்றன.

சு॥ ஸஹி ஸர்வஸ்யலோகஸ்ய யுக்த த²ண்டதயா மந: ।
ஆத²³தே² நாதி ஶ்ரீதோஷ்ணோ நப³ஸ்வா நிவ த³க்ஷிண: ॥ 8

(ப-ரை) ஸ: = அந்த ரகுமன்னன்; யுக்த = தகுந்த; த²ண்டதயா = தண்டனைகள் உடையவனாதலால்; ஸர்வஸ்ய = எல்லா; லோகஸ்ய = மக்களின்; மந: - மனதில்; நாதி ஶ்ரீதோஷ்ண: = மிகுந்த குளுமையும், மிக்க வெப்பமும் இல்லாத; த³க்ஷிண்யே = தெற்கில் பிறந்த; நப³ஸ்வாநிவ = வாயுவைப் போல்; ஆத³த³ = கொண்டனர்.

(க-ரை) ரகுமாமன்னன் தண்டிக்கத் தக்கவர்கட்கு எவ்வளவு தண்டனை தகுமோ அவ்வளவு மட்டுமே தெளிவுடன் வழங்கிவந்ததால் அவனுடைய ஆட்சியானது காற்று தேவைப்பட்டபோது சுகந்தரவல்ல தென்திசையிலிருந்து வீசும் தென்றல்போன்று, எல்லா மக்களுக்கும் மகிழ்விப்பதாக இருந்தது. (நிகழ்வினவிற்சி மற்றும் தொகையுவமையணி)

சு ॥ மந்தே²த்கண்ட¹: க்ரிதாஸ்தேந குணாதி³க²தா கு²ரௌ ।
ப¹லேந ஸஹகாரஸ்ய புஷ்போத்²க²ம இவ ப்ரஜா: ॥ 9

(ப-ரை) தேந = அந்தரகு; கு²ண அதி³க²தயா = நற்குணங்கள் நிறைந்தவனாக இருந்தமையால்; ப்ரஜா: = மக்கள்; கு²ரௌ = அவன் தந்தையாகிய திலீப மன்னனைப் பொருத்தவரையில்; ஸஹகாரஸ்ய = இனிய மாமரத்தில்; ப¹லேந = பழத்தால்; புஷ்ப = பூவின்; உத்²க²ம இவ = பிறக்கும் தருணத்தில் உள்ளதுபோல்; மந்த = சொற்பமான; உத்கண்ட¹: = உற்சாக முடையவர்களாக; க்ரிதா: = செய்யப்பட்டனர்.

(க-ரை) ரகுமகாராஜனின் அதிக நற்குணங்களையொட்டி அவனது மக்களுக்குத் திலீப மன்னனிடம் வைத்திருந்த அன்பு குறைந்தது. எவ்வாறெனின், இனிய மாமரம் பூக்கும்போது மகிழ்வுண்டாகிறது. அது பலனளிக்கும்போது அம்மகிழ்ச்சி பெருகி

பூவின் மீதிருந்த மகிழ்ச்சி குறைந்துவிடுகிறது. (நிகரெடுத்துக் காட்டுவமையணி)

சு ॥ நயவித்2பி3ர் நவேராஜ்ஞீஸ் ஸதஸச் சோபத3ர்ஶிதம் ।
பூர்வ ஏவா ப3வத் பக்ஷஃ தஸ்மிந் நாப3வ து2த்தரஃ ॥ 10

(ப-ரை) நயவித்3பி3ஃ = நீதி நூலறிஞர்களால்; நவே = புதிய வனாகிய; ராஜ்ஞீ = ரகுமன்னவன் விஷயத்தில்; ஸத் = அறப்போரை யும்; அஸத்ச = வஞ்சனைப் போரையும்; உபத3ர்ஶிதம் = காண் பிக்கப்பட்டது; தஸ்மிந் = அந்த ரகுமன்னனிடம்; பூர்வ = முதலாம்; பக்ஷ ஏவ = அறப்போரே; அப3வத் = ஆயிற்று; உத்தர; = இரண்டா வதாகிய வஞ்சப் போர்; நாப3வத் = ஆகவில்லை.

(க-ரை) நீதி நூலறிஞர்கள் புதிதாக அரசை ஏற்ற ரகுவுக்கு அறப்போரையே பின்பற்றினார். அறமற்றதைப்பற்றிச் சிந்தித்ததே கிடையாது. (வீறுகோளணி)

சு ॥ பஞ்சாநாமபி பூ3தாநா முத்கர்ஷம் புபுஷுர் கு3ணாஃ ।
நவே தஸ்மிந் மஹீபாலே ஸர்வந் நவமிவா ப3வத் ॥ 11

(ப-ரை) பஞ்சாநாமபி = ஐந்தாகிய; பூ3தாநாம் = பூமி முதலிய பூதங்களின்; கு3ணாஃ = மண் முதலிய குணங்கள்; உத்கர்ஷம் = மேன்மையை; புபுஷுஃ = பேணின; தஸ்மிந் = அந்த ரகுமன்னன்; நவே = புதிய; மஹீபாலே ஈதி = அரசனேயாயினும்; ஸர்வம் = எல்லாப் பொருளும்; நவமிவ = புதிதானது போல; ஆஸீத் = ஆயிற்று.

(க-ரை) ரகு மன்னனுடைய மேன்மையான அறவாட்சியில் காலத்திற் கேற்ப தவறாது நடத்திவந்தமையால், புவி முதலிய பஞ்ச பூதங்களின் குணங்கள் மேன்மையுற்றன. இதனால், அவனது புதிய அரசில் எல்லாமே புதியனவாகவே தோன்றின. (தன் குணமிகையணி)

சு ॥ யதா2 ப்ரஹ்லாத3நாச் சந்த்3ரஃ ப்ரதாபாத் தபநோ யதா2 ।
ததை2வ ஸோ஽பூ4 த3ந்வர்தே2 ராஜா ப்ரக்ரிதி ரஞ்ஜநாத் ॥ 12

(ப-ரை) யதா2 = எவ்வாறு; சந்த்3ரஃ = சந்திரன்; ப்ரஹ்லாத3 நாத் = மகிழ்வூட்டுவதால்; அந்வர்த2ஃ = ஏற்றப் பெயருடையவனோ; யதா2 = எவ்வாறு; தபநஃ = சூரியன்; ப்ரபாதாத் = வருத்துவதால்;

அந்வர்த²ஃ=தகுந்த பெயருடையவன் ஆகின்றானோ; தத²ா= அதுபோல்; ஸஃ ராஜா=அந்த ரகுமன்னன்; ப்ரக்ரிதி=மக்களின்; ரஞ்ஜநாத்=மகிழ்வுறச் செய்வதால்; அந்வர்த²ஃ=அதற்கேற்ற நற்புகழ் கொண்டவனாக; அபூ⁴த்=ஆனான்.

(க-ரை) சந்திரன் தன் மகிழ்வூட்டும் கதிர்களாலும், சூரியன் தன் வெப்பக் கதிர்களாலும் எவ்வாறு தகுந்த பெயர்கள் உடையவர்களாக இருக்கின்றனரோ அதுபோல், ரகுமன்னன் மக்களின் காதலுக்கேற்ப நற்பெயருடையவனாக விளங்கினான். (விரியுவமையணி)

சு ॥ காமம் கர்ணாந்த விஶ்ராந்தே விஶாலே தஸ்ய லோசநே ।
சதுஷ்மத்தா து ஶாஸ்த்ரேண ஸூக்ஷ்ம கார்யார்த² த³ர்ஶிநா॥ 13

(ப-ரை) விஶாலே=விரிவான; தஸ்ய=அந்த ரகுமன்னவனுடைய; லோசநே=கண்கள்; காமம்=மிக்க; கர்ணாந்த=காதுகள் வரையில்; விஸ்ராந்தே=பரவின; சதுஷ்மத்தாது=கண்களுடையவனுடைய அறமோ; ஸூக்ஷ்ம=கூர்மையான; கார்யார்த²=செய்த்தொழில் காட்டுவன; ஶாஸ்த்ரேண=நூல்களாலேயே.

(க-ரை) ரகுமன்னனுடைய காதுகள் வரை கண்கள் பரவி இருந்தன. அதாவது அவை மிக விரிந்திருந்தன. அதுபோல், அவனுடைய நூற்பார்வையும் மிக விரிந்திருந்தது (விளக்கணி)

சு ॥ லப்³த⁴ப்ரஶமந ஸ்வஸ்த²ம் அதை²நம் ஸமுபஸ்தி²தா ।
பார்தி²வ ஶ்ரீர் த்³விதீயேவ ஶரத் பங்கஜ லக்ஷணா ॥ 14

(ப-ரை) அத²=பிறகு; லப்³த⁴=ஏற்றுக்கொண்ட அரசின்; ப்ரஶமந=நிலையடல்; ஸ்வஸ்த²ம்=அடங்கப்பெற்ற மனமுடைய; ஏநம்=இந்த ரகுமன்னன்; பங்கஜ=தாமரை மலர்களை; லக்ஷணா=சின்னங்களாகக் கொண்ட; ஶரத்=கூதிர்க்காலம்; த்வதீயா=இரண்டாவதாகிய; பார்தி²வஶ்ரீஃ இவ=அரசப் பூமகள் போல, ஸமுபஸ்தி²தா=அடைந்தது.

(க-ரை) ரகுமன்னன் பகைவர்களின் தொல்லைகளற்றவனாய், நிலைத்த மனமுடையவனாக இருந்தான். அப்போது அவனடைந்த அரசெனும் இலக்குமிக்குச் சின்னமாய தாமரைகள் மலரும்படியான கூதிர்க்காலம் வந்தது. (புணேவுளிவிளேவணி)

ஸ்ரு॥ நிர்வ்ரிஷ்ட லகு³பி⁴ர் மேகை³ː முக்தவர்த்மா ஸு³து³ஸ்ஸஹː ।
ப்ரதாபஸ் தஸ்ய பா⁴நோஶ்ச யுக³பத்³ வ்யாநஶே தி³ஶː ॥ 15

(ப-ரை) நிர்வ்ரிஷ்ட = மிகுதியின்றி பெய்துவிட்டவையாதலால்; லகு³பி⁴ː = இலேசான; மேகை³ː = மேகங்களால்; முக்த = விடப்பட்ட; வர்த்மா = பாதையுடையதாகலின்; ஸு³து³ஸ்ஸஹː = சகிக்கமுடியாத; தஸ்ய = அந்த ரகுமன்னனின்; பா⁴நோஶ்ச = சூரியனுடைய; ப்ரதாபː = வலிமையும் (வெய்யிலும்); யுக³பத் = ஒரே நேரத்தில்; தி³ஶː = திசைகளில்; வ்யாநஶே = பரவிற்று,

(க-ரை) மழை நன்கு பெய்து பூமி ஆகாயப் பாதைகள் மேகங்களால் விடுபட்டமையின் சகிக்க முடியாத வெய்யிலின் வலிமை திக்குகளில் பரவியது. அதாவது நன்றாக வெய்யில் காய்ந்ததற்கும் ரகுமன்னன் போர் தொடுக்க முயற்சி செய்யவும் தொடங்கலாயிற்று. (வாக்கியப் பொருட்காட்சியணி)

ஸ்ரு॥ வார்ஷிகம் ஸஞ்ஜஹார ரேந்த்³ரோ ரகு³ர் ஜைத்ரம் த⁴நுர் த³தெ⁴ள ।
ப்ரஜார்த²ஸாத⁴நே தெளஹி பர்யா யோத்³யத கார்முகௌ ॥ 16

(ப-ரை) இந்³த்ரː = தேவேந்திரன்; வார்ஷிகம் = மழைக்காக; த⁴நுː = வில்லை; ஸஞ்ஜஹார = நிறுத்திக் கொண்டான்; ரகு⁴ː = ரகுமன்னன்; ஜைத்ரம் = வெற்றி தரும்; த⁴நுː = வில்லை; த³தெ⁴ள = ஏந்தினான்; ஹி = எக்காரணத்தால்; தெள = அந்த இந்திரனும் ரகுவும்; ப்ரஜ = மக்களின்; அர்த² = நன்மை; ஸாத⁴நே = பெறுவதில் பர்யாய = முறையே; உத்³யத = தொடுத்த கார்முகௌ = வில்லாளராக ஆனார்கள்.

(க-ரை) தேவேந்திரன் மழை பெயவித்தலின் பொருட்டு எடுத்த வில்லை இறக்கிக் கொண்டான். உடனே ரகுமன்னன் போர்புரிவதற்காக வில்லையேந்தினான். இவ்வாறாக மக்கள் நல்வாழ்விற்கு பயிர்கள் விளையும் பொருட்டு இந்திரனும், பகைவர் தொல்லை நீக்க ரகுமன்னனும் முறையே வில்லேந்தினார்கள். (நிகர்தொடர்முழுதுவமையணி)

ஸ்ரு॥ புண்டரீகாத பத்ரஸ்த²ம் விகஸத்காஶ சாமரः ।
ரிதுர் விடம்பயாமாஸ நபுநː ப்ராப தச்ச்²ரியம் ॥ 17

(ப-ரை) புண்டரீக = வெண்டாமரையே; ஆதபத்ரஃ = குடையாகவுள்ளதும்; விகஸத் = மலர்ந்த; காஸ = நாணல் பூக்களே; சாமரஃ = விஞ்ஜாமரங்களாகவும் கொண்ட; ரிதுஃ = கூதிர்க்காலம்; தம் = அந்த ரகுவை; விடம்பயாமாஸ = பின் தொடர்ந்து; தத் = அந்த ரகுமன்னனுடைய; ஶ்ரியம்புநஃ = ஒளியை; நப்ராப = அடையாமற் போயிற்று.

(க-ரை) கூதிர்காலம் வெண்டாமரையைக் குடையாகவும், நாணல் பூவை விஞ்ஜாமரையாகவும் கொண்டுள்ளதில், ரகு மன்னனைப் போன்று இருந்ததாய் தோன்றிற்று, ஆயினும், அவனுடைய ஆக்கத்தை அடைய முடியாது போயிற்று. (விரியுவமை மற்றும் எதிர்நிலையணி)

சு ॥ ப்ரஸாத² ஸுமுகே¹ தஸ்மிந் சந்த்³ரேச விஶத³ப்ரபே³ ।
தத³ா சக்ஷுஷ்மதாம் ப்ரீதி ராஸீத் ஸமரஸாத்³வயோஃ ॥ 18

(ப-ரை) ப்ரஸாத² = அருளால்; ஸுமுகே¹ = நல்லமுகங் கொண்ட; தஸ்மிந் = அந்த ரகுமன்னனில்; விஶத³ = நிமலமான; ப்ரபே³ = ஒளி பொருந்திய; சந்த்³ரே = சந்திரனில்; த்³வயோஃ = இவ்விருவரிலும்; தத³ா = அக்காலத்தில்; சக்ஷுஷ்மதாம் = கண்களுடையவர்களுக்கு; ப்ரீதிஃ = அன்பு; ஸமரஸா = சமமாக நுகர்வது; ஆஸீத் = ஆயிற்று.

(க-ரை) கருணையுடைய ரகுமன்னனின் முகத்தையும் நிர்மலமான ஒளியுடைய சந்திரனையும் காண்போருக்குச் சமமான அன்பை ஊட்டியது. (அகமலர்ச்சியணி)

சு ॥ ஹம்ஸ ஶ்ரேணீஷு தாராஸு குமுத்³வத்ஸுச வாரிஷு ।
விபூ³தயஸ் ததீ³யாநாம் பர்யஸ்த³ா யஶஸா மிவா ॥ 19

(ப-ரை) ஹம்ஸா = அன்னங்களுடைய; ஶ்ரேணீஷு = வரிசைகளிலும்; தாராஸு = விண்மீன்களிலும்; குமுத்³வத்ஸு = வெண்குவளைகள் உள்ள; வாரிஷுச = தண்ணீரிலும்; ததீ³யா நாம் = அந்த ரகுமன்னனின் சார்பான; யஶஸாம் = புகழின்; விபூதயஃ = செல்வங்கள்; பர்யஸ்த³ா இவ = பரவினவோ என்பதுபோலிருந்தன.

(க-ரை) அன்னங்களின் கூட்டத்திலும், விண்மீன்களிலும், வெண்குவளைகள் உள்ள தண்ணீரிலும், ரகுமன்னனின் மேன்மை பரவியுள்ளதோ என்பதுபோல் தோன்றியது. (குறிநிலையணி)

சு ॥ இக்ஷுச்ச1ாய நிஷாதி2ந்ய꞉ தஸ்ய கே2ாப்துர் கு3ணோத3யம் ।
ஆகுமார க2தே1ாத்2 க3ாதம் ஶாலிகே2ாப்யோ ஜகு2ர்யஶ꞉ ॥ 20

(ப-ரை) இக்ஷுச்ச1ாய=கரும்புகளின் நிழலில்; நிஷாதி2ந்ய꞉= இருக்கும்; ஶாலி=நெற்பயிருக்கு, கே2ாப்ய꞉=காவல் காக்கும் பெண்கள்; கே2ாப்து꞉=காவலான; தஸ்ய=அந்த ரகுமன்னனுடைய கு3ணோத2யம்=குணங்களால் உண்டான; ஆகுமாரம்=வாலைப் பருவம் முதற்கொண்ட; கத1ா=கதைகளின்; உத்2க3ாதம்= தொடக்கம் உள்ள; யஶ꞉=புகழை; ஜகு2꞉=பாடினார்கள்.

(க-ரை) நெற்பயிருக்குக் காவலாக கரும்பின் நிழலில் உட்கார்ந் திருக்கும் பெண்கள்; வாலைப் பருவம் முதற்கொண்டு ரகு மன்னனுக் கிருந்த நற்குணங்களைப்பற்றி பாட்டுகளாகப் பாடிவந்தனர். (தகுதியணி)

சு ॥ ப்ரஸாத2 உத2யாத2ம்ப3꞉ கும்ப3யோநேர் மஹௌஜஸ꞉ ।
ரகே3ா꞉ பரிப3வா ஶங்கி꞉சக்ஷுபே3 த்2விஷதாம் மந꞉ ॥ 21

(ப-ரை) மஹத்=மேலான; ஓஜஸ꞉=ஒளிமிக்க; கும்ப3யோநே꞉= கும்ப முனியெனும் அகத்தியருடைய; உத2யாத்=பிறப்பால்; அம்ப3꞉=நீரானது; ப்ரஸஸாத=நின்மலமாயிற்று; மஹத்=மேலாய; ஓஜஸ꞉=பராக்கிரமமுடைய; ரகே3ா꞉=ரகுமன்னனின்; உத2யாத்= வளர்ச்சியால்; பரிப3வ=மதியாமையை; ஆஶங்கி=ஊகித்துக் கொண்டிருக்கும்; த்2விஷதாம்=பகைவரின்; மன꞉=மனமானது; சக்ஷுபே=தடுமாறியது.

(க-ரை) மிகுந்த ஒளிமிக்க அகத்தியரின் பிறப்பால் தண்ணீ ரானது நின்மல மாயிற்று. மிக்க பராக்கிரமமுடைய ரகுமன்னனின் அரசாட்சியால், பகைவர் மனதில் பேரச்சத்தை உண்டாக்கியது. (பொருட்காட்சியணி)

சு ॥ மதே2ாத2க்2ரா꞉ ககுத்2மந்த꞉ ஸரிதாம் கூலமுத்2ருஜா꞉ ।
லீலாகே1ல மநுப்ராபு꞉ மஹோக்ஷாஸ் தஸ்யவிக்ரமம் ॥ 22

(ப-ரை) மத2 = மதங்கொண்டு; உத2க்ரா = மேலான; ககுத்2மந்த꞉=திமிலை உடைய; மஹோக்ஷா꞉=எருதுகள்; ஸரிதாம் =நதிகளின்; கூலமுத்2ருஜா꞉=கரைகளை சீவிக்கொண்டுள்ள; லீலாகே1லம்=விளையாட்டானது; தஸ்ய = அந்த ரகுமன்ன

னுடைய; விக்ரமம் = பராக்கிரமத்தை; அனுப்ராபு꞉ = ஓட்டினவை (பின் தொடர்ந்தன)

(க-ரை) பருத்த முரிப்புள்ள எருதுகள் யதேச்சையாக பசும் புல்லை மேய்ந்து, மதங்கொண்டு, கொம்புகளால் கரைகளை சீவிக் கொண்டு வேடிக்கை செய்தன. இது ரகுமன்னவனின் பராக்கிரமத்தைக் காட்டுவதாக இருந்தது. (குறிநிலையணி)

சு ॥ ப்ரஸவைஸ்ஸப்த பர்ணாநாம் மத$^{2}$க$^{3}$ந்தி$^{3}$பி$^{3}$ ராஹதா꞉ ।
அஸூயயைவ தந்நாக$^{2}$ா꞉ ஸப்ததை$^{3}$வ ப்ரஸுஸ்ருவு꞉ ॥ 23

(ப-ரை) மத$^{2}$꞉ = மதங்கொண்டதால் கன்னங்களிலிருந்து ஒழுகும் நீரின்; க$^{3}$ந்தி$^{3}$பி$^{3}$ = பரிமளம் போன்ற மணமுடைய; ஸப்த பர்ணாந$^{2}$ாம் = ஏழிலைகளுடைய வாழைச் செடிகளின்; ப்ரஸவை꞉ = புட்பங்களால்; ஆஹதா꞉ = அடியுண்ட; தத் = அந்த ரகுமன்னனுடைய; நாகா꞉ = யானைகள்; அஸூய ஏவ = பிறவற்றின் மீதுண்டாய பொறாமையால் செய்வதுபோல்; ஸப்ததை$^{3}$வ = ஏழு விதங்களாகவே; ப்ரஸுஸ்ருவு꞉ = மதத்தை விட்டன.

(க-ரை) ஏழிலைகளுடைய வாழைச் செடியில் யானையின் மதம் போன்ற வாசனையுடைய பூக்கள் மலர்வதால், தமக்குள்ள இவ்வாசனை இப்பூக்களில் உள்ளதென்ற பொறாமையால், அந்த மன்னனுடைய யானைகள் ஏழுவிதமான — அதாவது; அவற்றின் துதிக்கைத் துளைகள் 2, ஆண்குறி 1, கண்கள் 2, கன்னங்கள் 2 ஆக இவ்வேழு நிலைகளிலிருந்து மதத்தை ஒழுகச் செய்தன. (ஏழிலை வாழை மலர்விடுதலும் யானைக்கு மதம் பிடித்தலும் கூதிர் காலத்தின் இயல்பாகும்). (நிரனிறையணி)

சு॥ ஸரித꞉ குர்வதீ க$^{2}$ாத$^{2}$ர் பத$^{1}$ஶ்சாஶ்யா ந கர்த$^{3}$மாந் ।
யாத்ராயை சோத$^{2}$யாமாஸ தம் ஶக்தே꞉ ப்ரத$^{1}$மம் ஶரத் ॥ 24

(ப-ரை) ஸரித꞉ = நதிகளை; க$^{2}$ாத$^{3}$꞉ = மேடுள்ளவைகளாலும், பத$^{1}$ஶ = வழிகளை; ஆஶ்யாநி = உயர்ந்த; கர்த$^{3}$மாந் = சேறுடையனவாகவும்; குர்வதீ = செய்கின்ற; ஶரத் = கூதிர்காலம்; தம் = அந்த ரகுமன்னனை; ஶக்தே꞉ = உற்சாகத்தைவிட; ப்ரத$^{1}$மம் = முதலிலும்; யாத்ராயை = படையெடுத்துச்செல்ல; சோத$^{2}$யாமாஸ = தூண்டின.

(க-ரை) கூதிர்க்காலம் பிறந்ததும் ஆறுகளில் உள்ள நீர் வற்றி, மேடுகள் உண்டாயின; வழியில் உள்ள சேறு உலர்ந்துவிட்டது. இதனால், வலிமை மிகுந்த ரகுவுக்கு படையெடுத்துச் செல்லத் தூண்டுவதாக விருந்து; உற்சாகமூட்டியது. (ஒன்றற்கொன்றுதவி யணி)

ஸு॥ தஸ்மை ஸம்யக்²கு³தோ வஹ்நிவாஜிநீராஜநா விதெ³ள ।
ப்ரத³க்ஷிணாசிர் வ்யாஜேந ஹஸ்தேந ஜயம் த³தெ³ள ॥ 26

(ப-ரை) வாஜி = குதிரைகளின்; நீராஜநாவிதெ³ள = ஆலத்தி யெடுக்குந் தொழிலில்; ஸம்யக் = நூன் முறைப்படி; ஹுதஃ = ஓமம் செய்யப்பட்ட; வஹ்நிஃ = அக்கினி; ப்ரத³க்ஷிண = பிரதக்ஷிண உருவ முள்ள; அர்சி = கொழுந்துகளின்; வ்யாஜேந = போலியால்; ஹஸ்தேந = கையைப் போல்; தஸ்மை = அந்த ரகுமன்னனுக்கு; ஜயம் = வெற்றியை; த³தெ³ள = கொடுத்தது.

(க-ரை) ரகுமன்னன் குதிரைகளுக்காக நீராஜனம் என்னும் சாந்தி ஓமம் செய்தான். அதில் எழுந்த கொழுந்து வெற்றி கொடுப்பதாய் பிரதக்ஷிணமாகச் சுற்றியது. (கருத்துடையடைகொளி யணி)

ஸு॥ ஸ கு³ப்தமூலப்ரத்யந்தஃ ஶுத்த³பார்ஷ்ணிரயாந்விதஃ ।
ஷட்³வித³ம் ப³லமாதா³ய ப்ரதஸ்தே¹ தி³க்³ஜிகீ³ஷயா ॥ 26

(ப-ரை) கு³ப்த = காக்கப்பட்ட; மூல = தான் வசிக்குமிடம் ப்ரத்யந்தஃ = அரணும்; ஶுத்³த³ = படைகளால் காக்கப்பட்ட; பார்ஷ்ணிஃ = படைகளின் பின்புறமும்; அய = சுபங்களைத் தரவல்ல விதிகளுடன்; அந்விதஃ = கூடிய; ஸஃ = அந்த ரகுமன்னவன்; ஷட்வித³ம் = ஆறுவகையான; ப³லம் = படைகளை; ஆத³ாய = சேர்த்துக் கொண்டு; தி³க் = திக்குகளை; ஜிகீ³ஷயா = வெல்லும் எண்ணத்துடன்; ப்ரதஸ்தே¹ = புறப்பட்டான்.

(க-ரை) ரகுமன்னன் தன் பட்டணத்தையும் அருகில் உள்ள கருவூலத்தையும் அரணையுங் காக்கும்படியானபடைகளை நிறுத்தி, தருந்த தேவப்பிராமணர்கள் ஆசிகளைப் பெற்று, மூலபலம், ஏவலர் களையும் சேர்த்துக்கொண்டு நான்குத் திசைகளிலுள்ள நாடுகளை வெல்லும் எண்ணத்துடன் புறப்பட்டான். (சுறுங்கச்சொல்லலணி)

சு ॥ அவாகிரந் வயோவ்ரித்[2]த[3]ா: தம் லாஜை: பௌர யோஷித: ।
ப்ரிஷதை[2]ர் மந்த[3] ரோத்[2]தூ[3]தை: க்ஷீரோர்மய இவாச்யுதம் ॥ 27

(ப-ரை) வய: வ்ரித்[2]த[3]ா: = வயது முதிர்ந்த பெரியோர்களாகிய; பௌரயோஷித: = பட்டணத்திலுள்ள பெண்மணிகள்; தம் = அவ்வாறு சென்றுக்கொண்டிருக்கும் ரகுமன்னனுக்கு; லாஜை: = பொரிகளைக் கொண்டு; க்ஷீரோர்மய: = பாற்கடல் அலைகள்; மந்த[2]ர = மந்தரமென்னும் மலையால்; உத்[2]த[3]ாதை: = சிதறடிக்கப்பட்ட; ப்ரிஷதை: = திவலைகளுடைய; அச்யுதம் இவ = மகா விட்டுணுபோன்று; அவாகிரந் = தெளித்தனர்.

(க-ரை) ரகு மாமன்னன் அவ்வாறு செல்லும்போது பட்டணத்திலுள்ள கிழவிகள் அவன்மீது அன்பும் சுபமும் அறிவிக்கவல்ல நெற்பொரிகளைத் தூவினார்கள். அது பாற்கடலைக் கடைந்தபோது அதிலிருந்து தெறித்த திவலைகள் திருமாலின்மீது விழுந்தது போலிருந்தது. (தொடர்புயர்வு நவிற்சியணி)

சு ॥ ஸயயௌ ப்ரத்[1]மம் ப்ராசீம் துல்ய: ப்ராசீந ப[2]ர்ஹிஷா ।
அஹித நிலோத்[2]தூ[3]தை: தர்ஜயந் நிவ கேதுபி[3]: ॥ 28

(ப-ரை) ப்ராசீந ப[2]ர்ஹிஷா = தேவேந்திரனுக்கு; துல்ய: = நிகராய; ஸ: = அந்த ரகுமன்னன்; அநில = வாயுவால்; உத்[2]தூ[3]தை: = முன்னால் வீசப்பட்ட; கேதுபி: = கொடிகளால்; அஹிதாந் = பகைவர்களை; தர்ஜயந்நிவ = அச்சப்படச் செய்பவன் போல்; ப்ரத[1]மம் = முதலில்; ப்ராசீம் = கீழ்த்திசை நோக்கி; யயௌ = சென்றான்.

(க-ரை) தேவேந்திரனுக்கு நிகரான ரகுமன்னன் பகைவர்கட்கு அச்சமூட்டும் அனுகூலமான வாயுவால் முன்னுக்குப் பறக்கும் கொடிகளுடன் முதன் முதலில் கீழ்த்திசையை நோக்கிச்சென்றான். (பதப்பொருட்காட்சியணி)

சு ॥ ரஜோபி[3]ஸ் யந்த[2]நோத்[3]தூ[2]தை: க[2]ஜைஶ்ச க[3]நஸந்நிபை[3]: ।
பு[3]வஸ் ஸ்த[1]ல மிவவ்யோம குர்வந் வ்யோமேவ பூ[3]தலம் ॥ 29

(ப-ரை ஸ்யந்த[2]ந = தேர்களிலிருந்து; உத்[2]தூ[3]தை: = சிதறடிக்கப்பட்ட; ரஜோபி[3]: = தூசிகளாலும்; [3]கநஸந்நிபை[3]: = மேகங்களுக்கு நிகரான; கஜைஶ்ச = யானைகளோடும்; வ்யோம = ஆகாயம்; பு[3]வ = பூமியின்; ஸ்தலமிவ = இடம் போன்று; பூ[3]தம் = பூதலத்

தையும்; வ்யோமேவ = ஆகாயத்தையும்; குர்வந்ஸ்ந் = செய்த வனாய்; யயௌ = புறப்பட்டான்.

(க-ரை) அந்த ரகு மன்னனின் தேர்களுடைய தூசிகள் வானிற்படர்ந்து, ஆகாயம் பூமியைப்போல் தோற்றமளிக்க வல்ல தாய் எங்கும் பரவியதாலும் புவிமீது யானைகளின் வண்ணத்தாலும் நடையாலும், பரிமாணத்தாலும் முகில்களுக்கு நிகராகப் போய்க் கொண்டிருப்பதால் பூமி ஆகாயம் போலும், ஆகாயமே பூமியாகவும், தோற்றமளிக்கப் புறப்பட்டுச் சென்றான்.

ஸு॥ ப்ரதாபோஅக்2ரே ததஶ் ஶப்2த3: பராக2ஸ் தத2நந்தரம்।
யயௌ பஶ்சாத்2 ரத1ாதீதி சதுஷ்கந்தே2வ ஸாசமூ:॥ 30

(ப-ரை) அக்2ரே = முன்னால்; ப்ரதாப: = பெருமையும்; தத: = பின்னால்; ரத1ஆதி = தேர்கள் முதலியன உள்ள நால்வகைப் படைகள்; இதி = இவ்விதமாக; ஸா = அந்த; சமூ: = படைகள்; சது: = நான்காய; ஸ்கந்தே2வவ = வியூகம் (வகுப்பு) உண்டாயவை களாய்; யயௌ = சென்றன.

(க-ரை) முன்னால் பிரதாபமும் பின்னால் படைகளின் ஆரவார மும், அவர்கள் பின் படைகளின் பாதங்களிலிருந்து பறக்கும் தூசி களும், அதன்பின் துணைப்படையும், இவ்வாறாக நான்கு வியூகமும் வகுக்கப்பட்டு. ரகுயின் படைகள் சென்றன. வினைமுதல் விளக்கணி)

ஸு॥ மருப்ரிஷ்ட1ாந் யுத2ம்ப3ாம்ஸி நாவ்யா: ஸுப்ரதரா நதீ2:।
விபிநாநி ப்ரகாஶாநி ஶக்திமத்வாச் சகார ஸ:॥ 31

(ப-ரை) ஸ: = அந்த ரகுமன்னன்; ஶக்திமத்வாத் = திறமை யுள்ளவனாதலால்; மருப்ரிஷ்டாநி = கானல்களை; உத3ம்பாம்ஸி = தண்ணீர் உடையவதாகவும்; நாவ்யா: = கலங்களால்; நதி2: = ஆறு களை; ஸுப்3ரதரா: = எளிதில் கடக்கவல்லதாய்ச் செய்தும்; விபி நாபி = காடுகளை வெட்டிப் பாதைகளும்; சகார = செய்தனர்.

(க-ரை) ரகுமன்னன் திறமையுள்ளவனாதலால், நீரில்லா விடங்களில் நீருண்டாக்கியும், கலங்களால் கடக்கவல்ல ஆறுகளை எளிதில் கடக்கக் கூடியவைகளாகவும், காடுகளை வெட்டி இடப் பரப்பும் உண்டாக்கினான். (வீறுகோளணி)

ஸ॥ ஸ ஸேநாம் மஹதீம்கர்ஷந் பூர்வ ஸாக³ரக³ாமிநீம் ।
ப²பௌ²ள ஹரஜடாப்³ரஷ்டாம் க³ங்க³ாமிவ ப³கீ²ரத¹ஃ ॥ 32

(ப-ரை) பூர்வ ஸாக³ரக³ாமிநீம் = கீழ்த்திசைக் கடலை நோக்கிச் சென்றுக் கொண்டிருக்கும்; மஹதீம் = பெரிதாகிய; ஸேநாம் = படையை; க³ர்ஷந் = நடத்தும்; ஸஃ = ரகுமன்னன்; ஹரஜடாப்³ரஷ்டாம் = சிவனுடைய சடைமுடியிலிருந்து வீழ்ந்த; க³ங்க³ாம் = கங்கையை; கர்ஷந் = கொண்டு செல்லும்; ப³கீ²ரதஃஇவ = பகீரதனைப் போல்; ப²பௌ²ள = மிளிர்ந்தான்.

(க-ரை) ரகுமன்னன் கீழ்த்திசைக்குப் படைகளைச் செலுத்துவது எவணிருந்ததென்றால், பகீரதன், சிவனுடைய சடாமுடியிலிருந்து வரும் கங்கையைக் கீழ்க்கடல் நோக்கிச் செலுத்தியது போலிருந்தது. அதாவது மிகப்பரவி இருந்தது. (புகழ்பொருளுவமையணி)

ஸ॥ த்யாஜிதைஃ ப¹லமுத்³க¹ாதஃ ப³க்²நைர்ச ப³ஹுஷ³தா³ங்ரிபைஃ ।
தஸ்யாஸீ து²ல்ப²ணோ மார்க²ஃ பாத²பைரிவ த²ந்திநஃ ॥ 33

(ப-ரை) ப¹லம் = ஊதியம்; த்யாஜிதைஃ = விடுவித்ததும்; உத்²க¹ாதை = பதவி நீக்கம் செய்யப்பட்டும்; ப²ஹுஷ³ = பல வழிகளில்; ப³க்²நைர்ச = வெல்லப்பட்டு; ந்ரிபைஃ = அரசர்களால்; பாத²பைஃ = மரங்களை; த²ந்திநஃ = யானைகள் முறிப்பதுபோல்; தஸ்ய = அந்த ரகுமன்னன்; மார்க²ஃ = வழி; உல்ப²ணஃ = பிரகாசமாவது; ஆஸீத் = ஆயிற்று,

(க-ரை) யானைகளால் மரங்கள் ஆட்டப்பட்டும், வேருடன் பிடுங்கப்பட்டும், உடைக்கவும் செய்யப்பட்டு, எவ்வாறு வழியானது விளங்குகிறதோ அவ்வாறு ரகுமன்னனும், பகைவரிடமிருந்து கப்பங்கள் பெற்றும் ஒடுக்குதல் முதலியவற்றால் அவன் திக்விஜயம் விளங்கிற்று. (விரிவுவமையணி)

ஸ॥ பௌரஸ்த்யாநேவ மாக்ராமம் ஸ்தாம் ஸ்தாந் ஜநபத²ாஞ்ஜயீ ।
ப்ராப தாளீவநச்யாம முபகண்ட¹ம் மஹோத²தே³ஃ ॥ 34

(ப-ரை) ஜயீ = ஜயசீலனான ரகுமன்னன்; ஏவம் = மேலே கூறியவாறு; பௌரஸ்த்யாந் = கீழ்த்திசையில் தோன்றிய; தாம்ஸ்தாந் = அந்தந்த; ஜநபத²ாந் = நாடுகளை; ஆக்ரமந்ஸந் = பற்றிக்கொள்

வனாய்; தாளீ=பனைமரங்கள்; வந=காடுகளால்; ஶ்யாமம்=கருமையான; மஹோத³தே⁴:=மாக்கடலின்; உபகண்ட¹ம்=அருகில்; ப்ராப=அடைந்தான்.

(க-ரை) இவ்வாறு ரகுமன்னன் பகைவரை வென்றுக்கொண்டே, பனங்காடடர்ந்த கீழ்க்கடல் அருகில் சேர்ந்தான். (மென்மேலுயர்ச்சியணி)

ஸு॥ அநம்ராணாம் ஸமுத்³த⁴ர்துஃ தஸ்மாத் ஸிந்து⁴ர யாதிவ ।
ஆத்மா ஸம்ரக்ஷிதைஃ ஸிம்ஹைஃ வ்ரித்திமா ஶ்ரித்ய வைதஸம் ॥ 35

(ப-ரை) அநம்ராணாம்=அடங்காதவர்களை; ஸமுத்³த⁴ர்துஃ=நாசஞ்செய்யும்; தஸ்மாத்=அந்த ரகுமன்னனால்; ஸித்து⁴ரயாதிவ=சிந்து ஆற்றின் வேகம் போன்று; ஸிம்ஹைஃ=சிங்கநாட்டரசர்கள்; வைதஸம்=வேதஸம் என்னும் ஓர்வகை கொடியின்; வ்ரித்திம்=தொழிலைப் போல்; ஆஶ்ரித்ய=அண்டி; ஆத்மா=உடலை; ஸம்ரக்ஷிதஃ=காப்பாற்றிக்கொண்டான்.

(க-ரை) அடங்காதவர்களை நாசஞ்செய்யும் ரகுமன்னனுக்குப் பயந்து சிங்கள நாட்டு மன்னர்கள் ஆற்றுப் பெருக்குக்குவளைந்து கொடுக்கும் கொடியைப் போல் அடங்கியவர்களாய்த் தங்களைக் காப்பாற்றிக் கொண்டார்கள் (காரணமாலையணி)

ஸு॥ வங்கானுத்க¹ாய தரஸாநேதா நௌஸாத³நோத்³யதாந் ।
நிசக¹ாந ஜயஸ்தம்ப³ாந் க³ங்க³ா ஸ்ரோதோந்தரேஷுச ॥ 36

(ப-ரை) நேதா=நாயகனான; ஸஃ=அந்த ரகுமன்னன்; நௌ=கலங்களின்; ஸாத³ந=உதவியால்; உத்³யதாந்=ஆயத்தமான; வங்காத்=வங்கநாட்டரசர்களை; தரஸா=வலிமையால்; உத்க¹ாய=நாசமாக்கி; க³ங்க³ா=கங்கையாற்றின்; ஸ்ரோத=வெள்ளத்திற்கு; அந்தரேஷு=இடையில் உள்ள நிலப்பகுதியை; ஜயஸ்தம்ப³ாந்=வெற்றிக் கொடியை; நிசக¹ாந=நட்டான்.

(க-ரை) ரகுமன்னன் கலங்களின் உதவியால் தாண்டி, வங்க நாட்டரசர்களை நாசமாக்கி, கங்கையாற்றுக்கு இடையில் உள்ள நிலப்பகுதியில் தன் வெற்றிக்கொடியை நாட்டினான். (வீறுகோளணி)

சு॥ ஆபாத²பத்³ம ப்ரணதாம் கலமா இவதே ரகு³ம் ।
ப²லைஸ் ஸம்வர்தயா மாஸுருத்க²ாத ப்ரதிரோபிதாஃ ॥ 37

(ப-ரை) ஆபாத² பத்³ம = பாதகமலங்கள் வரை; ப்ரணதாஃ = வணங்குவோராதலால்; உத்க¹ாத = முன்பு அதிகாரத்திலிருந்து நீக்கப்பட்டு; ப்ரதிரோஹிதஃ = மறுபடியும் அளிக்கப்பட்டவர் ஆகையால்; தே = அந்த வங்கத்தரசர்கள்! ஆபாத² பத்³ம = அடிகள்வரை ப்ரணதாஃ = வணங்கிய; (அவர்களை) உத்க¹ாத = முன்பு களையப் பட்டு; ப்ரதிரோபிதாஃ = பிறகு நடப்பட்ட; கலமா இவ = பயிர்களைப் போல்; ரகு³ம் = ரகுமன்னனுக்கு; ப²லைஃ = பொருள்களாலும்; தானியங்களாலும்; ஸுவர்த³யாமாஸ = நன்கு வளரச் செய்தனர்

(க-ரை) விதை விதைத்து முளைத்து நாற்றான பின்பு அவற்றைக் களைந்து மறுபடியும் நடப்பட்டுள்ள நெற்பயிர் கதிர்கள் விடும்போது வணங்கும் உருவத்தைப் போல்; அவற்றின் அடிவரை வளைந்து பயிரிட்டவனுக்குப் பலனாகக் கொடுத்து அவனை மகிழ்விப்பது போல், முதலில் பதவிநீக்கம் செய்து மறுபடியும் கொடுத்து விடப்பட்ட நாடுகளை உடைய வங்க நாட்டரசர் ரகுமன்னன் பாதங்கள் வரை தலை வளைத்து வணங்கிய பொருள்கள் கொடுத்து மகிழச் செய்தனர். (நிரலுறுத்துக்காட்டுவமையணி)

சு ஸ தீர்த்வா கபிஶாம் ஸைந்யைஃ ப³த்³த⁴த்³விரத³ ஸேதுபி⁴ஃ ।
உத்கலைர்த³ர்சிதர்சிதபத²ஃ களிங்க³ாபி⁴முகோ²ா யயௌ ॥ 38

(ப-ரை) ஸஃ = அந்த ரகுமகாராஜா; ப³த்³த⁴ = கட்டப்பட்ட; த்³விரத³ = யானைகளென்னும்; ஸேதுபி⁴ஃ = பாலமுள்ள; ஸைந்யைஃ = படைகளால்; கபிஶாம் = கபிசமென்னும் ஆற்றை; தீர்த்வா = தாண்டி; உத்கலைஃ = உத்கல நாட்டரசர்களால்; த³ர்ஶிதஃ = காட்டப்பட்ட; பத²ஸ்ஸந் = வழியை நோக்கி; யயௌ = புறப்பட்டுச் சென்றான்.

(க-ரை) அந்த ரகுமன்னன் யானைகளை பாலமாக நிற்க வைத்து அதன் மீது தன் சேனைகளுடன் கபிசா நதியைக்கடந்து, உத்கள நாட்டரசர்கள் காட்டிய பாதைகளில் நடந்து களிங்க நாட்டிற்குச் சென்றான். (நிகழ்வினவிற்சியணி)

சு॥ ஸ ப்ரதாம் மஹேந்த்³ரஸ்ய மூர்த்⁴நி தீக்ஷ்ணம் ந்யவேஶயத் ।
அங்குஶம் த்³விரத³ஸ்யேவ யந்தா க³ம்பீ⁴ர வேதி³நஃ ॥ 39

(ப-ரை) ஸ꞉ = அந்த ரகுமன்ன; மஹேந்த்³ரஸ்ய = மகேந்திர மலையின்; மூர்த்³நி = சிரத்தில்; தீக்ஷ்ணம் = சகிக்க முடியாத; ப்ரதாபம் = வலிமையை; யந்தா = சாரதி (ஓட்டுநர்) கம்பீ³ரவேதி³ந꞉ = கம்பீரவேதி என்னும்; த்³விரத³ஸ்ய = யானையின்; மூர்த்³நி = சிரத்தில்; தீக்ஷ்ணாம் = கூரான; அங்குஶமிவ = அங்குசம் போன்று; ந்யவேஶயத் = குத்தினான்.

(க-ரை) தோல் துளைக்கப்பட்டு, ரத்தம் மாமிசம் கொட்டினாலும், பொருட்படுத்தாத மிகுந்த மதமுடைய கம்பீரவேதி என்னும் யானையின் சிரத்தின் மீது யானைப்பாகன் கூரான அங்குசத்தால் குற்றினதுபோல் ரகுமன்னன் ஏழு குலமலைகளுக்கு அரசனான மகேந்திரமலை மீது தன் பராக்கிரமத்தை விரிவுபடுத்தினான். (பெருமையணி)

சு ॥ ப்ரதி ஜக்³ராஹ காளிங்க³꞉ தமஸ்த்ரைர் க³ஜஸாத³ந꞉ ।
பக்ஷச்சே¹ தோ³த்³யதம் ஶக்ரம் ஶிலா வர்ஷீவ பர்வத꞉ ॥ 40

(ப-ரை) க³ஜஸாத³ந꞉ = யானைகள் துணையாகக் கொண்ட; காளிங்க³꞉ = களிங்க நாட்டரசன்; அஸ்த்ரை꞉ = அம்புகளால்; தம் = அந்த ரகுமன்னனை; பக்ஷச்சே¹த = இறகுகளை வெட்டுவதில்; உத்³யதம் = முயன்ற; ஶக்ரம் = தேவேந்திரனை; ஶிலாவர்ஷி = கற்களை மழைபோல் வீசும்; பர்வத இவ = மலையைப் போல்; ப்ரதி ஜக்³ராஹ = எதிர்க்கொண்டான்.

(க-ரை) பெரும்பான்மையான யானைகள் படைபலமாகக் கொண்ட களிங்க மன்னன், இறகுகளை வெட்டுவதற்கு முயன்ற தேவேந்திரன்மீது மலைகள் ஆலங்கட்டி (கல்மழைப்) பொழிந்தது போல் ரகுமன்னன்மீது ஆயுதங்களை விடுத்தான். (நிகர்தொடர் முழுதுவமையணி)

சு ॥ த்³விஷாம் விஷஹ்ய காகுத்ஸ꞉ தத்ர நாராச து³ர்தி³நம் ।
ஸந்மங்கள ஸ்நாதஇவ ப்ரதிபேதே³ ஜயஶ்ரியம் ॥ 41

(ப-ரை) காகுத்ஸ்த꞉ = ரகுமன்னன் என்னும், தத்ர = மகேந்திர மலைமீது; த்³விஷாம் = பகைவர்களுடைய; நாராச = பாணங்களின்; து³ர்தி³நம் = மழையை; விஷஹ்ய = சகித்து; ஸத்மங்கள = சாத்திர விதிமுறைப்படி மங்களமான; ஸ்நாத இவ = குளியலடைந்தவன்போல்; ஜயஶ்ரியம் = வெற்றித் திருமகளை; ப்ரதிபேதே³ = அடைந்தான்.

(க-ரை) ககுத்ஸ்தனுடைய மறபில் பிறந்த ரகுமன்னன் என்னும் மகேந்திர மலைமீது களிங்கனால் எய்யப்பட்ட பாணங்க ளென்னும் மழையில் சகிப்புத் தன்மையுடன் புனித நீராடுவதுபோல் நின்றிருந்தான். (பொருட்காட்சியணி)

 சு॥ தாம்பூ²லீநாம் தளைஸ் தத்ர ரசிதாபாந பூ⁸மய: ।
நாரிகேளாஸவம் யோத⁸: ஶாத்ரவம் வபுர் யஶ: ॥ 42

(ப-ரை) தத்ர = அம்மகேந்திர மலையில்; யோத⁸ா: = போர் வீரர்கள்; ரசிதா = செய்த; ஆபாநபூ⁸யஸ்ஸந்த: = அருந்தத்தக்க இடமுடையவர்களாய்; நாரிகேளாஸவம் = தேங்காயிலிருந்து செய் தெடுத்த ஆஸவத்தை; தம்பூலிநாம் த²ளை: = வெற்றிலைகளால்; ஶாத்ரவம் = பகைவர்களின்; யஶோவ = புகழைப் போல; பபு: = அருந்தினார்கள்.

(க-ரை) ரகுமன்னனுடைய படை வீரர்கள் மனம் போன போக்கில்; அம்மலை மீதுள்ள தென்னங்கள்ளை வெற்றிலைகளில் ஏந்திக்கொண்டு பகைவரின் புகழைக் குடிப்பது போல் அருந்தி னார்கள். (உருவகவுயர்வுநவிற்சியணி)

சு॥ க்³ரிஹீத ப்ரதிமுக்தஸ்ய ஸத⁸ர்ம விஜயீத்ரிப: ।
ஶ்ரியம் மஹேந்த்²ர நாத¹ஸ்ய ஜஹார நது மேதி⁸நீம் ॥ 43

(ப-ரை) த⁸ர்மவிஜயீ = அறம் பொருட்டு ஜயசீலனாகிய; ஸந்ரிப: = அந்த ரகுமன்னவன்; க்³ரிஹீத = ஏற்று; ப்ரதிமுக்தஸ்ய = விட்டுவிடப்பட்ட; மஹேந்த²ர நாத¹ஸ்ய = களிங்க நாட்டரசனு டைய; ஶ்ரியம் = சம்பத்துக்களை; நஜஹார = கவர்ந்தானில்லை.

(க-ரை) வெற்றியே இயல்பாகக் கொண்ட ரகுமன்னன் கடமைக்காக முதலில் வெற்றி பெற்றாலும் பிறகு சரணடைந்தவர் களைப் பொருத்தருளுந் தன்மையுடையவனாதலால் மன்னிக்கப் பட்ட களிங்கமன்னனுடைய பொருள் மட்டும் பெற்றுக்கொண்டு அவனது நாடடை அவனுக்கே விட்டுவிட்டான். (தன்குணமிகை யணி)

சு॥ ததோ வேலாதடே நைவ ப¹லவத் பூக²மாலிநா ।
அக²ஸ்த்ய சரிதா மாஶ மநாஶாஸ்ய ஜயோ யயௌ ॥ 44

(ப-ரை) தத: = வெற்றிக்குப் பிறகு; ஸ: = அந்த ரகுமன்னன்; ப¹லவத் = காய்ந்துள்ள; பூக² = கமுகு மரங்களின்; மாலிநா = வரிசை

களுடைய; வேலா தடநேவ = கடலோர இடத்திலேயே; அகஸ்த்ய சரிதாம் = அகத்திய முனிவரால் அடைந்த; ஆ மாம் = தென் திசையை நோக்கி; அநாஸாஸ்ய = வேண்டப்படாத; ஜயஸ்ஸந் = வெற்றி கண்டவனாய்; யயௌ = புறப்பட்டான்.

(க-ரை) தோல்வி அம்சமில்லாத ரகுமன்னன் கீழ்த் திசையி லிருந்து கனிந்த கமுகு மரங்களின் வரிசைகளுடைய கடலோர வழியே அகஸ்தியர் இருக்கும் தென்திசைக்குப் புறப்பட்டான். (தன் குணமிகையணி)

சு॥ ஸ ஸைந்ய பரிபோ³கே³ந க³ஜதா³ந ஸுக³ந்தி³நா ।
காவேரீம் ஸரிதாம்பத்யுः ஶங்கநீயா மிவாகரோத் ॥ 45

(ப-ரை) ஸः = அந்த ரகுமன்னன்; க³ஜதா³ந = யானைகளின் மத நீரால்; ஸுக³ந்தி³நா = நறுமணமுடைய; ஸைந்ய பரிபோ³கே³ந = படைகளில் உள்ளவர்களின் நுகர்தலால்; காவேரீம் = காவேரி யாற்றை; ஸரிதாம்பத்யுः = நதிகளின் பதியாகிய கடலோனுக்கு; ஶங்கநீயாமிவ = விசுவாசமற்றவள்போல்; ஆகரோத் = செய்தான்.

(க-ரை) ரகு மன்னனின் படையிலுள்ளவர் காவேரியில் குளிப் பதனாலும் அவர்கள் பூசிக்கொண்ட சந்தனத்தின் நறுமணமும்; யானைகள் தம் சிரங்களைக் கழுவிக்கொள்வதால் அவற்றின் மத வாசனையும் நதிகளின் பதியாகிய சமுத்திரன் காவேரிக்குப் பிறபுருடர்களின் சேர்க்கை உண்டாயிற்றோவென ஐயப்படும்படியாக கடல் வரையிலும் பரவியது. இதனால் அளவற்ற காலாட்படை, யானைப்படைகள் முதலியவை ரகுவுக்கு இருந்ததென குறிக்கப் படுகிறது, (உருவகவுயர்வு நவிற்சியணி)

சு ॥ ப³லை ரத்யுஷிதாஸ் தஸ்ய விஜிகீ³ஷோர் க³தாத்⁴வநः ।
மரீசோத்³ ப்⁴ராந்த ஹாரீதாः மலயாத்³ரே ருபத்யகாः ॥ 46

(ப-ரை) விஜிகீ³ஷோः = வெற்றிகாண விரும்பும்; க³தஅத்⁴வநः = கடந்துவிட்ட வழியுடைய; (அல்லது-தீர்ந்துவிட்ட வழிநடை களைப்புடைய) தஸ்ய = அந்த ரகு மன்னனுடைய; ப³லைः = படை களால்; மரீச = மிளகு செடிகளில்; உத்³ப்⁴ராந்த = வாழும்; ஹாரீதாः = பச்சைநிறப் பறவைகளுடைய; மலயாத்³ரேः = மலய மலையின்; உபத்யகாः = அருகில் உள்ள நிலங்களை; அத்⁴யுஷிதாः = அடைந் தான்.

(க-ரை) ரகுமன்னன் படைகளுடன் வெகுதூரம் நடந்து பச்சைப்பறவைகள் நிறைந்துள்ள மிளகுச் செடிகள் உள்ள காடுகள் நிறைந்த மலயாசலத்தின் சாரிவில் விடுதி செய்தான். (புணர் நிலையணி)

சு ॥ ஸஸம்ஸு: அச்வ க்ஷுண்ணாநாம் ஏலாநா முத்பதிஷ்ணவை: ।
துல்ய க3ந்தி4ஷு மத்தேப4 கடேஷு ப1லரேணவ: ॥ 47

(ப-ரை) அச்வ: க்ஷுண்ணா நாம் = குதிரைகளால் மிதியுண்ட; ஏலாநாம் = ஏலத்தின் கொடிகளிலிருந்து; உத்பதிஷ்ணவை: = பிறந்த; ப1லரேணவ: = காய்களின் தூசிகள்; துல்ய க3ந்தி4ஷு = சமமான வாசனையுடைய; மத்தேப4கடேஷு = மதயானைகளின் தலைகளில்; ஸஸம்ஸு: = ஒட்டிக்கொண்டன.

(க-ரை) குதிரைகளால் மிதியுண்ட ஏலக்காய்களின் தூசிகள் உயரப் பறந்து, அதே மணமுள்ள மதயானைகளின் தலைகளில் ஒட்டிக்கொண்டன. (தற்குறிப்பணி)

சு ॥ பே4ாகி2 வேஷ்டந மார்கே3ஷு சந்த3நாநாம் ஸமர்பிதம் ।
நாஸ்ரஸத் கரிணாம் க்3ரைவம் த்ரிபதீ2ச் சே1தி3நாமபி ॥ 48

(ப-ரை) சந்த3நாநாம் = சந்தன மரங்களுக்கு; பே4ாகிவேஷ்டநமார்கே3ஷு = பாம்புகள் சுற்றிக்கொண்ட வழித்தடங்களில்; ஸமர்பிதம் = வைக்கப்பட்ட; த்ரிபதீ2 = கால்கட்டுகளை; சே1தி3நாமபி = அறுத்துக் கொண்டுள்ளவை ஆயினும்; கரிணாம் = யானைகளுடைய; க்3ரைவம் = கழுத்துக்குக் கட்டியுள்ள கயிறுகள்; நாஸ்ரஸத் = நழுவாமல் போயிற்று.

(க-ரை) சந்தன மரங்கட்குப் பாம்புகள் சுற்றிக் கொள்வதால் ஏற்பட்ட காடி (பள்ளங்)களில் மத யானைகளை கழுத்துக் கொலுசுகளால் கட்ட, அந்தக் கட்டு, கால் கொலுசுகளையும் அறுத்தெறியும் அவ்வேழங்களின் ஆர்ப்பாட்டத்திற்கும் கூட நழுவவில்லை, (உயர்வுநவிற்சியணி)

சு॥ திசி மந்த3யதே தேஜோ த3க்ஷிணஸ்யாம் ரவேரபி ।
தஸ்யாமேவ ரகே4ா: பாண்ட்3யா: ப்ரதாபம் நவிஷேஹிரே ॥ 49

(பரை) தக்ஷிணஸ்யாம் தி3சி = தென் திசையில்; ரவேரபி = சூரியனுடைய; தேஜ: = ஒளியானது; மந்த3ாயதே = குறைகிறது;

தஸ்யாம் ஏவ = அதே தென் திசையில்; பாண்டியமன்னர்கள்; ரகோ²ர: = ரகுமன்னனுடைய; ப்ரதாபம் - வீறின்; நவிஷேஹிரே = பொறுக்காது போயினர்.

(க ரை) தென் திசையில் தக்ஷிணாயன காலமானதால் சூரியன் பாண்டிய மன்னர்களுக்கு அஞ்சியவன் போன்று குறைந்த ஒளியுடையவனாகிறான்; அந்தப் பாண்டி மன்னர்கள் ரகுமன்னனுடைய வீறுக்கு சகிக்க முடியாமற் போனார்கள். (உயர்வுநவிற்சி யணி)

சு॥ தாம்ரபர்ணீ ஸமேதஸ்ய முக்தாஸாரம் மஹோத³தே⁴: ।
தே நிபத்ய த³து³ஸ் தஸ்மை யஶஸ் ஸ்வமிவ ஸஞ்சிதம் ॥ 50

(ப-ரை) தே = அந்தப் பாண்டிமன்னர்கள்; தாம்ரபர்ணீ = ஸமேதஸ்ய = தாமிரபர்ணி ஆறுடன் கூடிய; மஹோத³தே⁴: = தென் மாக்கடலினின்று; ஸஞ்சிதம் = சம்பாதித்த; முக்தா ஸாரம் = முத்துக்களில் மேலானவற்றையும்; ஸ்வம் = தாமாக; ஸஞ்சிதம் = தேடிய; யஶஸ்வம் இவ = புகழ் போன்று; தஸ்மை = அந்த ரகுமன்னனுக்கு; நிபத்ய = வணங்கியவர்களாய்; த³து³: = கொடுத்தான்.

(க-ரை) பாண்டிய மன்னர்கள் தாமிரபருணி ஆறு கடலில் கலக்குமிடத்தில் தேடியெடுத்த நல்லமுத்துக்களை ரகுமன்னனுக்கு வணங்கி செலுத்தி, அவர்களின் புகழை ஒப்படைப்பது போல் கொடுத்தனர். (தற்குறிப்பணி)

சு॥ ஸ நிர்விஶ்ய யதாகாமம் தடே ஷ்வாலீட³ சந்த³நௌ ।
ஸ்தநாநிவ தி³ஶஸ் தஸ்யா: ஶைலௌ மலய த³ர்து³ரௌ ॥ 51

அஸஹ்ய விக்ரமஸ்ஸஹ்யம் தூ³ராந்த முக்தமுதந்வதா ।
நிதம்ப³மிவ மேதி³ந்யாஸ் ஸ்ரஸ்தாம் ஶுகமலங்க³யத் ॥ 52

(ப-ரை) அஸஹ்யவிக்ரம: = சகிக்கமுடியாத பராக்கிரமமுடைய ஸ: = அந்த ரகுமன்னன்; தடேஷு = கரையோரத்திலும் அதன் பக்கங்களிலும்; ஆலீட³சந்த³நௌ = பரந்துள்ள சந்தன மரங்களும்; தஸ்யா: = அந்த; தி³ஶ: = தென் திசையின்; ஸ்தநாவிவ ஸ்தி¹தௌ = கொங்கைகளோவெனத் தோற்றமளிக்கும்; மலயத³ர்து³ரௌ = மலயம் தர்துரம் என்ற பெயர்களுடைய; ஶைலௌ = மலைகளை; யத¹ாகாமம் = விரும்பியவாறு; நிர்விஶ்ய = நுகர்ந்து; உத³ந்வதா = சமுத்திரனால்; தூ³ராந்முக்தம் = தொலைவில் விடப்பட்ட; ஸ்ரஸ்த

= நழுவிய; அம்ப³ரம்=ஆடையுடைய; மேதி³ந்யா꞉=பூமியின்; நிதம்ப³ம் இவஸ்தி²தம்=இடுப்பின் கீழ்ப்பாகமோ என்பது போன்று; ஸஹ்யம்=சஹ்ய மலையையும்; அலங்க⁴யத்=தாண்டினான்.

(க-ரை) கரையோரம் சந்தனமரங்கள் அடர்ந்து வளர்ந்துள்ள மலயம் தர்துரம் என்னும் இரண்டு மலைகளும் தென்திசையெனும் மங்கையின் சந்தனம் பூசிய கொங்கைகளோ வென தன் விருப்பம்போல் நுகர்ந்துவிட்டு, பொருக்க முடியாத வீரமுடைய ரகு மன்னன் கடலை, தொலைவில் விட்ட ஸஹ்ய பருவதத்தை, பூதேவியின் ஆடை நழுவிய பிருட்டம் போல் தாண்டிச் சென்றனர். (மிகையொற்றுமையுருவகவணி)

௬ ॥ தஸ்யாநீகைர் விஸர்பத்³பி⁴꞉ அபராந்த ஜயோத்³யதை꞉ ।
ராமாஸ் ரோத் ஸாரிதோऽப்³யாஸீத் ஸஹ்யலக்³ந இவார்ணவ꞉॥ 53

(ப-ரை) அபராந்த=மேற்கு நாடுகளில்; ஜய=வெற்றியில்; உத்³யதை꞉=முயன்று; விஸர்பித்³பி⁴꞉=சென்றுக் கொண்டிருக்கும்; தஸ்ய = அந்த ரகுமன்னனுடைய; அநீகை꞉ = படைகளால்; அர்ணவ꞉=சமுத்திரன்; ராம=பரசுராமருடைய; அஸ்த்ர=ஆயுதங்களால்; உத்ஸாரிதோ꞉பி=விரட்டப்பட்டவை ஆயினும்; ஸஹ்ய= ஸஹ்ய பருவதமெனும் மலையை; லக்³ந இவ=பொருந்தியவன் போல்; ஆஸீத்=ஆயிற்று.

(க-ரை) மேலை நாடுகளை வெல்ல சஹ்யபருவதத்திற்கும் தென் கடலுக்கும் இடையே போகும் பரந்த ரகு மன்னனுடைய படைகள்; முன்பு பரசுராமர் பிராமணருக்குத் தானங்கொடுத்த நிலத்தைவிட அன்னியமான பூமியாய் ஏற்படுத்திக்கொள்ள, தன்னுடைய கோடாரியால் சஹ்ய பருவத்தின் சற்று தொலைவிலிருந்து அப்புறப்படுத்திய சமுத்திரத்துடன் மறுபடியும் சஹ்யபருவதத்தைக் கலந்துக்கொண்டவாறு இரண்டாம் கடல் தென்பட்டது. (தொடர்புயர்வு நவிற்சியணி)

௫ ॥ பயோத்ஸ்ரிஷ்ட விபூஷாணம் தேந கேரள யோஷிதாம் ।
அலகேஷு சமுரேணு꞉ ஸூர்யப்ரதி நிதீ⁴க்ரித꞉ ॥ 54

(ப-ரை) தேந=அந்த ரகுசன்னனுடைய; ப⁴ய=அச்சத்தால்; உத்ஸ்ரிஷ்ட=களையப்பட்ட; விபூஷாணாம்=ஆபரணங்களுடைய; கேரளயோஷிதாம்=கேரள நாட்டுப் பெண்களின்; அலகேஷு=

நெற்றியிலுள் மயிர்களில்; சமூரேணுஃ=படைகளின் தூசிகள்; சூர்ணப் ரதிநிதீ³க்ரிதஃ=குங்குமம் முதலிய தூள்களுக்கு உவமானமாகச் செய்யப்பட்டது.

(க-ரை) ரகு மன்னனுடைய பயத்தால் கேரளத்தரசப் பெண்கள் நகைகளைக் களைந்துவிட்டு ஓடத்தொடங்கினர். அப்போது ரகுவின் படைகளுடைய பாதங்களின் தூசியானது அவர்களின் கேசங்களுக்கு ஒட்டிக்கொண்டு குங்குமம் போல தோன்றியது (விரிபுவமையணி)

சு ॥ முரளா மாருதோத்³தூ³த மக³மத் கைதகம் ரஜஃ ।
தத்³யோத³ வாரவாணாநா மயத்ந படவாஸதாம் ॥ 55

(ப-ரை) முரளா=முரளா நதியுடைய; மாருத=வாயுவால்; உத்³தூ³த=சிதற டிக்கப்பட்ட; கைதகம்=தாழம் பூவைச் சார்ந்த; ரஜஃ=மகரந்தப்பொடி; தத்³யோத³ஃ= அந்தப் படைவீரர்களின்; வாரவாணாநாம்=கவசங்களுக்கு; அயத்ந படவாஸதாம்=முயலாமலே பூசப்பட்ட நறுமண முள்ளவையாக; அக³மத்=ஆயிற்று.

(க-ரை) வழியில் முரளா நதியிலிருந்து வீசிய குளிர்காற்றினால் அப்பக்கங்களில் செடிகளிலுள்ள தாழம்பூக்களின் மகரந்தப்பொடி ரகுவின் படைவீரர்களுடைய கவசங்களின்மீது படிந்து, முயலாமலே சந்தனத்தூள் தெளித்தாற்போலிருந்தது. (வேற்றுப் பொருள் வைப்பணி)

சு ॥ அப்³யபூ³யத வாஹாநாம சரதாம் க³ாத்ர ஶிஞ்ஜிதைஃ ।
வரமபி³ஃ பவநோத்தூ³த ராஜ³தாளீ வநத்³வநிஃ ॥ 56

(ப-ரை) சரதாம்=போய்க்கொண்டுள்ள; வாஹநாம்=குதிரைகளின்; க³ாத்ரஶிஞ்ஜிதைஃ=உடல்களில் ஒலிக்கச் செய்யும்; வர்மபி³ஃ=கவசங்களால்; பவ நோத்³தூ³த=காற்றாலசைந்த; ராஜதாளீ=தாளிப் பனை; வந=தோட்டங்களின்; த்³வநிஃ=ஓசை; அப்³யபூ³யத=புறக்கணிக்கப்பட்டது.

(க-ரை) குதிரைகள் நடந்துக்கொண்டிருக்கையில், அவற்றின் கவசங்களுடைய ஓசை, காற்றுக்கு அசையும் தாளிப்பனை தோப்பிலிருந்து வரும் ஒலியையும் மிஞ்சியது. அதாவது இக்கவசத்தின் ஒலியில், இதுபோன்ற தாளிப்பனை ஓசையும் காதிற்கெட்டியது. (விரியுவமையணி)

சு ॥ க1ர்ஜூரீ ஸ்கந்த2நத்2த3நாநாம் மதோ2த்2கா2ர ஸுக2ந்தி3ஷு।
கடேஷு கரிணாம்பேதுঃ புந்நாகே2ப்3யঃ ஶிலீமுக1ாঃ ॥ 57

(ப-ரை) க1ர்ஜூரீஸ்கந்த்3 = ஈச்சமரத்தின் அடிக்கு; நத்2த3நாம் = கட்டப்பட்ட; கரிணாம் = யானைகளின்; மத2 உத்2கா2ர = மதநீர் ஒழுகுதலால்; ஸுக2ந்தி3ஷு = நறுமணமுடைய கன்னங்கட்காக; ஶிலீமுக1ாঃ = வண்டுகள்; புந்நாகே2ப்3யঃ பேதுঃ = புன்னாகமரங்களை விட்டுவிட்டன.

(க-ரை) ஈச்சமரத்தடிகளுக்குக் கட்டப்பட்ட யானைகளின் கன்னங்களில் ஒழுகும் நறுமணமுள்ள மதஜலத்திற்காக வண்டுகள் புன்னை மரங்களை விட்டுவிட்டன. அதாவது புன்னைப் பூக்களை விட்டுவிட்டு யானைகளின் மீது சாய்ந்தன (மொய்த்தன), (முறையிலுயர்வு நவிற்சியணி)

சு॥ அவகாஶம் கிலோத2ந்வாந் ராமா யப்3யர்தி1தோ த2தெ2ள ।
அபராந்த மஹீபால வ்யாஜேந ரக3வேகரம் ॥ 58

(ப-ரை) உத2ந்வாந் = சமுத்திரன்; ராமாய = பரசுராமனுக்காக; அப்3யர்தி1தஸ்ஸந் = இரந்தவனாய்; அவகாஶம் = இடம்; த2தெ2ளகில = கொடுத்தானன்றோ; ரக3வே து = ரகுமன்னனுக்காகவென்றாலோ; அபராந்த மஹீபால = மேற்றிசை அரசர்களின்; வ்யாஜேந = வீண்காரணத்திற்கு; கரம் = காணிக்கையை; த2தெ2ள = கொடுத்தான்.

(க-ரை) வருணன் முன்பு பரசுராமனால் இரக்கப்பட்டவனாய் சற்று இடம் கொடுத்தான். தற்போது ரகுமன்னனுக்கென்றாலோ மேற்றிசை மன்னர்களென்னும் சாக்கில் காணிக்கை அளித்தான். அதாவது பரசுராமனைக் காட்டிலும் ரகு மேம்பட்டவன் என்பது பொருள். (தற்குறிப்பணி)

சு॥ மத்தேப3 ரத2நோத்கீர்ண வ்யக்த விக்ரம லக்ஷணம்।
த்ரிகூடமேவ தத்ரோச்சைர் ஜ்யஸ்தம்ப3ம்சகாரஸঃ ॥ 59

(ப-ரை) தத்ர = அந்த மேற்குத் திசையில்; ஸঃ = ரகுமன்னன்; மத்த இப3 ரத2ந = மத யானைகளின் தந்தங்களால் உண்டான; காயங்கள் என்னும்; வ்யக்த = நன்கு காணப்படும்; விக்ரமலக்ஷணம் = வீரத்தின் அறிகுறிகள் உள்ள; த்ரிகூடமேவ = திரிகூடமலையையே

உச்சை꞉=உயர்ந்த; ஜயஸ்தம்ப²ம்=வெற்றிக் கொடியாக; சகார=செய்தான்.

(க-ரை) ரகு மன்னனுடைய மதயானைகள் அவற்றின் தந்தங்களால் திரிகூடமலையைத் தாக்கி, அவனுடைய வெற்றிக்கு அறிகுறியாக எழுத்துக்கள் போன்ற கீறல்களை உண்டாக்கின. இதனால் உயர்ந்த அந்த மலை அவனுடைய வெற்றிக் கொடிபோல் தோற்றமளித்தது. (சிறப்பணி மற்றும் தற்குறிப்பணி)

சு॥ பாரஸீகாம்ஸ்ததோ ஜேதும் ப்ரதஸ்தே[1] ஸ்த[1]லவர்த்மநா ।
இந்த்[2]ரியாக்[1]யாநிவ ரிபூம் ஸ்தத்வஜ்ஞாநேந ஸம்யமீ ॥ 60

(ப-ரை) பிறகு. ஸ꞉=ரகுமன்னன்; ஸம்யமீ=யோகீசுவரன்; தத்வஜ்ஞாநேந=மெய்யறிவால்: இந்த்[2]ரியாக்[1]யாந்=புலன்களென்னும் பெயர் பெற்றுள்ள; ரிபூந் இவ=பகைவர்களைம் போல்; ஸ்தலவர்த்மநா=கடலோரமுள்ள வழியில்; ப்ரதஸ்தே[1]=புறப்பட்டான்.

(க-ரை) பிறகு, தவசியானவன் மெய்யறிவால் புலன்களென்னும் பகைவரை வெல்வது போன்று ரகு மன்னன் பாரசீக நாட்டு அரசர்களை வெல்லும்பொருட்டு கடலோரமுள்ள வழியில் புறப்பட்டு சென்றான். (நிகரெடுத்துக்காட்டுவமையணி)

சு ॥ யவநீ முக[1]பத்[2]மா நாம் ஸேஹ மது[3]மத[2]ம் நஸ꞉ ।
ப[2]ாலாதப மிவாப்[2]ஜாநா மகால ஜலதே[2]ாத[2]ய꞉ ॥ 61

(ப-ரை) ஸ꞉=அந்த ரகுமன்னன்; யவநீ=யவந நாட்டுப் பெண்களின்; முக[1]பத்[2]மாநாம்=தாமரைக்கு நிகரான முகங்களில்; ம[3]துமத[2]ம்=மதுவாலுண்டாகிய வெறியை; குறித்தக் காலமல்லாது மாறான காலத்தில்; ஜலத[2]=மேகங்களின்; உத[2]ய꞉=உண்டாதல் போன்று; அப்[2]ஜாநாம்=தாமரையின்; ப[2]ால ஆதபம் இவ=இளம் பரிதியைப் போல்; நஸேஹே=தாங்கமுடியாது போயிற்று.

(க-ரை) மழையிலாக் காலத்தில் மேகங்கள் உண்டாவது போலும், காலையில் பூக்கும் தாமரைப் பூக்களை ஒளிக்கச் செய்யும் வெய்யிலை மறைக்கும் தன்மையுடைய தாமரை முகங்கொண்டுள்ள பாரசீக நாட்டுப் பெண்கள் அவர்களது ஆடவர்களுடன் மதுவருந்தி மதங்கொண்டிருப்பதை ரகுமன்னன் கண்டு சகிக்காமற்போனான். அதாவது அவர்களின் உயர்வைக் கண்டு அவ்வாடவர்களுடன்

பெரும்போர் புரிய ரகுமன்னன் முயன்றான். (சொற்பொருட்பின் வருவிளக்கணி)

ஸு ॥ ஸங்க்²ராமஸ் துமுலஸ் தஸய பாஶ்சாத்யை ரஶ்வஸாத³னைঃ ।
ஶார்ங்க² கூஜித விஜ்ஞேய ப்ரதியோதே³ ரஜஸ்ய பூ³த் ॥ 62

(ப-ரை) தஸ்ய = அந்த ரகுமன்னனுக்கு; அஶ்வ ஸாத³னைঃ = புரவிகளே துணையாயுள்ள; பாஶ்சாத்யைঃ = மேநாட்டு மிலேச்சர் களுடன்; ஶார்ங்க² கூஜித = விற்களின் நாண் ஒலிகளால்; விஜ்ஞேய = அறிவிக்கப்பட்ட; ப்ரதியோதே³ = பகைவீரர்கள் உள்ள; ரஜஸி = தூசில்; துமுலঃ = பெரும் போர்; அபூ³த் = உண்டாயிற்று.

(க-ரை) அளவிலாக் குதிரைப் படைகள் உடைய துருக்கியர் களால் எழுப்பப்பட்ட புழுதியில் வில்லின் நாண்கயிற்றொலியால் மட்டும் அறியவல்ல பகைவரின் படைகளுடன் ரகுமன்னனுக்குப் பெரும் போர் உண்டாயிற்று. (மிகுதினவிற்சியணி)

ஸு ॥ ப³ல்லாபவர்ஜிதை ஸ்தேஷாம் ஶிரோபி⁴ஶ்ஶ்மஶ்ருலைர் மஹீம் ।
தஸ்தார ஸரக²ா வ்யாப்தைঃ ஸக்ஷௌத்³ர படலைரிவ ॥ 63

(ப-ரை) ஸঃ = அந்த ரகுமன்னன்; ப³ல்ல = அம்புகளால்; அபவர்ஜிதைঃ = வெட்டப்பட்ட; ஶ்மஶ்ருலைঃ = வளர்ந்த தாடி களுடைய; தேஷாம் = அம்மிலேச்சர்களுடைய; ஶிரோபி⁴ঃ = தலைகள்; ஸரக⁴ாঃ = தேன் வண்டுகளால்; வ்யாப்தைঃ = விரிவடைந்த; க்ஷௌத்³ரபடலை ரிவ = தேன்கூடுகள் போன்று; மஹீம் = பூ⁴மியை; தஸ்தார = மறைத்தன.

(க-ரை) ரகுமன்னன் அம்புகளால் துருக்கியர்களின் கழுத்துக் களை வெட்டிச் சாய்க்க, அத்தலைகள் நீண்டதாடிகள் உடையவை ஆதலால், தேன் வண்டுகள் கட்டும் தேன்கூடுகள் போன்றிருந்தன. அவ்வாறு வெட்டுண்ட தலைகள் பூமியைக் காணமுடியாது மறைத் தன. (உவமை மற்றும் உயர்வுநவிற்சியணி)

ஸு॥ அபநீத ஶிரஸ்த்ராணாঃ ஶேஷாஸ்தம் ஶரணம்யயுঃ ।
ப்ரணிபாத ப்ரதீகாரঃ ஸம்ரம்போ⁴ ஹி மஹாத்மாநாம் ॥ 64

(ப-ரை) ஶேஷா = மீதமுள்ளவர்கள்; அபநீத = நீக்கப்பட்ட; ஶிரஸ்த்ராணாஸ் ஸந்தঃ = தொப்பிகள் உடையவர்களாய்; தம் = ரகுமன்னனை; ஶரணம் யயுঃ = சரணடைந்தனர்; தத²ா ஹி =

அஂஃதுசரி; மஹாத்மநாம்=மகான்களுடைய; க்ஷோபி⁸=கலக்கம்; ப்ரணிபாத=வணங்குதலை; ப்ரதீகார=மாற்றுத் தொழிலுடையது.

(க-ரை) செத்தவர்கள் போக மிகுந்தவர்கள் தொப்பிகளைக் கழற்றிக் கொண்டு, ரகுமன்னனை சரணடைந்தனர். மகான்கள் பகைவர்களை செறுக்கையடக்குவதில் நோக்கமுடையவர்களே யன்றி, அவர்கள் அடங்கிய பின் கொல்லவேண்டுமென்ற சினம் கொள்வார்கள் அல்லர். (பெருமையணி)

சு॥ விநயந்தேஸ்ம தத்²யோதா⁴ மது²பி⁴ர் விஜயஶ்ரமம் ।
ஆஸ்தீர்ணாஜிந ரத்நாஸு த்³ராக்ஷாவலய பூ⁴மிஷு ॥ 65

(ப-ரை) தத்யோதா⁴ = அந்த ரகு⁴வின் படைவீரர்கள்; ஆஸ்தீர்ண=பரப்பிய; அஜிநரத்நாஸு=மேலாய சருமங்கள் மீது; த்³ராக்ஷாவலய பூமிஷு=திராட்சைப் பந்தல்கள் உடைய இடங்களில் அமர்ந்து; மது⁴பி=மதுபானங்களால்; விஜயஶ்ரமம்=போரில் உண்டான களைப்பை விநயந்தேஸ்ம=போக்கிக் கொண்டனர்.

(க-ரை) அந்த ரகுமன்னனின் போர்வீரர்கள் திராட்சைப் பந்தல்களின் கீழ், தோல்களால் இருக்கைகள் அமர்த்திக் கொண்டு, உட்கார்ந்து, திராட்சை சாராயம் அருந்தி போரில் ஏற்பட்ட களைப்பைப் போக்கிக் கொண்டனர். (வினைமுதல் விளக்கணி).

சு॥ ததஃ ப்ரதஸ்தே¹ கௌபே³ரீம் ப⁴ாஸ்வாநிவ ரகு⁴ர் தி³ஶம் ।
ஶரைருஸ்த்ரை ரிவோதீ³ச்யாந் உ³த்த⁴ரிஷ்யந் ரஸாநிவ ॥ 66

(ப-ரை) ததஃ=பிறகு; ரகு⁴=ரகுமன்னவன்; ப⁴ாஸ்வாநிவ=சூரியன்; உஸ்த்ரை ரிவ=கதிர்கள் உண்டாக்குதலால்; ரஸாநிவ=தண்ணீரை; உத்³த⁴ரிஷ்யந்=ஒழித்துவிடுவது போல்; ஶரை=பாணங்களால் பகைவரை ஒழித்துவிட; கௌபே³ரீம்=குபேரனுடைய; தி³ஶம்=வடதிசையை நோக்கி; ப்ரதஸ்தே¹=புறப்பட்டான்.

(க-ரை) பிறகு, ரகுமன்னன், சூரியன் தன் கதிர்களால், தண்ணீரை ஒழிக்க உத்தராயணத்தில் நடப்பதுபோல், தன் பாணங்களால், வடநாட்டிலுள்ள பகைவர்களை வெல்லும் நோக்கத்துடன் வடதிசையை நோக்கிச் சென்றான். (விரிவுவமையணி).

ஸ ॥ விநீதாத்²வ ஶ்ரமா ஸ்தஸ்ய ஸிந்து⁸தீர விவேஷ்டநை: ।
த²து⁸வுர் வாஜிந ஸ்கந்த⁸ாந் லக்²ந குங்கும கேஸராந் ॥ 67

(ப-ரை) ஸிந்து⁸தீர = சிந்துநதிக் கரையில்; விவேஷ்டநை: = புரளுவதால்; விநீத = போக்கிக் கொண்ட; அத்⁸வ ஶ்ரமா: = வழி நடத்தலால் உண்டான களைப்புடைய; தஸ்ய = அந்த ரகுமன்னனின்; வாஜிந: = புரவிகள்; லக்²ந = பொருந்திய; குங்கும = குங்குமப் பூக்களின்; கேஸராந் = மகரந்தப் பொடிகளுடைய; ஸ்கந்த⁸ாந் = கழுத்துக்களை; த²து⁸வு: = அசைத்தன.

(க-ரை) சிந்துவென்னும் மேற்கு நோக்கிப்பாயும் ஆற்றங் கரையில் ரகுமன்னனுடைய புரவிகள் வழிநடந்த சிரமத்தைப் போக்கிக்கொள்ள புரண்டு அவற்றின் உடலை அசைத்தன. அப்போது அவற்றின் கழுத்துக்களில் ஒட்டிக்கொண்ட குங்குமப் பூக்களும் அவற்றின் மகரந்தப் பொடியும் உதிர்ந்தன. (அதாவது-அவ்விடம் அவ்வளவு அதிகமான குங்குமப் பூக்கள் இருந்தன.) (மிகுதிநவிற்சியணி)

ஸ ॥ தத்ர ஹூணாவ ரோத⁸நாம் ப⁸ர்த்ருஷு வ்யக்த விக்ரமம் ।
கபோல பாடலாதே²ஶி ப²பூ⁸வ ரகு⁸வேஷ்டிதம் ॥ 68

(ப-ரை) தத்ர = அந்த வடக்குத் திசையில்; பர்த்ருஷு = பதிகளிடம்; வ்யக்த = நன்கு தோன்றும்; விக்ரமம் = வலிமையுடைய; ரகு² சேஷ்டிதம் = ரகுவின் செய்கைகள்; ஹூண = ஹூண நாட்டரசர்களின்; அவரோத⁸நாம் = அந்தப்புரத்துப் பெண்களின்; கபோல = கன்னங்களில்; பாடல = சிவப்பிற்கு; ஆதே²ஶி = உபதேசிக்கத்தக்கது; ப²பூ⁸வ = ஆயிற்று.

(க-ரை) ரகு மன்னன் வடநாட்டரசர்களைக் கொன்றான். அவனுடைய திக்விஜயத்தில் அம்மன்னர்களின் மனைவிமார் துயரத்தால் கன்னங்களில் அடித்துக்கொண்டதால் அவை கறுகிப் போயிற்று. (ஒன்றற்கொன்றுதவியணி)

ஸ ॥ காம்பே³ாஜாஸ் ஸமரேஸோடு⁹ம் தஸ்ய வீர்ய மநீஶ்வரா:।
க²ஜாலாந பரிக்லிஷ்டை: அங்கோலைஸ் ஸார்த²ம் மாநதா: ॥ 69

(ப-ரை) காம்பே³ாஜா: = காம்போஜ நாட்டரசர்கள்; ஸமரே = போரில்; தஸ்ய = அந்த மன்னவன் ரகுவின்; வீர்யம் = பராக்கிரமத்தை; ஸோடு⁹ம் = பொறுக்க; அநீஶ்வராஸ் ஸந்த: = முடியாத

வர்களாய்; கஜ=யானைகளின்; ஆலாந = கால்கட்டுகளால்; அங்கோலை; அவிஞ்சி மரத்தினுடன்; ஆநதா: = வணங்கினார்கள்.

(க-ரை) காம்போஜ மன்னர்கள் ரகுமன்னனுடைய வலிமைக்கு நிற்க முடியாமல், அங்கோல விருட்சங்கள் அவற்றிற்குக் கட்டபட்ட யானைகளின் கால் சங்கிலியால் உரசப்பட்டு வளைந்து விடுவது போல் அவனுக்குக் கீழ்ப்படிந்தனர். (உவமையணி)

சு॥ தேஷாம் ஸத²ஶ்வ பூ⁸யிஷ்ட¹ா: துங்க² த்³ரவிண ராஶய: ।
உபத³ா விவிஶுஶ்ஶ ஶ்வந் நோத்ஸேகா: கோஸலேஶ்வரம் ॥ 70

(ப-ரை) தேஷாம் = காம்பேஜ மன்னர்களுடைய; ஸத்அஶ்வ = நன்கு பழகிய குதிரைகளால்; பூ⁸யிஷ்ட¹ா: = அதிகமான; துங்க² = உன்னதமான; த்³ரவிண = பொன்களின்; ராஶய = ராசிகள் என்னும்; உப³த³ா: = காணிக்கைகள்; ஶஶ்வத் = அடிக்கடி; கோஸலேஶ்வரம் = ரகுமன்னனை; விவிஶு: = அடைந்தன; உத்ஸே . கா: = செருக்கு; நவிவிஶு: = அடையாது போயிற்று.

(க-ரை) அந்த காம்போஜ மன்னர்கள்ரகுரஜாவுக்கு உயர்ந்த வகுப்பைச் சார்ந்த புரவிகளையும், பொன்களையும் காணிக்கை யாக அளித்தனர். ஆயினும் இதனால், ரகுமன்னன் செருக்கடைய வில்லை,

சு॥ ததோ கௌ²ளரீ கு³ரும்ஶைல மாருரோ ஹாஶ்வ ஸாத³ந: ।
வர்தயந்நிவ தத்கூடா நுத்³தூ³தைர் த⁹ாது ரேணுபி⁸: ॥ 71

(ப ரை) தத: = பிறகு; அஶ்வஸாத³ந: = புரவிகளே கருவியாக உள்ள ரகுமன்னன்; கௌ²ளரீகு²ரும் = பார்வதியின் தந்தையாகிய; ஶைலம் = இமய மலையை; உத்³தூ³தை: = குளம்புகளால் சிதறடிக் கப்பட்ட; த⁹ாதுரேணுபி⁸: = காவி முதலிய தாதுக்களின் தூசியால்; தத்கூடாந் = அவ்விமய மலையின் சிகரங்களை; வர்தயந் இவ = வளர்ப்பவன் போன்று; ஆருரோஹ = ஏறினான்.

(க-ரை) ரகுமன்னவனுடைய புரவிகள் இமயமலையைக் கடந்தன. அப்புரவிகள் நடந்துச் செல்கையில் காவி முதலிய தாது பொருள்களின் தூசிகளால் மலை வளர்ந்து வருவது போல் இருந்தது. (நிகழ்வினவிற்சியணி)

ஸ॥ ஶஶம்ய துல்ய ஸத்வாநாம் ஸைந்ய கோ³ாஷேஃப்ய ஸம்ப்³ரமம் ।
கு³ஹாஶயாநாம் ஸிம்ஹாநாம் பரிவ்ரித்யாவலோகநம் ॥ 72

(ப-ரை) துல்யஸத்வா நாம்=சமமான வலிமை கொண்ட! கு²ஹஆஶயாநாம்=குகைகளில் படுத்திருந்த; ஸிம்ஹாநாம்= சிங்கங்களின்; பரிவ்ரித்ய=பின்னால் திரும்பி; அவலோகநம்= பார்த்தல்; ஸைந்யகோ³ஷோஃபி=படைகளின் ஓசைகளிலும்; அஸம்ப்³ரமம்=உட்கலக்கத்தின் விரதத்தை;ஶஶம்ய=சொல்லியது.

(க-ரை) ரகுமன்னனுடைய படைகள் கோலாகலத்துடன் நடந்துச் செல்கையில் அருகில் உள்ள குகைகளில் படுத்திருந்த சிங்கங்கள் அவர்களுடன் சம வலிமை உடையவை ஆதலால் அஞ்சி ஓடிவிடாமல் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தன. அதனால் படைவீரர்களும் சமவலிமையுடையவர்களென்று தெரிகிறது. (விளக் கணி)

ஸ॥ பூர்ஜேஷு மர்மரீபூ³தாஃ கீசக த்³வநி ஹேதவஃ ।
க³ங்க³ாஶீ கரிணோ மார்கே³ மருதஸ்தம் ஸிஷேவிரே ॥ 73

(ப-ரை) பூ³ர்ஜேஷு=புஜபத்திர விருட்சங்களில்; மர்மரீ பூ³தாஃ=உண்டாகும் சலசலப்பான ஒலி; கீசக=மூங்கில்களின்; த்³வநி=ஒலிகட்கு; ஹேதவஃ=காரணமாகிய; க³ங்க³ாஶீகரணஃ= கங்கையாற்றின் திவலைகளுடைய; மருதஃ=காற்றுகள்; மார்கே³= வழியில்; தம்=அந்த ரகுமன்னனை; ஸிஷேவிரே=சேவித்தன.

(க-ரை) அப்பொழுது வழியில் வீசிக்கொண்டிருந்த கங்கை யாற்றிலிருந்துவரும் மெல்லிய காற்றினால் புஜபத்திர விருட்சங்களின் இலைகள் அசைந்து சலசலப்பாய் ஒலி உண்டாயிற்று. மூங்கில்கள் இனிமையான ஒலியை உண்டாக்கின. கங்கையாற்றிலிருந்து திவலைகள் பறந்து வந்தன. இப்படிப்பட்ட மெல்லிய குளிர்காற்று கள் ரகுமன்னனை சேவிப்பதாக காட்சியளித்தன. (கலவையணி)

ஸ ॥ விஶஶ்ரமுர் நமேரூணாம் ச²ாயா ஸ்வத்²யாஸ்ய ஸைநிகாஃ ।
த்³ரிஷதே³ா வாஸிதோத்ஸங்க³ா நிஷண்ண ம்ரிக³நாபி³பி³ஃ ॥ 74

(ப-ரை) ஸைநிகாஃ=படைவீரர்கள்; நமேருணாம்=புன்னை மரங்களின்; ச²ாயாஸ=நிழல்களில்; நிஷண்ண=உட்கார்ந்திருந்த; ம்ரிக³=கஸ்தூரிமான்களுடைய; நாபி³பி³ஃ=கஸ்தூரியால்; வாஸித =வாசனை உண்டாக்கப்பட்ட; உத்ஸங்க³ாஃ=அருகிலுள்ள இடங்

களில்; த்[2]ரிஷத[2]ঃ=கற்களை; அத்[2]யாஸ்ய=ஏறினவர்களாய்; விஶஶ்ரமঃ=ஓய்வு பெற்றனர்.

(க-ரை) ரகுவின் படைவீரர்கள் புன்னைமரத்தின் நிழல்களில் உள்ள பாறைகள் மீது உட்கார்ந்து ஓய்வு பெற்றார்கள். அந்தப் பாறைகள் முன்பு கஸ்தூரி மான்களால் வாடை உண்டாக்கப் பட்டிருந்ததால் கஸ்தூரி மணத்துடன் கூடினவைகளாய் இருந்தன. (விதியணி)

ஸு ॥ ஸரளாஸக்த மாதங்க[3] க்[2]ரைவேய ஸ்பு[1]ரித த்[2]விஷঃ ।
ஆஸந் நோஷத[2]யோ நேதுர் நக்த மஸ்நேஹ தீ[3]பிகாঃ ॥ 75

(ப-ரை) ஸரள ஆஸக்த= சரள (தேவதார) மென்னும் மரங்களுக்குக் கட்டப்பட்டிருந்த; மாதங்க[3]=யானைகளின்; க்[2]ரைவேய கழுத்துச்சங்கிலிகளில்; ஸ்பு[1]ரித=காணப்பட்ட; (பிரதிபலித்த); த்[2]விஷத[2]ঃ=ஒலிகள் உள்ள; ஓஷத[2]யঃ=கொடிகள்; நேதுঃ=நாயகனான ரகுமன்னனுக்கு; நக்தம்=இரவில்; அஸ்நேஹ=எண்ணெயில்லாத; தீபிகாঃ=விளக்குகள்; ஆஸந்=ஆயிற்று.

(க-ரை) சரள தேவதாரமெனும் மரங்களுக்குக் கட்டப் பட்டிருந்த யானைகள் கழுத்துச் சங்கிலியில் பிரதிபலித்த கொடிகளின் ஒளியானது ரகுமன்னனுக்கு எண்ணெயற்ற விளக்குகள் போலிருந்தன. (மிகுதி னவிற்சியணி)

ஸு ॥ தஸ்யோத்ஸ்ரிஷ்ட நிவாஸேஷு கண்ட[1]ரஜ்ஜு க்ஷதத்வசঃ ।
க[2]ஜவர்ஷ்ம கிராதேப்[3]ய ஶஶம்ஸுர் தே[2]வத[2]ாரவঃ ॥ 76

(ப-ரை) தஸ்ய=அந்த ரகுமன்னனுடைய; உத்ஸ்ரிஷ்ட= விடப்பட்ட; நிவாஸேஷு=படைகளினிருப்பிடத்தில்; கண்ட[1]ரஜ்ஜு =கழுத்துச் சங்கிலிகளால்; க்ஷத=உரசிக்கொண்ட; த்வசঃ= பட்டையுடைய; தே[2]வத[2]ாரவঃ=தேவதாரு மரங்கள்; கிராதேப்[3]யঃ =வேட்டுவர்களுக்காக; க[2]ஜவர்ஷ்ம=யானைகளின் உயரளவை; ஶஶம்ஸுঃ=அறிவித்தன.

(க-ரை) ரகுமன்னன் விடுத்த விடுதிகளில் யானைகள் கழுத்துச் சங்கிலிகளின் உரசலால் தேவதாரு மரப்பட்டைகள் நசுங்கியுள்ள உயரத்தைக் கண்ட வேடுவர்கள் அந்த யானைகள் இவ்வளவு உயரமானவைகளா என்று மிக வியந்தனர். (மிகைவுயர்வு நவிற்சியணி)

ஸு ॥ தத்ர ஜந்யம் ரகோ²ர் கோ²ரம் பார்வதீயைர் க²ணைரபூ⁸த் ।
நாராச க்ஷேபணீயாஸ்ம நிஷ்பேஷோத் பதிதாநலம் ॥ 77

(ப-ரை) தத்ர = அந்த இமய மலையில்; ரகோ⁸ஃ = ரகுமன்னனுக்கு; பார்வதீயை = மலையிலுண்டாகிய; க²ணைஃ = உற்சவர் முதலிய இனத்தவர்களுடன்; நாராச = அம்புகளாலும்; க்ஷேபணீய = பிண்டிவாலமென்னும் ஆயுதத்தாலும்; அஸ்ம = கற்களாலும்; நிஷ்பேஷ = தாக்குதலால்; உத்பதித = எழுந்த; அநலம் = நெருப்பு உடையதும்; கோ²ரம் = ஆகிய பயங்கரமான; ஜந்யம் = போர்; அபூ⁸த் = பிறந்தது (மூண்டது).

(க-ரை) ரகுமன்னனுக்கும் இமயமலையில் வாழ்ந்து வந்த உற்சவர் என்னும் மலைஜாதியினருக்கும் (எழுவகையினத்தவர்கட்கும்) அம்புகள், பிண்டிவாலம், கற்கள் முதலிய ஆயுதங்களால் கடுமையான போர் உண்டாயிற்று. அவற்றின் தாக்குதலால் அக்கினியின் பொறிகள் பறந்தன. அப்போர் மிகப் பயங்கரமாயிருந்தது. (பொருட்காட்சியணி)

ஸு ॥ ஶரை ருத்ஸவ ஸங்கேதாம் ஸ க்ருத்வா விரதோத்ஸவாந் ।
ஜயோத²ஹரணம் பா²ஹுவோர் க²பயா மாஸ கிந்நராந் ॥ 78

(ப-) ஸஃ = அந்த ரகுமன்னன்; ஶரைஃ = அம்புகளால்; உத்ஸவ ஸங்கேதாந் = உத்ஸவரெனும் எழுவகை கணத்தவர்களை; விரத உத்ஸவாந் = விடுபட்ட ஊக்கமுள்ளவர்களாக; க்ருத்வா = செய்து; கிந்நராந் = கின்னரர்களை; ப⁸ாஹுவேஃ = தங்கள் சொந்த கைகளால்; ஜயோதாஹரணம் = வெற்றியைக் குறிக்கும்; ஸங்கேதங்களை பிரபந்தமாக்கி; க²பயாமாஸ = பாடினார்கள்.

(க-ரை) ரகுமன்னன் அந்த உத்சவரென்னும் எழுவகையினத்தவரையும் உற்சாகமிழக்கச் செய்தனன். அதாவது அவர்களை வென்றான். இந்த வெற்றியை கின்னரர் என்னும் தேவகணத்தவர்கள் ஒரு பிரபந்தமாக்கி, பாட்டுகளாய்ப் பாடினார்கள். (மிகுதினவிற்சியணி)

ஸு ॥ பரஸ்பரேண விஜ்ஞாத ஸ்தேஷ்வு பாயந பாணிஷு ।
ராஜ்ஞா ஹிமவத்ஸாரோ ராஜ்ஞஸ்ஸாரோ ஹிமாத்²ரிணா ॥ 79

(ப-ரை) தேஷ = அந்த உத்ஸவஸ்ரெனும் எழுவகை சாதியின ரும்; உபாயந = காணிக்கைகளை; பாணிஷுஸத்ஸு = கைகளில் ஏந்தி; ராஜ்ஞா = ரகுமன்னனாலும்; ஹிமயதஃ = இமயமலையின்; ஸாரஃ = செல்வத்துருவாய அம்சமும்; ஹிமாத்³ரிணா = இமயமலை; ராஜ்ஞா = ரகுமன்னனின்; ஸாரஃ = வலிமை உருவாய் நிலைத்த அம்சமும்; பரஸ்பரே = ஒன்றுக்கொன்று; விஜ்ஞாத = அறியப் பட்டது.

(க-ரை) அந்த மலைவாசிகள் ரகுமன்னனுக்கு காணிக்கை களை அளித்தனர். இதனால், அம்மலையில் மதிப்பற்ற பொருட் கள் உள்ளதை ரகுவும் எப்போதும் தோல்வி அறியாத அம்மலை சாதியினர்கள் தோற்றத்தால் ரகுமன்னனுடைய வலிமையை இமவா னும் ஒருவர்க்கொருவர் அறிந்துகொண்டனர். (ஒன்றற்கொன்றுத வியணி)

சு ॥ தத்ராக்ஷோப⁴யம் யஶோ ராஶிம் நிவேஶ்யா வருரோஹஸஃ ।
பௌலஸ்த்ய துலிதஸ்யாத்³ரே ராதத³ாந இவஹ்ரியம் ॥ 80

(ப-ரை) ஸஃ = அந்த ரகுமன்னன்; தத்ர = அந்த இமயமலை யில்; க்ஷோப்³யம் = அநாவசியம் செய்ய முடியாத; யஶோராஶிம் = புகழை; நிவேஶ்ய = வைத்து; பௌலஸ்த்ய = இராவணனால்; துலிதஸ்ய = அசைக்கப்பட்ட; அத்³ரேஃ = கைலாய மலைக்கு; ஹ்ரியம் = வெட்கத்தை; அத³த³ாந இவ = உண்டாக்குவது போல்; அவருரோஹ = இறங்கினான்.

(க-ரை) ரகுமன்னன் இமயமலையில் தன் புகழைப் பரவச் செய்து கைலாயத்தை முன்பு இராவணனால் எடுக்கப்பட்டதால் அதை வெல்லுதல் கௌரவமன்றென அதற்கு வெட்கமுண்டாக்கு கின்றானோவென அதனருகில் போகவில்லை. (கருத்துடையடை யணி)

சு ॥ சகம்பே தீர்ண லௌஹித்யே தஸ்மிந் ப்ராக்³ஜோதி ஷேஶ்வரஃ ।
உத்³க³ஜா லாநதாம் ப்ராபைஸ் ஸஹகாலா க³ரு த்³ருமைஃ ॥ 81

(ப-ரை) தஸ்மிந் = ரகுமன்னன்; தீர்ண = தாண்டப்பட்ட; லௌஹித்யேஸதி = லௌஹிதமெனும் ஆறுடையவனாய்; ப்ராக்³ ஜோதிஷேஶ்வரஃ = பிராக் ஜோதிடமெனும் நாட்டின் அரசன்; தத் = அந்த ரகுமகாராஜனின்; க³ஜ = யானைகளின்; அலாநதாம் = கால்

கட்டுகளை; ப்ராப்தைஃ = அடைந்த; காலாக²ருத்²ருமைஸ்ஸஹ = காரகில் மரங்களுடன்; சகம்பே = நடுங்கிற்று.

(க-ரை) ரகுமன்னன் லௌஹிதம் என்னும் நதியைக் கடந்தான். அங்கு யானைகளைக் கட்டிய காரகில் மரங்கள் அவற்றின் இழுத்தலால் அசைந்தன. இதேபோல், இந்தப் படைகளைக் கண்டு அங்குள்ள அரசர்கள் அசைந்தனர். அதாவது அச்சமுற்றனர். (புனைவுளியொப்புமைக் கூட்ட » ணி)

சு ॥ ந ப்ரஸஹே ஸருத்²த³ார்க மத³ாரா வர்ஷ து²ர்தி²நம் ।
ரத¹வர்த்ம ரஜோ ப்யஸ்ய குதஏவ பதாகிநீம் ॥ 82

(ப-ரை) ஸஃ = அந்த ப்ராக்²ஜோதிஷபுரத்து மன்னன்; ரு²த்த³ அர்கம் = மறைக்கப்பட்ட சூரியனால்; அத³ாராவர்ஷ = மழையற்ற து²ர்தி²நம் = கெட்ட நாளுருவான; அஸ்ய = அந்த ரகுமன்னனுடைய; ரத¹வர்த்ம = தேரின் வழியில்; (கிளம்பிய) ரஜோபிஃ = தூசியை; நப்ரஸேஹ = சகித்துக் கொள்ளாமல் போனான்; பதாகிநீந்து = படைகளை என்றாலோ; குத ஏவ = எவ்வாறு; ப்ரஸேஹே = சகிப்பான்.

(க-ரை) பிராக்சோதிடபுரத்தரசன், மழையில்லாது கெட்ட நாட்களான அப்போது ஆகாயத்தைச் சூழ்ந்துள்ள ரகுவின் தேர்ப் பாதையிலிருந்து கிளம்பிய தூசியைக் கண்டமாத்திரத்தில் பயந்தவனாய்ப் பணிந்துவிட்டான். போரைப் பற்றி நினைக்கவே இல்லை. (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ த மீஃஃ காமரூபாணா மத்யா க¹ண்டல விக்ரமம் ।
பே³ஜே பி³ந்நகடைர் நாகை² ரந்யா நுபருரோத³ யைஃ ॥ 83

(ப-ரை) காமரூபாணாம் = காமரூப நாடுகளின்; ஈஃஃ = பிரபு; அதி ஆக¹ண்டல விக்ரமம் = இந்திரனுடைய வலிமையை விட மிஞ்சிய; தம் = அந்த ரகுமன்னனுடைய; பி³ந்ந = மதம் ஒழுகும்; கடைஃ = கன்னங்களுடைய; நாகை²ஃ = யானைகளால்; பே³ஜே = வணங்கினான்; யைஃ = எந்த யானைகளால்; அந்யாந் = ரகுவன்றி பிறவரசர்களை; உபருரோத³ = தாக்கினானோ;

(க-ரை) காமரூபநாட்டரசன், இந்திரனை மிஞ்சிய பராக்கிரமமுடைய ரகுமன்னனைக் கண்டதும் முன்பு தானெந்த; யானை

க்ளைக் கொண்டு பிற மன்னர்களைத் தாங்கினானோ அந்தயானை களையே காணிக்கையாக வழங்கினான். (நிகழ்வினவிற்சியணி)

சு ॥ காமரூபேஶ்வர ஸ்தஸ்ய ஹேம பீடாதி³ தே²வதாம் ।
ரத்நபுஷ்போப ஹாரேண ச¹ாயாமா நர்ச பாத²யோஃ ॥ 84

(பரை) காமரூபேஶ்வரஃ = காமரூப நாட்டு மன்னன்; ஹேம பீட¹ = பொன் பீடத்திற்கு; அதி³தே²வதாம் = அதிதேவதையான; தஸ்ய = அந்த ரகுமன்னனுடைய; பாத²யோஃ = அடிகளின்; ச¹ாயாம் = ஒளியை; ரத்ந = ரத்னங்களெனும் புஷ்ப = பூக்களுடைய; உப ஹாரேண = கொடுத்தல் வாயிலாக; ஆநர்ச = பூசை செய்தான்.

(க-ரை) மேலுமவ்வரசன் ரகுமன்னனுக்கு பொற்பீடங் கொடுத்து, அமர்த்தி, அவன் பாத பீடத்தில் ஒளிந்த ஒளியுள்ள அவனது அடிகளை ரத்தினங்களென்னும் பூக்களால் பூசனைச் செய்தான். (மிகுதினவிற்சியணி)

சு ॥ இதி ஜித்வா தி²ஶோஜிஷ்ணுர் ந்யவர்தத ரதே¹ாத்²த³தம் ।
ரஜோ விஶ்ராமயந் ராஜ்ஞாம் ச¹த்ரஶூந்யேஷு மௌளிஷு ॥ 85

(ப-ரை) ஜிஷ்ணுஃ = வெற்றி சீலனான; ஸஃ = அந்த ரகுமன்னன்; இதி = முன் கூறியவண்ணம்; தி²ஶஃ = திசைகளை; ஜித்வா = வென்று; ரத¹ உத்²த³தம் = தேரினின்றெழுப்பப்பட்ட; ரஜஃ = தூளியை; ராஜ்ஞாம் = அரசர்களின்; ச¹த்ர = குடைகளால்; ஶூந்யேஷு = அற்றுப்போன; மௌளிஷு = சிகைகளில்; விஶ்ராமயந்ஸந் = சம்மந்தப்படுத்துகிறவனாய்; ந்யவர்தத = திரும்பிச் சென்றான்.

(க-ரை) இவ்விதம் வெற்றிவாகைச் சூடியவனாய், ரகுமன்னன் ஓர் குடையுடையவனாகி, தன்னுடைய நகரத்திற்குத் திரும்பி சென்றான். (விரல்கோலணி)

சு ॥ ஸ விஶ்வஜித மாஜஹ்ரே யஜ்ஞம் ஸர்வஸ்வ த¹க்ஷிணம் ।
ஆத²ாநம் ஹிவிஸர் க²ாய ஸதாம் வாரி முசாமிவ ॥ 86

(ப-ரை) ஸஃ = அந்த ரகுமன்னன்; ஸர்வஸ்வ = எல்லாப் பொருளும்; த²க்ஷிணம் = தக்ஷிணை (காணிக்கை)யாகக் கொண்ட; விஶ்வஜிதம் = விஶ்வஜித் என்னும்; யஜ்ஞம் = வேள்வியை; ஆஜஹ்ரே = செய்தான்; தத¹ாஹி = அஃதாவது; ஸதாம் = நல்லாருடைய; வாரி

முசாமிவ = மேகங்கள் போன்று; ஆத²ாநம் = சம்பாதனை; விஸர்க²ாயஹி = நல்லவழியில் செய்வதற்கேயன்யோ!

(க-ரை) பிறகு ரகுமன்னன் (உலகை வென்று செய்யத்தக்க) எல்லாப் பொருளும் தக்ஷிணையின் கீழ் கொடுக்கத்தக்க 'விச்வஜித்' என்னும் வேள்வியைச் செய்தான். மகாத்மாக்கள் முகிலவன் போன்று தம் பொருள் யாவும் நற்செய்கைகட்கே பயன்படுத்துவது இயல்பன்றோ. (உவமையணி)

ஸ ॥ ஸந்த்ராந்தே ஸசிவஸக¹ஃ புரஸ்க்ரியாபி³ஃ
குர்வீபி³ச் சமித பராஜய வ்யளீகாந் ।
காகுத்ஸ்த¹ச்சிர விரஹோத்ஸுக அவரோத³ாந்
ராஜந்யாம் த்ஸ்வபுர நிவ்ரித்தயே஽நு மேநே ॥ 87

(ப-ரை) காகுத்ஸத¹ = ரகுமன்னன்; ஸத்ராந்தே = விச்வஜித் யாகத்தின் கடைசியில்; ஸசிவஸகி¹ஸ்ஸந் = அமைச்சும் நட்பும் உடையவனாய்; குர்வீபி³ஃ = அதிகமான; புரஸ்க்ரியாபி = பூசைகளால்; சமித = தணிந்த; பராஜய = தோல்வியால் விளைந்த; வ்யளீகாந் = துன்பமுடைய; சிர = சில காலத்து; விரஹ = பிரிவால்; உத்ஸுக = விருப்பமான; அவரோத³ாந் = அந்தப்புரத்து மாதர்களுடைய; ராஜ்யாந் = அரசர்களை; ஸ்வ = தம்முடைய; புர = பட்டணத்தை நோக்கி; நிவ்ரித்தயே = போவதற்கு; அநுமேநே = அனுமதித்தான்.

(க-ரை) ரகுமன்னன் அந்த வேள்வி முடிந்ததும், தோல்வியுற்றதால் அடைந்த துன்பம் நீங்கவல்ல பெரும் வெகுமதிகளை அரசர்கட்கும் அமைச்சருடன் கூடினவனாயளித்து, துன்புற்ற அவர்களின் மனைவிமார்களுக்கு அன்புண்டாகும்படி தத்தம் நாடுகளுக்குச் செல்ல அனுமதியை அளித்தான். (தகுதியணி)

ஸ ॥ தே ரேக¹ா த்³வஜ கலசாதபத்ர சிஹ்நம்
ஸம்ராஜஞ் சரணயுக²ம் ப்ரஸாத² லப்³த³ம் ।
ப்ரஸ்த¹ாநப்ரணதிபி³ ரங்கு²லீஷு சக்ருஃ
மௌளி ஸ்ரக்ச்யுத மகரந்த³ ரேணு கௌ³ரம் ॥ 88

இதி காளிதாஸ க்ரிதௌ ரகு³வம்ஸே மஹாகாவ்யே சதுர்த¹ஸ் ஸர்க¹ஃ

(ப-ரை) தே= அவ்வரசர்கள்; ரேக$^{1}$ா = பட்டைகள் தீட்டிய; த்$^{3}$வஜ = கொடிகளும்; கலஶ = கலசங்களும்; ஆதபத்ர = குடைகள்; சிஹ்நம் = சின்னங்களாகவுடையதும்; ப்ரஸாத$^{2}$ = கருணையால்; லப்$^{3}$யம் = அடையத்தக்க; ஸம்ராஜஃ = சக்ரவர்த்தியாகிய ரகுமன்னவனின்; சரணயுக$^{1}$ம் = இருபாதங்களை; ப்ரஸ்த$^{1}$ாந = பிரயாண காலத்தில்; ப்ரணதிபி$^{3}$ஃ = பணிதலால்; அங்கு$^{2}$ளீஷு = விரல்களில் மௌளி = தலைமுடிகளில் உள்ள; ஸ்ரக் = பூச்சரங்களில் இருந்து; ச்யுத = நழுவிவரும்; மகரந்த = பூந்தேனாலும்; ரேணு = மகரந்தப் பொடியாலும்; கெ$^{2}$ளரம் = செந்நிறங் கலந்ததாய்; சக்ரு = செய்தனர்.

(க-ரை) அவ்வரசர்கள் அருள் பெற்றவர்களாய், ரகுமன்னனுடைய அடிகளுக்கு, பிரயாணத்தின் போது வணக்கஞ் செலுத்தினார்கள். அப்போது அவர்களின் தலைகளிலிருந்த பூக்களின் தேனும், பூந்தாதுக்களும் ரகுமன்னவன் கால்களுக்குப் பட்டு, அவ்விரல்கள் மஞ்சள் நிறம் பெற்றுத் திகழ்ந்தன. (உயர்வுநவிற்சியணி)

இது காளிதாசனாலியற்றப்பட்ட ரகுவம்சமென்னும் மகாகாவியத்தில் நான்காம் சருக்கத்திற்குத் திருத்தணிவாழ் ஸ்ரீவித்யானந்தரெனும் செ. ராமலிங்காசாரியாலியற்றப்பட்ட தெளிவுரை.

# ரகுவம்ச மகா காவியம்

## ஐந்தாம் சருக்கம்

ஸ் த மத்[3]வரே விஶ்வஜிதி க்ஷிதீஶம்
நிஶ்ஶேஷ விஶ்ராணித கோஶஜாதம் ।
உபாத்த வித்[2]யோ கு[3]ரு த[3]க்ஷிணார்தீ
கௌத்ஸ ப்ரபேதே[3] வரதந்து ஶிஷ்யஃ ॥ 1

(ப-ரை) விஶ்வஜிதீ = விஶ்வஜித்தென்னும்; அத்[3]வரே = வேள்வியில்; நிஶ்ஶேஷ = மீதியின்றி; விஶ்ராணித = கொடுக்கப் பட்ட; கோஶ = பொருள்களின்; ஜாதம் = சமூகங்கொண்ட; தம் = அந்த; க்ஷிதீஶம் = ரகுமன்னனை; உபாத்த = பெறப்பட்ட; வித்[2]ய = பதினான்கு வித்தைகளுடைய; வரதந்து = வரதந்துவெனப்படும் முனிவருக்கு; சிஷ்ய = சீடனாகிய; கௌத்ஸஃ = கௌத்சன் என்னும் பெயருடைய முனிவன்; கு[3]ருதக்ஷிண அர்தீ[1] நி = ஆசானுக்குக் காணிக்கையளிக்கும் எண்ணங் கொண்டவனாய்; ப்ரபேதே[3] = வந்தான்.

(க-ரை) ரகுமன்னன் 'விஶ்வஜித்' தென்னும் வேள்வியைச் செய்து, உள்ள பொருளனைத்துங் கொடுத்துவிட்டு, ஓய்வு பெற்றிருந்த சமயம், வரதந்து முனிவரின் மாணவனாகிய கௌத்ஸன் என்னும் ரிஷி, தன் ஆசானிடம் பதினான்கு வித்தைகளையும் கற்று முடித்து, குருதக்ஷிணை இரத்தல் பொருட்டு ரகுமன்னனிடம் வந்தான். (அரதனமாலையணி)

ஸ ॥ ஸ ம்ரிண்மயே வீத ஹிரண்மயத்வாத்
பாத்ரே நித[3]ா யார்க்[3]ய மநர்க்[3]யஶீலஃ ।
ஶ்ருதப்ரகாஶம் யஶஸா ப்ரகாஶஃ
ப்ரத்யுஜ்ஜக[3]ா மாதிதி[1] மாதிதே[1]யஃ ॥ 2

(ப-ரை) அநர்க[3]ஃ = விலைமதிப்பற்ற; ஶீலஃ = சுபாவமுள்ள யஶஸா = புகழால்; ப்ரகாஶ = ஒளிரும்; அதிதே[1]யஃ = சுற்றம் பேணும்; ஸஃ = அந்த ரகுமாமன்னன்; வீத = தானங்கொடுத்ததால் அழிவுற்ற; ஹிரண்மயத்வாத் = பொற்குடங்களுடையவனாதலால்; ம்ரிண்மயே

= மட்பாத்திரத்தில்; அர்க்⁴யம் = பூசைப் பொருட்களை; நிதா⁴ய = வைத்துக்கொண்டு; ஸ்ருதப்ராகாஸம் = சுருதிகளின் மேன்மையான ஞானம் படைத்த; அதிதி²ம் = சுற்றமாக வந்த கௌத்ஸ முனியை; ப்ரத்யுஜ்ஜகா³ம = எதிர்கொண்டழைத்தான்.

(க-ரை) சுற்றம் பேணுவதில் விருப்புள்ளவனும் மிகுந்த நற்சுபாவமுள்ளவனுமாகிய ரகுமன்னன் மட்பாத்திரத்தில் பூசைக்குரிய பொருட்களை வைத்துக்கொண்டு, சகல கலாவல்லவனாகிய கௌத்ஸன் தன்னை நாடிவர அவனை எதிர்கொண்டழைத்தான். (தகுதியணி)

சு ॥ த மர்சயித்வா விதி³வ த்³விதி³ஜ்ஞ:
தபோநிதி³ம் மாநத³நா க்³ர யாயீ ।
வி ஸாம்பதிர் விஷ்டர ப⁴ாஜமாராத்
க்ரிதாஞ்ஜலி: க்ரித்த விதி³ த்யுவாச॥ 3

(ப-ரை) விதி³ஜ்ஞ: = சாத்திரங்கள் கற்றுணர்ந்த; மாநத³ந: = மானமே பொருளாய் உள்ளவர்களில்; அக்³ரயாயீ = முதல்வனாய் விளங்கும்; க்ரித்யவித் = காரியமறிந்த; விஸாம்பதி: = மானிடர்க்கரசனாகிய ரகுமன்னன்; விஷ்டர = ஆதனத்தை; ப⁴ாஜம் = அடைந்து; தம்தபோநிதி³ம் = அத் தவச்சிரேட்டரை (கௌத்ஸரிடியை); விதி³வத் = முறைப்படி; அர்சயித்வா = பூசை செய்து ஆராத் = அருகில்; க்ரித = செய்யப்பட்ட; அஞ்ஜலிஸ்ஸந் = கை கூப்பியவனாய், இதி = கீழ்க்கண்டவாறு; உவாச = சொன்னான்.

(க-ரை) சாத்திரங்கள் அறிந்தவனும் மானமுடையவர்களில் மேன்மையானவனும் ஆகிய ரகுமன்னன் அக்கௌத்ஸ முனிவரை ஆதனத்தில் அமர்த்தி, விதிப்படி பூசை செய்து அருகில் கைக் கூப்பியவனாய் கீழ்க்கண்டவாறு கூறலானான். (தொழிற்றன்மை நவிற்சியணி)

சு ॥ அப்யக்³ரணிர் மந்த்ரக்ரிதாம் ரிஷீணாம்
குஸாக்³ர புத்³தே³ குஸலீ கு³ருஸ்தே ।
யதஸ்த்வயா ஜ்ஞாந மஸேஷ மாத்தம்
லோகேந சைதந்ய மிவோஷ்ண ரஸ்மே: ॥ 4

(ப-ரை) ஹே, குஸாக்³ரபு³த்³தே³ = நுண்ணறிவுடைய ஓ, கௌத்ஸ மகரிஷீ! மந்த்ர க்ரிதாம் = மந்திரங்களையறிந்த; ரிஷீ

ணாம்=ரிஷிகளில்; அக்³ரணீ=முதல்வராகிய; தே=உமது; கு³ரு꞉=ஆசான்; அஶேஷம்=எல்லா; ஜ்ஞாநம்=ஞானத்தையும்; த்வயா=உனக்கு; உஷ்ண ரஶ்மே꞉=சூரியன் தன் ஒளியால்; லோகேந=உலகிற்கு; சைதந்யமிவ=அறிவாற்றல்; ஆத்தம்=பெறச் செய்வது போன்றுள்ள அவர்; குஶலீயத꞉=நலம் தானா?

(க-ரை) பரிதி உலகுக்கு எல்லாப் பொருள் பற்றிய அறிவூட்டு வதுபோல், நுண்ணறிவுடைய உனக்கு எல்லா அறிவாற்றலையும் விளக்கி அருளும் மந்திர அறிஞரான உமது ஆசான் நலமா? (விரியுவமையணி)

சு ॥ காயேந வாசா மநஸாऽபி ஶஶ்வ
த்³ய த்ஸம்ப்⁴ரிதம் வாஸவ தை⁴ர்ய லோபி ।
ஆபாத்³யதே நவ்யய மந்தராயைः
கச்சிந் மஹர்ஷே ஸ்த்ரிவித⁴ம் தபஸ்தத் ॥ 5

(ப-ரை) காயேந=உபவாசம் முதலிய உடலை வருத்தும் கிரியைகளாலும்; வாசா=வேதமோதுவதாலும்; மநஸாபி=காயத்ரீ முதலிய மந்திர ஜபத்தாலும்; வாஸவ=தேவேந்திரனுடைய; தை⁴ர்ய=மனத் திட்பத்தை; லோபி=போக்கும்; யத்=எந்த தவம்; ஶஶ்வத்=அவ்வப்போது; ஸம்ப்⁴ரிதம்=பெறப்பட்டதோ; மஹர்ஷே꞉=வரதந்து முனிவருடைய; த்ரிவித⁴ம்=மனம் மெய்வாக்கு களிற் பிறந்த; தத் தப꞉=அந்தத் தவமானது; அந்தராயை꞉= இந்திரனால் ஏவப்பட்ட தேவமாதுகளின் சாபம் முதலிய கேடு களால்; வ்யயம்=நாசத்தை; நாபாத்³யதே கச்சித்=அழிந்து விடாமல் இருக்கிறது.

(க-ரை) தேவேந்திரனுக்கு அச்சமூட்டும் உடற்சம்பந்தமான உபவாசம் முதலியவையும், வாக்கைச் சார்ந்த வேதமோதல் முதலி யவையும், மனதைச் சார்ந்த காயத்ரீஜபாதிகளும் ஆகிய இம்மூன்று காரியங்களுடன் கூடிய தவம் தேவேந்திரனால் கெடுக்கப்படாமல் உமது ஆசானுக்கு நடைபெற்றுவருகிறதோ? (பெருந்தவசிகளின் தவத்தை தேவேந்தின் கொடுத்து விடுவான் என்பது புராணக் கூற்று) (வீறுகோளணி)

சு ॥ ஆத⁴ார ப¹ந்த⁴ ப்ரமுகை²꞉ ப்ரயத்நைஸ்
ஸம்வர்திதாநாம் ஸுத நிர்விஶேஷம் ।
கச்சிந்ந வாய்வாதி³ ருபப்லவோ வः
ஶ்ரமச்சி¹த³ா மாஶ்ரம் பாத³பாநாம் ॥ 6

(ப-ரை) ஆத²ார = பாத்திகளை; ப²ந்த³ = கட்டுதல்; ப்ரமுகை¹ஃ = முதலிய; ப்ரயத்நைஃ = உபாயங்களால்; ஸுத = மகன்களைவிட; நிர்விஶேஷம் யத²ாதத²ா = விசேடமின்மை எவ்வாறோ அவ்வாறு; ஸம்வர்தி³தாநாம் = வளர்க்கப்பட்ட; ஶ்ரம = மாறுபாட்டை; சி¹த²ாம் = போக்கும்; வஃ = உங்களுடைய; ஆஶ்ரம = ஆச்சிரமத்திலுள்ள; பாத²பாநாம் = மரங்கட்கு; வாய்வாதி = காற்று முதலிய; உபப்லவஃ = உபத்திரவங்கள்; நகஶ்சித் = இல்லாமலிருக்கிறதா?

(க-ரை) உங்கள் ஆசிரமத்தில் பாத்திகள் கட்டுதல் முதலிய முயற்சிகளும், மகன்களைப் போல் காப்பாற்றப் படுகின்றவைகளும், சிரம பரிகாரம் செய்யும் மரங்கட்குப் பெரிய காற்றும் காட்டுத்தீ, யானைகள் முதலியவற்றால் உபத்திரவங்களும் இல்லாமல் இருக்கின்றனவா? (வீறுகோளணி)

சு ॥ நிர்வர்த்ய தேயைர் நியமாபி³ஷேகோ
யேப்³யோ நிவாபாஞ்ஜலயஃ பித்ரூணாம் ।
தாந்யுஞ்ச¹ ஷஷ்டாங்கிதஸைகதாநி
ஶிவாநிவஸ் தீர்த¹ ஜலாநி கஶ்சித் ॥ 7

(ப-ரை) யைஃ = எந்த தீர்த்தத்தால்; நியம = குளித்த; அபி³ஷேகஃ = குளித்நல்; நிர்வர்த்யதே = நிறைவேற்றப்படுகிறதோ; யேப்³யஃ = எந்த தீர்த்தத்தை; உத்²த³ரித்ய = எடுத்து; பித்ரூணாம் = தென்புலத்தார்க்கு; நிவாபாஞ்ஜலயஃ = தர்ப்பணாஞ்ஜலிகள்; நிர்வர்த்தயந்தே = நிறைவேற்றப்படுகிறதோ; உஞ்ச¹ = சிந்திய தானியங்களில்; ஷஷ்ட = ஆறிலொரு பங்கு; அங்கித = குறிக்கப்பட்ட; ஸைகதானி = மணற்றிட்டுகள் உள்ள; வஃ = உங்களது; தாநி = அந்த; தீர்த¹ஜலாநி = தீர்த்தமாகிய தண்ணீர்; ஶிவாநி கஶ்சித் = நலந்தரவல்லதா என்ன?

(க-ரை) குளித்தல், குடித்தல், பிதுர் தர்ப்பணங்களாற்று துலுக்குகந்ததாய், சிதறிய நெல்லின் ஆறாம் பங்கு தானியங்கள் கூடிய மணற்றிட்டுகள் கொண்ட தண்ணீர் உபத்திரவமில்லாது இருக்கின்றதா? (உஞ்சவிருத்தி என்றால் களஞ்சியங்கள் முதலிய வற்றில் சிந்திய தானிய வகைகளை பொருக்கிச் சேர்த்தல். (பெருமையணி)

சு ॥ க்ரியா நிமித்தே ஷ்வபி வத்ஸலத்வாத்
அப³க்¹ந காமா முநிபி³ஃ குஶேஷா ।

தத2ங்கஶய்யா ச்யுத நாபி3நாளா
கச்சிந் ம்ரிகீ2ணா மநக3ா ப்ரஸூதிः ॥ 8

(ப-ரை) க்ரியா = வேள்வி முதலிய அனுட்டானங்கட்கு; நிமித்தைஷ்வபி = கருவிகளேனும்; குேஶஷு = தருப்பை (புல்) களிலும்; முநிபி3ः = ரிஷிகளால்; வத்ஸலத்2வாத் = விலங்குகளின் நட்பால்; அப3க்3ந = கேடு விளைவிக்காத; காமா = விருப்பமுடைய; தத் = அந்த ரிஷிகளின்; அங்க = தொடைகளென்னும்; ஶய்யா = படுக்கையில்; ச்யுத = நழுவும்; நாபி3நாள = கொப்பூழுள்ள; ம்ரிகீணாம் = பெண் மான்களின்; ப்ரஸூதிः = சந்தானமானது; அநக்ஷ3ாகஶ்சித் = துயரின்றி உள்ளனவா?

(க-ரை) வேள்வி முதலிய காரியங்கட்குப் பயன்படும் தருப்பைகள், அன்பினால் அதட்டப்படாது தன்னிச்சையாக மேய்ந்துக் கொண்டிருப்பனவும், தொடைகள் மீது படுக்கவைத்துக்கொள்ளும் கொப்பூழ் விழாத மான்குட்டிகளும் நலமாக உள்ளனவா? (பாம்புகள் கொப்பூழ்களை விழுங்கி விடாமல் தொடைமீது பத்து நாட்கள் படுத்து; வைத்துக்கொள்ளப் படுகின்றன). (பெருமையணி)

சு॥ நீவார பாகாதி2 கட2ங்க2ரீயை
ராம்ரிஶ்யதே ஜாநபதை2ர் நகஶ்சித் ।
காலோப பந்நாதிதி1 கல்ப்ய ப3ாக2ம்
வந்யம் ஶரீரஸ்தி1தி ஸாத3நம் வः ॥ 9

(ப-ரை) கால = குறித்த காலத்தில்; உபபந்ந = வந்த; அதிதி1 = சுற்றத்திற்கு; கல்ப்ய = செய்யத்தக்க; ப3ாக2ம் = அம்சங்களுடைய; வந்யம் = காட்டில் உள்ள; வः = உங்களுடைய; ஶரீரஸ்தி1தி = உடல் வளர்க்க; ஸாத3நம் = உகந்ததாய்; நீவாரபாக = காட்டுநெல்; ஆதி = முதலிய தானியம்; ஜாநபதை2ः = நாட்டிலிருந்து வந்த; கட2ங்க2ரீயைः = எருது முதலியவற்றால்; நாம்ரிஶ்யதே சுஶ்சித் = தொடப்படாமல் இருக்கிறதா?

(க-ரை) சுற்றத்திற்கும் உங்களுக்கும் உணவைத் தரவல்ல சாமை முதலிய தானியங்கள், நாட்டிலிருந்து வரும், எருது முதலிய வற்றால் நாசம் செய்யப்படாமல் உள்ளதா? (பெருமையணி)

சு॥ அபி ப்ரஸங்நேந மஹர்ஷிணாத்வம்
ஸம்யக்2விநீ யாஸ-மதோ க்2ரிஹாய ।

காலேஹ்யயம் ஸங்க்ரமிதும் த்²விதீயம்
ஸர்வோபகாரக்ஷம மாஶ்ரமம்தே ॥ 10

(ப-ரை) த்வம் = நீர்; ப்ரஸந்நேந = தயவுள்ளவராய்; மஹர்ஷிணா = வரதந்து ரிஷியால்; ஸம்யக் = நன்றாக; விநீய = கற்பித்து; க்²ரிஹயாய = இல்லறம் பூணும் பொருட்டு; அநுமதோபி = சம்மதித்தாயா என்ன; ஹி = எக்காரணத்தால்; தே = உனக்கு; ஸர்வ = எல்லா ஆச்சிரமங்களின்; உபகார = உபகாரத்தில்; க்ஷயம் = தகுதியான; த்²விதீய்ம் = இரண்டாவதுமான; ஆஶ்ரமப் = இல்லறத்தை; ஸங்கரமிதும் = அடைவதற்கு; அயம் = இது; காலஃ = காலமோ?

(க-ரை) எல்லா ஆச்சிரமத்தார்க்கும் உபகாரமாக உள்ள இல்லறத்திற்கு இது காலமானதால் தயாளனான வரதந்து மஹரிஷி உமக்கு வித்தைகளைக் கற்பித்துத் திருமணம் பெற ஒப்புதல் அளித்தாரா? (பெருமையணி)

அவ ॥ நலம் விசாரித்த பிறகு வந்த காரணம் வினவப்படுகிறது.

சு॥ தவார்ஹதோ நாபி³க²மேந த்ரிப்தம்
மநோ நியோக² க்ரிய யோத்ஸுகம் மே ।
அப்யாஜ்ஞயா ஶாஸிதுராத்ம நாவா
ப்ராப்தோஃஸி ஸம்ப³ாவ யிதும்வநாந் மாம் ॥ 11

(ப-ரை) அர்ஹதஃ = தகுதியுடைய; தவ = உம்முடைய; அபி³க²மேந = வருகையால்; மே = எனது; மநஃ = மனம்; நத்ரிப்தம் = மகிழ்வதில்லை; கிந்து = பின்னுமென்னவென்றால்; நியோக² = உத்தரவை; க்ரியாயா = செய்வதற்கு; உத்ஸுகஃ = விருப்பமாயுள்ளது; ஶாஸிதுஃ = பயிற்சியாளனாகிய வரதந்து ரிஷியின்; ஆஜ்ஞயாஃ = ஆணையானது; ஆத்மநாவா = உம்மாலேயே; மாம் = என்னை; ஸம்ப³ாவயிதும் = வெகுமதி செய்தற்கு; வநாத் = காட்டில்; ப்ராப்தஃ = (இருந்து) வந்தவர்; அஸி = ஆகின்றாய்.

(க-ரை) நீங்கள் வந்தமாத்திரத்தில் எனக்கு மகிழ்ச்சி இல்லை நீர் ஆசான் அனுமதியுடன் வந்தீரோ? சுயநலத்திற்கு வந்தீரோ? அதற்காக நான் உங்களுடைய ஆணையை நிறைவேற்றுவதில் மன மகிழ்வாக உள்ளது. (பெருமையணி)

ஸு॥ இத்யர்க்⁸ய பாத்ராநுமித வ்யயஸ்ய
ரகே³ருத³ாரா மபிகா³ம் நிஶம்ய ।
ஸ்வார்தே¹ாப பத்திம் ப்ரதிது³ர்ப³லாஶஸ்
தமி த்யவோச த்³வரதந்து ஶிஷ்ய: ॥ 12

(ப-ரை) அர்க்⁸யபாத்ர=மட்பாத்திரத்தால்; அநுமித=எண்ணிய; வ்யயஸ்ய=முழுதும் துறந்த; ரகே³ா:=ரகுமன்னனுடைய; இதி=இவ்வாறான; உத³ாராமபி=கொடை குணத்துடன் கூடிய; க³ாம்=வாக்கை; நிஶம்ய=கேட்டு; வரதந்துஶிஷ்ய:=வரதந்து ரிஷி சீடனாகிய கௌத்ஸரிஷி; ஸ்வார்த¹=தன் காரியத்தின்; உபபத்திம் ப்ரதி=சித்தியைக் குறித்து; து³ர்ப³ல=வலிமையற்ற; ஆஶஸ்ஸந்=நினைத்தப் பொருளுடையவனாய்; தம்=அந்த ரகுமன்னனை நோக்கி; இதி=இவ்வாறு; அவோசத்=கூறினான்.

(க-ரை) இவ்வாறு ரகுமன்னவன் உதாரத்துடன் கூடிய சொற்கள் கூறியபோதிலும், அவன் தன்பொருள் முழுதும் தானம் செய்துவிட்ட சங்கதியைக் குறிக்கும் மட்பாத்திரத்தையேந்தி இருப்பதால், குருதக்ஷிணையைப் பெறுவதற்காக கௌத்ஸமுனி தான் வந்த காரியம் ஈடேறாதென நினைத்து கீழ்க்கண்டவாறு கூறினான் (நுட்பவணி)

ஸு॥ ஸர்வத்ரநோ வார்த மவேஹிராஜ
ந்நாதே¹ த்வயி ஸதி குதஸ்த்வ ய்யஶுப⁸ம் ப்ரஜாநாம் ।
ஸூர்யே தபத்யாவரணாய த்³ரிஷ்டே:
கல்பேத லோகஸ்ய கத¹ம் தமிஸ்ரா ॥ 13

(ப-ரை) ஹேராஜந்=அரசனே! ஸர்வத்ர=எல்லா விதத்திலும்; ந:=எங்களுக்கு; வார்தம்=நலமென்பது; அவேஹி=அறிவாயாக; த்வயி=நீ; நாதே¹ஸதி=அரசனாகவுள்ளபோது; ப்ரஜாநாம்=குடிகளுக்கு; அஶுப⁸ம்=துன்பம்; குத:=ஏது? தத¹ாஹி=அவ்வாறிருக்க; ஸூர்யே=சூரியன்; தபதிஸதி=பிரகாசித்துக் கொண்டிருக்க; தமிஸ்ரா=இருட்டு; லோகஸ்ய=மக்களின்; த்³ரிஷ்டே:=பார்வையை; ஆவாரணாய=மறைப்பதற்கு; கத¹ம்=எவ்வாறு; கல்பதே=முடியும்.

(க-ரை) நாங்கள் எல்லா விதத்திலும் நலமாகவே உள்ளோம், அரசே! நீ அரசனாக உள்ளபோது குடிகளுக்குத் துன்பம் என்பது ஏது? சூரியன் ஒளித்துக் கொண்டிருக்கும்போது இருள் இருக்க முடியுமா? (எடுத்துக்காட்டுவமையணி)

சு॥ ப⁴க்தி꞉ ப்ரதீக்ஷ்யேஷு குலோசிதா தே
பூர்வாந் மஹா பா⁴க³தயாதி சேஷே ।
வ்யதீதகால ஸ்த்வஹ மப்⁴யுபேத
ஸ்த்வா மர்தி³ ப⁴ாவா தி²திமே விஷாத³꞉ ॥ 14

(ப-ரை) ப்ரதீக்ஷ்யேஷு = பெரியோர்களிடம்; ப⁴க்தி꞉ = அன்பு; தே = உனக்கு; குல உசிதா = மறபினரால் பயிலப்பட்டது; ஹேமஹாப⁴ாக = மகனாகிய ரகுமன்னா; தயா = அந்தபக்தியால்; பூர்வாந் = முந்தி இருந்தவர்களை; அதிசேஷ = மிஞ்சுகிறாய்; கிந்து = மேலும் என்னவென்றால்; அஹம் = நான்; வ்யதீத = கடந்துவிட்ட; காலஸ்ஸந் = காலமுள்ளவனாய்: அர்தி¹ப⁴ாவாத் = இரத்தலால்; த்வாம் = உன்னை; அப்⁴யுபேதே = அடைந்தேன்; இதி = என்பது; மே = எனக்கு: விஷாத³꞉ = துன்பமாக உள்ளது.

(க-ரை) ஓ அரசே! பெரியோர்களிடம் பக்தி என்பது உமது முன்னோர்களிடம் பிறந்து பயிலப்பட்டு வந்தது. அது விஷயத்தில் நீ உன் முன்னோர்களை மிஞ்சி இருக்கிறாய். ஆனாலும், நான் காலங்கடந்து உன்னிடம் இரக்க வந்தமைக்கு வருந்துகிறேன். (பொதுமையணி)

சு ॥ சரீர மாத்ரேண நரேந்த்³ர திஷ்ட²ந்
நாப⁴ாஸி தீர்த²ப்ரதியாதி³ தர்தி¹꞉ ।
ஆரண்ய கோபாத்த ப¹லப்ரஸூதி꞉
ஸ்தம்பே³ந நீவார இவாவ சிஷ்ட꞉ ॥ 15

(ப-ரை) ஹே நரேந்த்³ர = ஓ அரசே! தீர்த¹ = நல்லார்கட்கு; ப்ரதிபாதி²த = கொடுக்கப்பட்ட; ருத்³தி³꞉ = செல்வமுடைய; த்வம் = நீ; சரீர மாத்ரேண = உடல் மட்டும்; திஷ்ட¹ந் = உள்ளவனாய்; ஆரண்யக = காட்டிலிருக்கும் முனிவர்களால்; உபாத்த = பெறப்பட்ட; ப¹ல = பயனென்னும்; ப்ரஸூதி꞉ = சந்தான முடைய; ஸ்தம்பே³ந = தண்டுகளால்; அவசிஷ்ட = மீதியான; நீவார இவ = காட்டு நெல் போல்; ஆப⁴ாஸி = பிரகாசிக்கிறாய்.

(க-ரை) தம்பிச்சையாய் முளைக்கும் காட்டுநெல், சாமை போன்ற பயிர்களில் உள்ள தானிய மணிகளை ரிஷிகள் பரித்துக் கொண்ட பிறகு, வெறும் தாள்கள் மட்டும் நிற்பதுபோன்று, நீ எல்லாப் பொருட்களையும் ஈந்து விட்டு, உடலை மட்டும் நிறுத்திக் கொண்டுள்ளவனாக இருக்கின்றாய். (எடுத்துக்காட்டுவமையணி)

சு ॥ ஸ்த[1]ாநே ப[3]வாநேக நராதி[3]புஸ்ஸங்
நகிஞ்சந த்வம் மக[1]ஜம் வ்யாக்தி ।
பர்யாய பீதஸ்ய ஸுரைர் ஹிமாம்ஶோ:
களாக்ஷய: ஶ்லாக்[3]யதரோஹிவ்ரித்தே: ॥ 16

(ப-ரை) ப[3]வாந் = நீ; ஏகநராதி[3]புஸ்ஸந் = ச[2]க்ரவர்த்தியாகி; மக[1]ஜம் = வேள்வியிற் பிறந்த; அகிஞ்சநத்வம் = பொருளின்மையை; வ்யநக்தி = அறிவிக்கிறாய்; ஸ்த[1]ாநே = நல்லது; ஸுரை: = தேவர்களால்; பர்யாய = முறையே; பீதஸ்ய = குடிக்கப்பட்ட; ஹிமாம்ஶோ: = சந்திரனுடைய; களா = கலைகளின்; க்ஷய = நாசமானது; வ்ரித்[2]தே[3]: = விருத்தி யடைதல்; ஶ்லாக்[3]யதர: = மிகப் போற்றத்தக்கது.

(க-ரை) நீ பேரரசனாய் வேள்விக்காக அனைத்தும் கொடுத்து விட்டதால் பொருளற்றவனாக காணப்படுகின்றாய். அது சரி. தேவர்கள் சந்திரனின் கலைகளையுண்ட போதிலும் வளர்பிறையில் அவனுக்கு வளர்ச்சியளிப்பதாகவே உள்ளது. (உவமை மற்றும் வீறுகோளணி)

சு ॥ தத[2]ந்யத ஸ்தாவ த[2]நந்ய கார்யோ
கு[2]ர்வர்த[1] மாஹர்து மஹம் யதிஷ்யே ।
ஸ்வஸ்த்யஸ்து தே நிர்க[2]ளிதாம்பு[2] க[2]ர்ப[3]ம்
ஶரத் க[3]நம் நார்த[2]தி சாதகோऽபி ॥ 17

(ப-ரை) தத் = அக்காரணத்தால்; அநந்ய கார்ய: = வேறு பிரயோசனமில்லாதவனாகிய; அஹம் = நான்; அநந்யதஸ் தாவத் = மற்றொரு ஈகையாளனால்; கு[2]ர்வர்த[1]ம் = ஆசானுக்கு வேண்டிய பொருள்; ஆஹர்தும் = தேடுவதற்கு; யதிஷ்யே = முயற்சி செயவேன்; தே = உனக்கு; ஸ்வஸ்தி = சுபம்; அஸ்து = உண்டாகட்டும்; தத[1]ாஹி = அது சரி; சாதகோऽபி = சாதக மென்னும் பறவை; நிர்க[2]ளித = வெளியில் விடப்பட்ட; அம்பு = தண்ணீரை; க[2]ர்ப[3]ம் = தன்னுள் ளடங்கிய; ஶரத்[2]க[3]நம் = கூதிர்க்கால மேகங்களிடம்; நார்த[2]தி = இரவாது.

(க-ரை) ஆதலின், பிறகாரியம் எண்ணாத நான் ஆசானுக்கு வேண்டிய பொருளைத் தேடி மற்றோர் ஈகையாளனை இரக்க எண்ணுகிறேன். உனக்கு மங்களமுண்டாகட்டும். மழை நீரையே பருகும் சாதகப் புள்ளானது மாரிக்காலம் கடந்தபின் கூதிர்க்காலத்து மேகத்தை மழை நீருக்காக இரவாதன்றோ. (விரியுவமையணி)

ஸ ॥ ஏதாவது[2]க்த்வா ப்ரதியாது காமம்

ஶிஷ்யம் மஹர்ஷேர் ந்ரிபதிர் நிஷித்[3]ய ।

கிம் வஸ்து வித்[2]வந் கு[2]ரவே ப்ரதே[2]யம்

த்வயா கிய த்[2]வேதி தமந்வ யுங்க்த ॥ 18

(ப ரை) ஏதாவது = இவ்வளவு வார்த்தைகளும்; உக்த்வா = சொல்லி; ப்ரதியாது காமம் = திரும்பிப்போக நினைத்த; மஹர்ஷேঃ = வரதந்து முனிவரின்; ஶிஷ்யம் = சீடராகிய கௌத்ஸ ரிஷியை; ந்ரிபதிঃ = அரசன்; நிஷித்[2]ய = தடுத்து நிறுத்தி; ஹேவித்வந் = வித்துவானாகிய முனிவரே; த்வயா = உம்மால்; கு[2]ரவே = குருவான வரதந்து முனிவனுக்கு; ப்ரதே[2]யம் = கொடுக்கக் கூடிய; வஸ்து = பொருள்; கிம் = என்ன; கியத்[2]வா = எம்மட்டு ஆகும்; இதி = என்று; தம் = அந்த கௌத்ஸ ரிஷியை; அந்வயுங்க்த = கேட்டான்.

(க-ரை) இவ்வார்த்தைகளைக் கூறிய பிறகு திரும்பிப் போய் விட முயன்ற கௌத்ஸ ரிஷியை ரகுமன்னன் தடுத்து நிறுத்தி, உமது குருவுக்கு அளிக்க வேண்டிய தக்ஷிணை என்ன; அது எவ்வளவாகும்; என வினவினான். (உலகவழக்கு நவிற்சியணி)

ஸ ॥ ததோ யத[1]ாவத்[2] விஹிதாத்[3]வரஸ்ய

தஸ்மை ஸ்மயா வேஶ விவர்ஜிதாய ।

வர்ணாஶ்ரமாணாம் கு[2]ரவேஸவர்ணீ

விசக்ஷணঃ ப்ரஸ்துத மாசசக்ஷே ॥ 19

(ப-ரை) ததঃ = பிறகு; யத[1]ாவத் = எப்போதும் போல்; விஹித = செய்யக்கூடிய; அத்[3]வராய = வேள்வியுடைய; ஸ்மய ஆவேஶ விவர்ஜிதாய = செறுக்கற்றவனாய்; வர்ணாஶ்ர மாணாம் = பிரம்மசாரியாதி ஆச்சிரமத்தவர் கட்கும்; கு[2]ரவே = நேமிப்பவனாகிய; தஸ்மை = அந்த ரகுமன்னனை நோக்கி; வர்ணீ = பிரம்மசாரியாகிய; ஸঃ = அந்த கௌத்ஸமுனிவர்; ப்ரஸ்துதம் = அப்போது தேவையைக் குறித்து; ஆசசக்ஷே = கூறினார்.

(க-ரை) யாதொரு குறையின்றி சாத்திர முறைப்படி வேள்வியை முடித்தவனும் செறுக்கற்றவனும், வருணாச்சிரமத்தை நடத்தி வைப்பவனுமாகிய ரகுவை நோக்கி, கௌத்ஸரிஷி அப்போதுள்ள தேவையைக் குறித்து விண்ணப்பிக்கத் தொடங்கினார். (மேன்மேலுயர்ச்சியணி)

ரு ॥ ஸமாப்த வித்[2]யேந மயா மஹர்ஷிர்
விஜ்ஞாபிதோஃபூ[3]த்[2]கு[2]ரு த[2]க்ஷிணாய ।
ஸமே சிராயாஸ்க[1]லிதோப சாராம் ।
தாம் ப[3]க்திமே வாக[2]ணயத் புரஸ்தாத் ॥ 20

(ப-ரை) ஸமாப்த=முடிக்கப்பட்ட; வித்[2]யேந=பதிநான்கு வித்தைகளுடைய; மயா=என்னால்; மஹர்ஷிஃ=வரதந்து ரிஷியின் கு[2]ரு த[2]க்ஷிணாயை=குருதக்ஷிணையைப் பெற; விஜ்ஞாபிதஃ= விண்ணப்பித்தவர்; அபூ[3]த்=ஆனார்; ஸஃ=அந்த குருவாய வரதந்து ரிஷியும்; சிராய=கொஞ்சங்காலமாக; அஸ்க[1]லித=இடைவிடாத; உபசாரம்=உபசரணையுள்ள; மே=எனது; தாம்=அந்த; ப[3]க்திமேவ=அன்பையே; புரஸ்த[1]ாத்=முதலில்; அக[2]ணயத்= எண்ணினார்.

(க-ரை) நான் எல்லா வித்தைகளும் கற்றபின்பு குருதக்ஷிணையைப் பெற்றுக்கொள்ளும்படி விண்ணப்பித்தேன். அவர் முதலில் நான் செய்துவந்த பத்தியும், உபசாரங்களே போதுமென்று கூறினார். (வீறுகோளணி)

சு ॥ நிர்ப[3]ந்த[3] ஸஞ்ஜாத ருஷாஃர்த்[1] கார்ஶ்ய
மசிந்த யித்வர குருணாஃஹ முக்தஃ ।
வித்தஸ்ய வித்[2]யா பரிஸங்க்[1]ய யாமே
கோடீஶ்ச தஸ்ரெள த[2]ஶ சாஹரேதி ॥ 21

(ப-ரை) நிர்ப[2]ந்த[3]=பலவந்தத்தால்; ஸஞ்ஜாத=பிறந்த; ருஷா=கோபமுற்ற; குருணா=வரதந்து முனிவரால்; அர்த[1]= பொருளின்; கார்ஶ்யம்=வறுமையை; அசிந்தயித்வா=எண்ணாமலேயே; ஹம்=நான்; வித்தஸ்ய=பொருளின்; சதஸ்ரஃ=நான்காய; தஶ=பத்து; கோடீ=கோடிகளை; மே=எனக்கு; ஆஹர= கொண்டுவா; இதி=என்று; வித்[2]யாபரி ஸங்க்[1]யயா=பதிநான்கு வித்தைகளையொட்டி; உக்தஃ=சொன்னார்.

(க-ரை) நான் குருதக்ஷிணையைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று பலவந்தம் செய்ததால், வரதந்து முனிவருக்குக் கோபம் வந்தது. நான் வறுமையுற்றவனென்று தெரிந்தும் வித்தை ஒன்றுக்கு ஒருகோடி வீதம் பதிநான்கு வித்தைகளுக்கும் பதிநான்கு கோடி திரவியம் கொண்டுவரும்படி என்னைப் பணித்தார். (பதிநான்கு வித்தைகளாவன; வேதங்கள் நான்கு, வேதாங்கங்கள் ஆறு, மற்றும்

தற்கம் மீமாம்ஸம், புராணம், தரும சாத்திரம்— ஆக பதிநான்கு (கூடாமையணி)

சு ॥ ஸோऽஹம் ஸபர்யா விதி³ப³ாஜநேந
மத்வா ப³வந்தம் ப்ரபு³ ஶப்³த³ஶேஷம் ।
அபி³யுத்ஸஹே ஸம்ப்ரதி நோபநோத்³து³
மல்பே தரத்வாச் ச்¹ருத நிஷ்க்ர யஸ்ய ॥ 22

(ப-ரை) ஸோऽஹம் = அந்த நான்; ஸபர்யா = பூசை; விதி³ = செய்தலின்; ப³ாஜநேந = மட்பாத்திரத்தால்; ப³வந்தம் = உன்னை: ப்ரபு³ ஶப்³த³ = மன்னனென்று சொல்மட்டும்; ஶேஷம் = மிகுந்துள்ளவனாம்; மத்வா = தெரிந்தும்; ஶ்ருதநிஷ்க்ரயஸ்ய = வித்தையின் மதிப்பாகிய பணம்; அல்பேதரத்வாத் = மிகவும் பெரிதாக உள்ளபடியால்; ஸம்ப்ரதி = இப்போது; உபரோத்³து³ம் = வற்புறுத்துவதற்கு; நாப்³யுத்ஸஹே = சகியேன்.

(க-ரை) நீ என்னை மட்பாத்திரங்கொண்டு உபசரித்ததனாலேயே பெயரளவில் மன்னனாயுள்ள உன்னிடம் பொருளேதும் இல்லையென்றுணர்ந்தும் குருதக்ஷிணை மிகப் பெரிய தொகையாக உள்ளதாலும் அதை தற்போது உன்னிடம் இரவ எனது மனம் இடங்கொடுக்கவில்லை. (எதிர்மறையணி)

சு ॥ இத்த¹ம் த்³விஜேந த்³விஜராஜ காந்தி
ராவேதி³தோ வேத³ வித³ாம் வரேண ।
ஏநோ நிவ்ரித் தேந்த்³ரிய வ்ரித்திரேநம்
ஜக³ாத³ பூ³யோ ஜக³தே³க நாத¹ஃ ॥ 23

(ப ரை) த்³விஜராஜ காந்திஃ = சந்திரன் போன்ற பிரகாசமுள்ள; ஏநஃ = பாபங்களால்; நிவ்ரித்தஃ = திருத்தப்பட்ட; இந்த்³ரிய = புலன்களின்; வ்ரித்திஃ = தொழில்களுடைய; ஜக³தே³கநாத¹ஃ = உலகிற்கெல்லாம் ஒரே மன்னனான ரகுமாமன்னன்; வேத³வித³ாம் = வேதமறிந்தவர்களுள்; வரேண = சிறந்தவராய; த்³விஜேந = கௌத்ஸரிஷியால்; இத்த¹ம் = இவ்வாறு; ஆவேதி³தஸ்ஸந் = அறிவிக்கப்பட்டவனாய்; ஏநம் = இந்த கௌத்ஸ ரிஷிக்கு; பூ³யஃ = பின்னும்; ஜக³ாத³ = கூறினான்.

(க-ரை) சந்திரனைப் போன்ற ஒளியுள்ளவனும்; பாபங்கள் நீங்கியவனும், உலகுக்கெல்லாம் ஒரே மன்னனுமாகிய ரகுமன்னன்

மறையறிவாளர்களில் தலையாயவராகிய கௌத்ஸரிஷியின் வாக்கியங்களைக் கேட்டு இவ்வாறு பதில் கூறினான். (விரியுவமை மற்றும் புனைவுளிப்பல் பொருட்சொற்றொடரணி)

ஸு ॥ கு$^{2}$ர்வர்த$^{1}$ மர்தீ$^{1}$ ஶ்ருத பார த்$^{2}$ரிஶ்வா
ரகே$^{3}$ாஸ் ஸகாஶா த$^{2}$நவப்ய காமம் ।
க$^{2}$தோ வத$^{2}$ாந்யாந்தர மித்யயம் மே
மாபூ$^{3}$த் பரீவாதக வாவதாரঃ ॥ 24

(ப-ரை) ஶ்ருத = மறை நூல்களின்; பார = கரையை; த்$^{2}$ரிஶ்வா = பார்த்தவனும்; கு$^{2}$ர்வர்த$^{1}$ம் = குருதக்ஷிணைக்காக; அர்தீ$^{1}$ = இரப்பவன்; ரகே$^{3}$ாঃ = ரகுமன்னனுடைய; ஸகாஶாத் = அருகிலிருந்து; காமம் = வேண்டியதை; அநவாப்ய = அடையாமல்; வத$^{2}$ாந்யாந்தரம் = மற்றொரு வள்ளலை; க$^{2}$தঃ = அடைந்தார்; இதி = என்னும்; அயம் = இந்த; பரீவாத$^{2}$ = அபவாதத்தின்; நவ = புதியதோர்; அவதாரঃ = பிறவி; மே = எனக்கு; மாபூ$^{3}$த் = உண்டாகாமல் இருக்கக் கடவது.

(க-ரை) மறைநூல்கள் கசடறக் கற்றுணர்ந்து குருதக்ஷிணைக்காக ரகுமன்னனை இரப்பவேண்டி, எண்ணமீடேறாமலே திரும்பிச் சென்று, மற்றோர் வள்ளலை இறக்கச் சென்றான் என்ற அபவாதம் இல்லாமலிருக்க, எனக்கருள வேண்டும். இரப்பார்க்கு இல்லை என்பது மரணத்தைவிட அதிசயமானது. (வினை முதல் விளக்கணி)

ஸு ॥ ஸத்வம் ப்ரஶஸ்தே மஹிதே மதீ$^{2}$யே
வஸம் ஶ்சதுர்தே$^{1}$ாঃக்$^{2}$நி ரிவாக்$^{2}$ந்ய க$^{2}$ாரே ।
த்$^{3}$வித்ரீண்யஹா ந்யர்ஹஸி ஸோடு$^{3}$ மர்ஹ
ந்யா வத்$^{2}$யதே ஸாத$^{3}$யிதும் த்வத$^{2}$ர்த$^{1}$ம் ॥ 25

(ப-ரை) ஸঃ = அப்படிப்பட்ட; த்வம் = நீ; மஹிதே = பூசிக்கப்பட்ட; ப்ரஶஸ்தே = மேலாய; மதீ$^{2}$யே = எனது; அக்$^{2}$நி = க$^{2}$ார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி என்னும் மூன்று வந்நிகளின்; அகாரே = சாலையில்; சதுர்த$^{1}$ = நான்காவதாய; அக்$^{2}$நிரிவ = யஜ்ஞேசுவரனைப் போல்; வஸந் = இருந்துக்கொண்டு; த்$^{2}$வித்ரீணி = இரண்டு மூன்றாகிய; அஹாநி = நாட்களை; ஸோடு$^{3}$ம் = பொருத்துக் கொள்ள; அர்ஹஸி = தகுந்தவன்; ஹே அர்ஹந் = ஓ, தொழத்தக்க கௌத்ஸமாரிஷீ! த்வத் = உமது; அர்த$^{1}$ம் = விழைவை; ஸாத$^{3}$யிதும் = நிறைவேற்ற; யாவத்$^{2}$யதே = முயலுகிறேன்.

(க-ரை) என்னிடம் இரக்கவந்த நீர் எனது மூவக்கினிகளுடன் நான்காமவராக எனது சாலையில் இரண்டு மூன்று நாட்கள் தங்குவீராக. உமது கோரிக்கையை நிறைவேற்ற முயலுகிறேன். (வேண்டலணி)

சு ॥ ததே1தி தஸ்யா விதத1ம் ப்ரதீதஃ
ப்ரத்யக்2ரஹீ த்ஸங்கர மக்2ர ஜந்மா ।
க2ா மாத்தஸாராம் ரகு3ரப்ய வேக்ஷ்ய
நிஷ்க்ரஷ்டு மாத1ம் சகமே குபே2ராத் ॥ 26

(ப-ரை) அக்2ரஜந்மா = அந்தணனாகிய கௌத்ஸரிஷி; ப்ரதீதஸ்ஸந் = அன்பு மேற்கொண்டவனாகிய; தஸ்ய = ரகுமன்னனுடைய; அவிதத1ம் = கடக்க முடியாத; ஸங்க2ரம் = சூளுரையை (கேட்டு) ததே1தி = அப்படியே ஆகட்டுமென; ப்ரத்யக2ரஹீத் = உடன்பட்டான்; ரகு3ரபி = ரகுமன்னனும்; க2ாம் = பூமியை; ஆத்த = பெறப்பட்ட; ஸாராம் = பொருளுடையதாக; அவேக்ஷ்ய = பார்த்து; குபே2ராத் = குபேரனால்; அர்த1ம் = பொருளை; நிஷ்க்ரஷ்டும் = பெற்றுவர; சகமே = விரும்பினான்.

(க-ரை) அவ்வந்தணன் மகிழ்வுற்றவனாய் அவனது சூளுரையை ஒப்புக்கொண்டான். ரகுமன்னனும் பூமியிலிருந்து பொருளெல்லாம் தான் பெற்றெடுத்து விட்டதால், அப்பொருளை குபேரனிடமிருந்து பெறவேண்டுமென்று எண்ணினான். (உய்த்துணர்வணி)

சு ॥ வஶிஷ்ட மந்த்ரோ க்ஷணஜ ப்ரப3ாவாத்
உத2ந்வ த2ாகாஶ மஹீத3ரேஷு ।
மருத்ஸக1 ஸ்யேவ ப2லாஹகஸ்ய
க2திர் விஜக்3நே நஹி தத்2ரத1ஸ்யா ॥ 27

(ப-ரை) வஶிஷ்ட = வசிஷ்டருடைய; மந்த்ர = மந்திரத்துடன்; உக்ஷண = தெளித்ததனால்; ஜ = பிறந்த; ப்ரபாவாத் = திறமையால்; உத2ந்வத் ஆகாஶ மஹீத3ரேஷு = கடல் ஆகாயம் மலைகளில்; மருத் ஸக்1யஸ்ய = காற்றின் நண்பனாகிய; ப2லாஹகஸ்யேவ = மேகம் போன்று; தத் = அந்த ரகுமன்னனுடைய; ரத1ஸ்ய = தேரின் க2திஃ = போகுதல்; விஜக்3நே நஹி = தடுக்க முடியாது போயிற்று.

(க-ரை) வசிட்டர் மந்திர ஜலத்தை தெளித்ததால் பிறந்த ரகு மன்னுடைய தேர், கடல் ஆகாயம் மலைகளிலும் வாயுவின் உதவியால் மேகங்கள் பறப்பதுபோல் எந்த தடுத்தலுமின்றி சென்றது. (வியப்பணி)

சு ॥ அத²ாதி² ஶிஶயே ப்ரயதঃ ப்ரதே³ாஷே
ரத²ம் ரகு³ঃ கல்பித மஸ்த்ர க³ர்ப³ம் ।
ஸாமந்த ஸம்ப³ாவநு யைவ தீ³ரঃ
கைலாஸ நாத²ம் தரஸா ஜிகீ³ஷுঃ ॥ 28

(ப-ரை) அத=அப்பால்; ப்ரதே³ாஷே=ஸாயங்காலத்தில்; ப்ரயதঃ=பரிசுத்தனாகிய; தீ³ரঃ=துணிவுள்ளவனாகிய; ரகு³ঃ=ரகு மன்னன்; ஸாமந்த=அரசன் மட்டுமே என்னும்; ஸம்ப³ாவநாயைவ=புத்தியால்; கைலாஸ நாத²ம்=குபேரனை; தரஸா=வலிமையால் ஜிகீ²ஷுঃஸ்ஸந்=வெல்லும் எண்ணங்கொண்டு; கல்பிதம்=ஆயத்தமான; அஸ்த்ரக³ர்ப³ம்=படைகளை வயிற்றில் கொண்டு; ரத²ம்=தேரில்; அதி³திஸ்யே=படுத்தான்.

(க-ரை) பிறகு ரகு மன்னன் தன் தேரில் அம்புகளை வைத்துக் கொண்டு, குபேரனும் அசுரர்களில் ஒருவனே என்றெண்ணி, அலட்சியமான பார்வையுடன் வெல்லவேண்டுமென்ற ஆசையுடனும் துணிவும் உள்ளவனாய், பரிசுத்தனாக சாயங்காலம் அத்தேரில் படுத்துக் கொண்டான். (உய்த்துணர்வணி)

சு ॥ ப்ராதঃ ப்ரயாணாபி³ முக²ாய தஸ்மை
ஸவிஸ்மயாঃ கோஶக்³ரிஹே நியுக்தாঃ ।
ஹிரண்மயீம் கோஶக்³ரிஹஸ்ய மத்³யே
வ்ரிஷ்டிம் ஶஶம்ஸுঃ பதிதாம் நப²ஸ்த²ঃ ॥ 29

(ப-ரை) ப்ராதঃ=வைகறையில்; ப்ரயாண; பயணத்திற்கு; அபி³முக²ாய=தயாரான; தஸ்மை=அந்த ரகுவை நோக்கி; கோஶக்³ரிஹே=கருவூலவரையில்; நியுக்தாঃ=வைக்கப்பட்டிருந்த ஆட்கள்; ஸவிஸ்மயஸ் ஸந்தঃ=வியந்தவர்களாய்; கோஶக்²ரிஹஸ்ய=கருவூலத்தின்; மத்³யே=நடுவில்; நப³ஸ்த²ঃ=ஆகாயத்திலிருந்து; பதிதாம்=கொட்டிய; ஹிரண்மயீம்=பொற்காசுகளின்; வ்ரிஷ்டிம்=மழையைப் பற்றி; ஶஶம்ஸঃ=செப்பினார்கள்.

(க-ரை) வைகரையில் பிரயாணஞ் செய்ய வெண்ணியிருந்த ரகுமன்னனிடம், கருவூல அதிகாரிகள் வந்து, வியந்தவர்களாய், 'நம் கருவூலத்தில் விண்ணிலிருந்து பொற்காசுகள் மாரியாகப் பொழிந்த' தென நவின்றனர். (நிகழ்வினவிற்சியணி)

ஸ ॥ தம் பூ³பதிர் ப³ாஸுர ஹேமராஶிம்
லப்²த³ம் குபே²ர த³பி³யாஸ்ய மாநாத் ।
தி³தே²ஶ கௌத்ஸாய ஸமஸ்து மேவ
ஶ்ரிங்க³ம் ஸுமேரோ ரிவ வஜ்ர பி³ந்நம் ॥ 30

(ப-ரை) பூ³பதி:=ரகுமன்னன்; அபி³யாஸ்யமாநாத்=எதிர்க் கொண்ட; குபே²ராத்=குபேரனால்; லப்²த³ம்=அடைந்த; வஜ்ர=வஜ்ராயுதத்தால்; பி³ந்நம்=துண்டிக்கப்பட்ட; மேரோ:=மேருமலையின்; ஶ்ரிங்கம்இவஸ்ஸந் = சிகரமோவென இருக்கும்; தம்=அந்த; ப³ாஸுர ஹேமராஶிம்=ஒளிவீசும் யொன்நாணயங்களை; ஸமஸ்தமேவ = எல்லாவற்றையுமே; கௌத்ஸாய = கௌத்ஸ ரிஷிக்கு; தி³தே²ஶ=கொடுத்தான்.

(க-ரை) ரகுமன்னவன் யாரைநோக்கிப் பயணம் மேற் கொள்ள விருந்தானோ அந்த குபேரனால், தன் வஜ்ஜிராயுதத்தால் துண்டிக்கப்பட்டமேரு மலையைப் போல் ஒளிவீசிக்கொண்டிருக்கும் பொன் நாணயங்கள் அனைத்தும் கௌத்ஸன் கோரியதற்கும் அதிகமாய் அவனுக்குக் கொடுத்தான் (உவமையணி)

ஸ ॥ ஜநஸ்ய ஸாகேத நிவாஸிந ஸ்தௌ
த்³வா வபூ³தா மபி³நந்த்³ய ஸத்வௌ ।
கு³ருப்ர தே³யாதி³க நிஸ்ப்ரிஹோ஽ர்தீ²
ந்ரிபோ஽ர்தி² காமாத³தி³க ப்ரத³ஶ்ச ॥ 31

(ப-ரை) ந்ரிப:=ரகுமன்னனும்; கௌத்ஸ:=கௌத்ஸரிஷியும்; த்³வாவபி=இவர்களிருவரும்; ஸாகேத=அயோத்திமா நகரில்; நிவாஸிந:=வசிக்கும்; ஜநஸ்ய:=மக்களுக்கு; அபி³நந்த்³ய=சந்தோஷிக்கக் கூடிய; ஸத்வௌ=தொழில்கள் உடையவர்கள்; அபூ³தாம்=ஆயினர்; அர்தீ²=இரந்த கௌத்ஸ ரிஷி; கு³ரு=ஆசாரியாகிய வரதந்து ரிஷிக்கு; ப்ரதே³யகொடுக்க வேண்டிய பொருளை விட; அதி³க=மிகுதியான பொருள்மீது; நிஸ்ப்ரிஹ:=விரும்பாதவன்; ந்ரிபஶ்ச=ரகுமன்னனும்; அர்தி²=யாசகனான கௌத்

ஸரிஷியின்; காமாத்=விரும்பியதைவிட; அதி³கப்ரத³꞉=கொடுத்தவன் ஆனான்.

(க-ரை) அயோத்திமா நகரவாசிகள்; கௌத்ஸ மகரிஷிக்குக் கொடுக்க வேண்டிய திரவியத்தைவிட அதிகம் பெற இசைவில்லா திருத்தலும், இறந்தவர் கோரிய பொருளைவிட அதிகம் கொடுத்த ரகுமன்னனுடைய உதார குணத்தையும் கண்டு மிகவும் மகிழ்வுற்றனர். (மிகுதினவிற்சியணி)

ஸு ॥ அதே²ாஷ்ட்ர வாமீ ஶதவாஹிதார்த்²ம்
ப்ரஜேஶ்வரம் ப்ரீதமநா மஹர்ஷி꞉ ।
ஸ்ப்ரிஶந் கரேணாநத பூர்வ காயம்
ஸம்ப்ரஸ்தி²தோ வாச முவாச கௌத்ஸ꞉ । 32

(ப-ரை) அத²=பொருளீந்த பிறகு; ப்ரீத=உவந்த; மநா꞉=மனமுடைய; மஹர்ஷி꞉=மகாரிஷியான; கௌத்ஸ꞉=கௌத்ஸன்; ஸம்ப்ரஸ்தி²தஸ்ஸந்=போகின்றவனாய்; உஷ்ட்ர=ஒட்டகங்கள்; வாமீ=பெண் புரவிகள்; ஶத=வெகுவாயவற்றின்மீது; வாஹித=சுமக்கப்பட்ட; அர்த²ம்=பொருளுடைய; ஆநத=வளைந்த; பூர்வ காயம்=முன்னுடலுடைய; ப்ரஜேஶ்வரம்=ரகுமன்னனை; கரேண=கைகளால்; ஸ்ப்ரிஶஸ்ஸந்=தொடுகின்றவனாய்; வாசம்=சொற்கள் உவாச=சொன்னான்.

(க-ரை) பணமீந்த பிறகு உவந்த மனதுடைய கௌத்ஸ ரிஷியுடன் அந்த பொருளை பல ஒட்டகங்கள், குதிரைகள் மீது அனுப்பிவைத்து, வளைந்து கீழ்ப்படிந்த பாவனையோடிருக்கும் ரகுமன்னனை அந்தரிஷி தன் கைகளால் தொட்டு உலகவியல்பில் வார்த்தைகளைக் கூறினான். (நிரநிறையணி)

ஸு ॥ கிமத்ர சித்ரம் யதி²காம ஸூர்பூ³ர்
வ்ரித்தே ஸ்தி²த ஸ்யாதி¹பதே꞉ ப்ரஜாநாம் ।
அசிந்தநீய ஸ்தவது ப்ரப³ாவோ
மநீஷிதம் த்³யௌரபி யேந து³க்³த³ா ॥ 33

(ப-ரை) வ்ரித்தே=நான்கு விதமான அரசு விருத்திகளில்; ஸ்தி¹தஸ்ய=இருக்கும்; ப்ரஜாநாம் அதி³பதே꞉=மக்களின் காவலனாகிய அரசனுக்கு; பூ³மி꞉=நிலம்; காம=விழைந்தவற்றை; ஸூர்யதி=கொடுக்கவல்லது; அத்ர=இந்த பொருளில்; சித்ரம்=

வியப்பு; கிம் = என்ன; கிம்து = மற்றும் என்னவெனில்; தவ = உன்னுடைய; ப்ரஜாவஸ்து = மகிமையோ; அசிந்த்யஃ = எண்ண முடியாதது; யேந = எந்த உன்னால்; த்³யௌ ரபி = ஆகாயமும்; மநீஷிதம் = கோரியதும்; து³க்³த⁴ா = கறக்கப்பட்டதோ.

(க-ரை) நியாயமான முறையில் பொருள் தேடல், பெருக்குதல் காத்தல், நற்காரியங்கட்குப் பயன்படுத்தல் ஆகிய நான்கு தொழில்கள் உடைய அரசனுக்குப் பூமியானது விளைந்த பொருட்களை ஈவது இயற்கை. உனக்கு ஆகாயம் கூட கோரிய பொருள்கள் ஈதலினால் உனது மகாத்மியம் அற்புதமானது. ஆகையால், வருணிக்க முடியாததா யிருக்கிறது. (உயர்வுனவிற்சியணி)

சு ॥ அஶாஸ்ய மங்யத் புநருக்த பூ⁴தம்
ஶ்ரேயாம்ஸி ஸர்வாண்யதி³ ஜக்³முஷஸ்தே ।
புத்ரம் லப⁴ ஸ்த்வாத்ம கு³ணாநு ரூபம்
ப⁴வந்த மீட்³யம் ப⁴வதஃ பிதேவ ॥ 84

(ப-ரை) ஸர்வாணி = எல்லாவிதமான; ஶ்ரேயாம்ஸி = யானை குதிரை இராச்சியம் முதலிய மங்களங்களனைத்தும்; அதி³ ஜக்³முஷஃ = அடைந்த; தே = உனக்கு; அந்யத் = புத்திரர்களல்லாது; ஆஶாஸ்யம் = வாழ்த்துகளால் பெறத்தக்கது; புனருக்த பூ⁴தம் = இருதரம் சொல்வதாம்; கிம்து = மற்றும் என்னவெனில்; ஈட்³யம் = துதிக்கத் தக்கவனாகிய; ப⁴வந்தம் = உன்னை; ப⁴வதஃ = உனது; பிதேவ = தகப்பனார் போல்; ஆத்ம = உன்னுடைய; குணாநுரூபம் = குணங்களுக்கு நிகராய; புத்ரம் = மகனை; லப⁴ஸ்வ = அடைவாயாக.

(க-ரை) யானைகள் குதிரைகள் நாடு முதலிய எல்லா ஐசுவரியங்களும் உள்ள உனக்கு மகப்பேறு உண்டாக வேண்டுமென்பது தவிர்த்து வேறு வாழ்த்துக்கள் இருமுறைக் கூறுவதாகும். (அதாவது பயனற்றது) அதனால், போற்றத்தக்க நீ, உனது தகப்பனாருக்கு எப்படியோ அதுபோல் உனக்கு மகன் பிறக்கக் கடவது. (நிகழ்வில விற்சியணி)

சு ॥ இத்த²ம் ப்ரயுஜ்யாஶிஷ மக்³ரஜந்மா
ராஜ்ஞே ப்ரதீயாய கு³ரோஸ்ஸகாஶம் ।
ராஜாபி லேபே⁴ ஸுதமாஶு தஸ்மா
த்³ஆலோக மர்காதி³வ ஜீவலோகஃ ॥ 35

(ப-ரை) அக்[2]ரஜந்மா = அந்தணனாகிய கௌத்ஸன்; இத்த[1]ம் = இவ்விதம்; ராஜ்ஞே = ரகுமன்னனை; ஆஶிஷம் = ஆசீர்வாதம்; ப்ரயுஜ்ய = பிரயோகித்து; கு[2]ரோः = வரதந்து ரிஷியின்; ஸகாஶம் = அருகில்; ப்ரதீயாய = அடைந்தான்; ராஜாபி = ரகுமன்னனும்; ஜீவலோகः = உயிரினங்கள்; அர்காத் = பரிதியால்; ஆலோகமிவ = ஒளிபோல்; தஸ்மாத் = அவ்வாசியால்; ஆஶு = சீக்கிரம்; ஸூதம் = மகனை; லேபே[3] = அடைந்தான்.

(க-ரை) இவ்வாறு கௌத்ஸன் ரகுமன்னனை வாழ்த்தி தன் ஆசானிடத்திற்குச் சென்றான். ரகுமகா ராஜனும், மக்கள் சூரியோதயத்தால் ஒளிபெறுவதுபோல், முனிவரின் வாழ்த்தால் ஒரு மகனை அடைந்தான். (நிகரெடுத்துக் காட்டுவமையணி)

ஸு ॥ ப்[2]ராஹ்மே முஹூர்தே கிலதஸ்ய தே[2]வீ
குமார கல்பம் ஸுஷுவே குமாரம் ।
அதः பிதா ப்ராஹ்மண ஏவ நாம்நா
தமாத்ம ஜந்மாந மஜம் சகார ॥ 36

(ப-ரை) தஸ்ய = அந்த ரகுமன்னனுடைய; தேவி = பட்டத்தரசி; ப்[2]ராஹ்மே = விடியற்காலையில்; முஹூர்தே = அஜம் என்னும் நல்லோரையில்; குமாரகல்பம் = முருகனைப் போன்ற; குமாரம் = மகனை; ஸுஷுவே கில = பெற்றாளன்றோ; அதः = இதனால், பிதா = தகப்பனான ரகுமன்னன்; ப்ராஹ்மண ஏவ = பிரம்மதேவனுடைய; நாம்நா = பெயரால்; தம் = அந்த; ஆத்ம ஜந்மாநம் = மகனை; அஜம் = அஜனென்னும் பெயரால்; சகார = அழைத்தான்.

(க-ரை) பிரம்ம முகூர்த்தத்தில் (அதாவது அஜமென்னும் பெயருடைய சூரிய உதய காலத்தில் ரகுமன்னனுடைய பட்டத்தரசி குமரனைப் போன்ற ஓராண் மகனை ஈன்றெடுத்தாள், அதனால், தகப்பனாரான ரகுமன்னன், அவனுக்கு பிரம்மாவின் பெயரான 'அஜன்' என்னும் பெயர் சூட்டினான். (நிகழ்வினவிற்சியணி)

ஸு ॥ ரூபம் ததோ[2]ஜஸ்வி ததே[2]வ வீர்யம்
ததே[2]வ நைஸர்கி[2]க முந்நதத்வம் ।
நாகாரணா த்ஸ்வா ர்பி[3]தே[2] குமாரः
ப்ரவர்திதோ தீ[3]ப இவ ப்ரதீ[2]பாத் ॥ 37

(ப-ரை) ஓஜஸ்வி = ஒளியுடன் கூடிய; ரூபம் = உடல்; ததே²வ = அந்த தகப்பனாரைச் சார்ந்ததே; வீர்யம் = வலிமை; ததே²வ = அத்தகப்பனாரைப் போன்றதே; உந்நதத்வம் = பெருமையும்; ததே²வ = அந்த தகப்பனாரைப் போலவே; குமாரஃ = பாலகன்; ப்ரவர்திதஃ = எரிக்கப்பட்ட; தீபஃ = தீபம்; ப்ரதி³பாதி³வ = ஏற்றி வைத்த தீபத்தைவிட; ஸ்வாத் = தன்னுடைய; காரணாத் = தகப் பனை விட; நபி²பி³தே² = வேறாகவில்லை.

(க-ரை) அக்குமாரன் வலிமையுள்ள உடலாலும், துணிவாலும், சுயமாகிய உயர்ச்சியாலும், தீபம் ஒன்றிலிருந்து மற்றொன்றை ஏற்றுவதுபோல் எல்லாவிதத்திலும் தகப்பனாரை ஒத்திருந்தான். (புகழ்பொருளுவமையணி)

சு ॥ உபாத்த வித்²யாம் விதி³வத்² கு²ருப்³யஃ
தம் யௌவ நோத்²பே³த² விசேஷ காந்தம் ।
ஸ்ரீஸ் யாபி³லாஷாஃபி கு²ரோ ரநுஜ்ஞாம்
தீ³ரேவ கந்யாபிது ராச காம்க்ஷே ॥ 38

(ப-ரை) கு²ருப்³யஃ = ஆசானால்; விதி³வத் = மறைகளின் கூற்றுக்கேற்ப; உபாத்த = அடைந்த; வித்²யாம் = கல்விகள் உடைய; யௌவன = இளமையின்; உத்²பே³த³ = பிறப்பாலாய; விசேஷ = அதிசயத்தால்; காந்தம் = மனங்கவரும்; தம் = அந்த அஜமன்ன னிடம்; அபி³லாஷா = ஆசையுடன் கூடியுள்ள; ஸ்ரீஃ = அரசென்னும் இலக்குமி; தீ³ரா = நிலைபெற்ற மேன்மையான சித்தமுள்ள; கன்யா = கன்னி; பிதுரிவ = தகப்பனைப் போன்று; கு²ரோஃ = ரகு மன்னனுடைய; அனுஜ்ஞாம் = அனுமதியை; ஆசகாம்க்ஷ = ஆசைக் கொண்டான்.

(க-ரை) ஆசானால் எல்லா வித்தைகளும் கற்று, யௌவனம் துவங்கியதால் ஒளிக்கும் அஜனுக்கு நிலத்தை, உயர்ந்தமனதுடைய கன்னிகையை, திருமணத்திற்கு தகப்பனாரின் தூண்டுதலை விழைவது போல் அரசெனுமிலக்குமி இவனை அடைய தந்தையாரின் அனுமதியை நோக்கினாளோ என்பது போலிருந்தது. அதாவது இளவரசு பட்டத்துக்கு தகுதியுடையவனானான்). (தற்குறிப்பணி)

சு॥ அதே¹ஶ்வரேண க்ரத¹ கைஶிகாநாம்
ஸ்வயம்வ ரார்த¹ம் ஸ்வஸு ரிந்து² மத்யாஃ ।
ஆப்தஃ குமாராநய நோத்ஸு கேந
பே³ாஜேந தூ²தோ ரக³வே விஸ்ரிஷ்டஃ ॥ 39

(ப-ரை) அத1=பிறகு; ஸ்வஸு=தங்கையான; இந்து2மத்யா:=இந்துமதி தேவியின்; ஸ்வயம்வரார்த1ம்=சுயம்வரத்திற்காக; குமார=அஜமாமன்னனின்; ஆநயந=அழைப்பில்; உத்ஸுகே=ஆசையுள்ளவனாகிய; க்ரத1கைசிகாநாம்=வித2ர்ப2நாட்டிற்கு; ஈச்வரேண=அரசனான; போ2ஜேந=போஜ மன்னனுக்கு; ஆப்த:=நண்பர்களாகிய; தூ2த:=தூதுவன்; ரக3வே=ரகுமனனனிடம்; விஸ்ப்ரிஷ்ட:=அனுப்பப்பட்டான.

(க-ரை) பிறகு விதர்ப நாட்டரசனாகிய போஜமகாராஜன் தன் தங்கையான இந்துமதி சுயம்வரத்திற்கு அஜமன்னனை அழைக்க விரும்பி ரகுமன்னனிடத்திற்கு ஒரு தூது அனுப்பினான். (ஏதுவணி)

சு॥ தம் ச்லாக்3ய ஸம்ப2ந்த3 மஸௌ விசிந்த்ய
த2ாரக்ரிய யோக்2ய த2சம் ச புத்ரம் ।
ப்ரஸ்த1ாபயாமாஸ ஸஸைந்ய மேந
ம்ரித்2த3ாம் வித2ர்ப3ாதி3ப ராஜத3ாநீம் ॥ 40

(ப-ரை) அஸௌ=இந்த ரகுமன்னன்; தம்=போஜராஜனை; ச்லாக்3ய=விழையத்தக்க; புத்ரஞ்ச=மகனை; த2ாரக்ரியா=திருமணத்திற்கு; யோக்ய=தகுதியுள்ள; த2சம்=வயதுடையவனாக; விசிந்த்ய=ஆலோசித்து; ஸ ஸைந்யம்=படைகளுடன்; ஏதம்=இந்த மகன் அஜமாமன்னனை; ரித்2த3ம்=நிறைவுற்ற; வித3ர்ப3ாதிப=போஜமன்னனுடைய; ராஜத3ாநீம்=தலைநகர் நோக்கி; ப்ரஸத1ாபயாமாஸ=அனுப்பி வைத்தான்.

(க-ரை) ரகுமன்னன் நல்ல மரபுடைய போஜனுடைய சம்மந்தம் செய்தல் தகுதியாமென எண்ணி, திருமணத்திற்குத் தக்க பருவமடைந்த அஜனை, தக்க படைகளுடன் எல்லா பொருள்களாலும் நிறைவு பெற்றுள்ள போஜனுடைய தலைநகருக்கு அனுப்பி வைத்தான். (எளிதின்முடிபணி)

சு॥ தஸ்யோபகார்யா ரசிதோபசாரா
வங்யேதரா ஜாநபதே2ா பத2ா பி3 ।
மார்கே2 நிவாஸா மநுஜேந்த்2ர ஸூநோ:
ப2ூ3வு ருத்2யாந விஹார கல்பா ॥ 41

(ப-ரை) உபகார்யா=அரசர்க்குகந்த கொடி முதலியவற்றால்; ரசித=செய்யப்பட்ட; உபசாரா:=படுக்கை முதலிய உபசாரங்கள்

உள்ள; ஜாநபத²ঃ = நாடுகளிலிருந்து வந்தவர்களின்; உபத¹ாபி³ঃ = காணிக்கைகளால்; வந்யேதராঃ = காட்டில் பிறவாதவனாகிய; மனுஜேந்த்³ரஸ்ய நேராঃ = அஜமன்னனுடைய; மார்கே³ நிவாஸঃ = வழியில் உள்ள இடங்கள்; உத்யாந = பூங்காக்களென்னும்; விஹாரகல்பாঃ = சுற்றுலாக்களுக்கு நிகரானவைகளாய்; ப³பூ⁴வுঃ = ஆயின.

(க-ரை) போஜமன்னன் அஜமன்னனுக்கு வழியில் தண்ணீர் வசதியும், உலாவிடங்களும், பூங்காவனங்கள் போன்ற விடங்களில் அரசர்க்குகந்த குடில்களை ஏற்படுத்தி அவற்றில் மஞ்சங்கள் முதலியவற்றை ஏற்படுத்தி, பட்டணங்களிலிருந்து வந்த உணவு பொருட்கள் முதலியவையும் மற்றெல்லா சவுகரியங்களையும் ஏற்படுத்தி, காட்டில் விடுதி செய்ததுபோல் தெரியாதிருக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. (நிகழ்வினவிற்சியணி)

ஸ॥ ஸ நர்மத³ா ரோத³ஸி ஶீகரார்த்³ரைঃ
மருத்³பி⁴ ராநர்தி¹த நக்தமாலே ।
க்லாந்தம் ரஜோ தூ⁴ஸர கேதுஸைந்யம்
நிவேஶயாமாஸ விலங்கி⁴ தாத்⁴வா ॥ 42

(ப-ரை) விலங்கி⁴த = தாண்டப்பட்ட¹ அத்⁴வா = வழியுடைய; ஸঃ = அந்த அஜமகாராஜன்; ஶீகர = திவலைகளால்; ஆர்த்³ர = நனைக்கப்பட்ட; மருத்³பி⁴ঃ = காற்றினால்; ஆநர்தி¹த = அசைந்துக் கொண்டிருக்கும்; நக்தமாலே = புங்கு மரங்கள் உள்ள; நர்மத³ா = நருமதை ஆற்றின்; ரோத³ஸி = கரையில்; க்லாந்தம் = சோர்வுற்ற; ரஜঃ = தூசியால்; தூ⁴ஸர = சாம்பல்நிறமுற்ற; கேது = கொடிகளுடைய ஸைந்யம் = படையை; நிவேஶயாமாஸ = நிறுத்தினான்.

(க-ரை) திவலைகளால் நனைந்த காற்றினால் அசைந்துக் கொண்டிருக்கும் புங்கு மரங்களுடைய நருமதை யாற்றங்கரையில் அஜமன்னவன், தூசி நிறைந்த கொடிகளை உடையவர்களும், தூரம் நடந்து களைப்புற்றவர்களாய படைகளை நிறுத்தினான். (நிகழ்வினவிற்சியணி)

ஸ॥ அதோ²ப பரிஷ்டாத்³ ப்⁴ரமரைர் ப்⁴ரமத்³பி⁴ঃ
ப்ராக் ஸூசிதாம்ஶஸ் ஸலிலப்ரவேஶঃ ।
நிர்தௌ⁴த தா³நாமல க³ண்ட³ பி⁴த்திঃ
வந்யஸ் ஸரித்தோ க³ஜ உந்மமஜ்ஜ ॥ 43

(ப-ரை) அத[1] = சேனைகளை நிறுத்தி யபிறகு; உபரிஷ்டாத் = மேலே; ப்[3]ரமரத்[2]பி[3]: = உலாவிக் கொண்டிருக்கும்; ப்[3]ரமரை: = வண்டுகளால்; ப்ராக் = எழுவதற்கு; ஸூசித = அறிவுறுத்தப்பட்ட; அந்த: = உள்ளடங்கிய; ஸலில = தண்ணீரில்; ப்ரவேஶ = நுழைந்த; நிர்தெ[3]ளத = கழுவப்பட்ட; தாந = மதஜலமுடையதாகையால்; அமல = தூய; க[2]ண்ட[2]பித்தி: = கன்னங்கள் உடைய; வந்ய: = காட்டில் பிறந்த; க[2]ஜ: = யானை; ஸரித்த = நர்மதா நதியிலிருந்து; உந்மமஜ்ஜ = எழுந்தது;

(க-ரை) பிறகு ஒரு காட்டுயானை அந்த நருமதையாற்றிலிருந்து மேலே கிளம்பியது. அதற்கு முன்பே அந்த யானை மூழ்கியிருந்த சங்கதி, மதஜலத்தைப் பருகுவதற்காக சூழ்ந்திருந்த வண்டுகளால் ஊகிக்கப்பட்டது. அந்த யானை எழுந்தபோது அதன் கன்னங்களிலிருந்த மதஜலமானது கழுவப்பட்டது போல் ஆயிற்று. (பொருட்பின்வருவிளக்கணி)

சு॥ நிஶ்ஶேஷ விக்ஷாளிதத[4]ாது நா஽பி
வப்ரக்ரியா ம்ருக்ஷவத ஸ்த[3]டேஷு ।
நீலோர்த்[3]வரேக[1]ா ஶப[2]லேந ஶம்ஸந்
த[2]ந்த த்[2]வயே நாஶ்ம விகுண்டி[1]தேந ॥ 44

(ப ரை) நிஶ்ஶேஷ = பூராவும்; விக்ஷாளித = கழுவப்பட்ட; த[4]ாதுநா஽பி = தாதுப் பொருள்கள் நிறைந்ததே ஆயினும்; நீல = கருமையான; ஊர்த்[3]வரேக[1]ா = மேனோக்கிய கோடுகளால்; ஶப[3]லேந = பல வண்ணங்களுடைய; அஶ்ம = கற்களால்; விகுண்டி[1]தேந = சேதமடைந்துள்ள; த[2]ந்தத்[2]வயேந = இருகொம்புகளால் (தந்தங்களால்); ருக்ஷவத: = ருக்ஷமென்னும் மலையின்; தடேஷு = ஓரங்களில்; வப்ரக்ரியாந் = தந்தங்களால் குத்தி விளையாடுவதை; ஶம்ஸந் = அறிவிக்கும்; க[2]ஜ: = யானை; உந்மமஜ்ஜ = எழுந்தது.

(க-ரை) அந்த யானை தண்ணீரில் மூழ்குவதால் காவிக்கற்களின் சிவந்த குறிகள் மறைந்து போனாலும் தந்தங்களில் பல வண்ணங்களுடைய நீண்ட கோடுகள், ஆங்காங்கு அடிபட்டு உடைந்த குறிகளை அறிவிப்பதாய், அருகில் உள்ள ருட்சமலைச் சாரலில் தந்தங்களால் குத்தி விளையாடியதென்ற குறிப்பை அறியமுடிந்தது. (நிகழ்வினவிற்சியணி)

சு॥ ஸம்ஹார விக்ஷேப லகு[3]க்ரியேண
ஹஸ்தேவ தீராபி[3]முக[1]ஸ்ஸ ஶப்[2]த[2]ம் ।

ப²பெ³ளஸ பி³ந்த³ந் ப்³ரிஹத ஸ்தரங்க¹ாந்
வார்யர்க²ளா ப³ங்க² இவ ப்ரவ்ரித்தஃ ॥ 45

(ப-ரை) ஸம்ஹார விக்ஷேப = மடக்கி நீட்டுவதில்; லகு³ = சடிதியாகிய; க்ரியேண = தொழிலையுடைய; ஹஸ்தேந = துதிக்கையால் ஸமப்³த³ம் யத¹ாதத¹ா = தொனியுடன் கூடியதுபோல்; ப்³ரிஹதஃ = பெரிய; தரங்க²ாந் = அலைகளை; பி³ந்த³ந் = கிழிக்கும்; தீர = கரைக்கு; அபி³முக²ஃ = எதிர் நோக்கிய; ஸஃ = அந்த யானை; வாரி = யானையின் கட்டை; அர்க²ளா = அர்களமென்னும் மரத்தை; ப³ங்கே² = பெயர்த்தலில்; ப்ரவ்ரித்த இவ = ஈடுபடுவதுபோல்; ப²பெ³ள = ஒலித்தது.

(க-ரை) அந்த யானை துதிக்கையை மடக்கியும், நீட்டியும், பேரொலி உண்டாகும்படி ஆற்றின் அலைகள் மீது மோதிக்கொண்டு யானைகளின் கட்டுக்கம்பங்களை உடைத்துவிடுவதுபோல், கரைக்கு எதிர் நோக்கிச் சென்றது (தகுதியணி)

சு ॥ மைலோபமஃ மைவல மஞ்ஜரீணாம்
ஜாலாநி கர்ஷந் நுரஸா ஸபஃசாத் ।
பூர்வம் தது³த்பீடி²த வாரிராமிஃ
ஸரித் ப்ரவாஹஸ்தட முத்ஸஸர்ப ॥ 46

(ப-ரை) மைலோபமஃ = மலைக்கு நிகரான; ஸஃ = அந்த யானை; மைவல = பாசிக்கொடிகளின்; கஞ்ஜரீணாம் = கொத்துக்களின்; ஜாலாநி = திரளை; உரஸா = மார்பினால்; கர்ஷந் = இழுப்பதாகி; பஃசாத் = பிறகு; தடம் = கரையை நோக்கி; உத்ஸஸர்ப = குதித்தெழுந்தது; பூர்வம் = முன்பு; தத் = அந்த; உத்பீடி²த = யானையால் தள்ளப்பட்ட; வாரிராமிஃ = நீரின் திரளுடைய; ஸரித் = நருமதையாற்றின்; ப்ரவாஹஃ = வெள்ளம்; தடம் = கரையை நோக்கி உத்ஸஸர்ப = கிளம்பியது.

(க-ரை) மலை போலுள்ள அந்த யானை கரைக்குவரும் வேகத்தில் அவ்வாற்றின் அலைகள் முன்னாலேயே கிளம்பியது. உடன் அதன் தந்தங்களுக்கு அகப்பட்டுவரும் பாசிக்கொடிகளின் திரளுடன் அது கரைக்குவர குதித்தது. (உவமை மற்றும் தற்குறிப்பணி)

சு ॥ தஸ்யைக நாக²ஸ்ய கபோல பி³த்²யோஃ
ஜலாவக²ாஹ க்ஷணமாத்ர மாந்தா ।

வந்யேதரா நேகப த²ர்ஶநேந
புநர்தி²தீ²பே மத² து²ர்தி²ந ஶ்ரீ: ॥ 47

(ப-ரை) தஸ்ய = அந்த; ஏகநாக²ஸ்ய = ஒரே யானையின்; கபோல பி⁸த்²யோ: = கன்னங்களில் மதஜலம்; ஜல = தண்ணீரில்; அவகாஹ = பிரவேசிப்பதால்; க்ஷணமாத்ர = கணநேரத்தில்; ஶாந்தா = போக்கிய; மத³ = மதஜலத்தின்; து²ர்தி²ந = மழையின்; ஶ்ரீ: = சம்பத்தானது; வந்யேதர = காடல்லாது நாட்டிலுள்ள; அநேகப = யானைகளின்; த¹ர்ஶநேந = பார்ப்பதால்; புந: = மறுபடியும்; தி²தீ²யே = விருத்தியடைந்தது.

(க-ரை) அந்த யானை நீரில் மூழ்கி வருவதால், அதன் கன்னங்களில் ஒழுகும் மதஜலமானது சற்று நேரம் நின்றிருந்த போதிலும், அந்த அஜமன்னனுடைய நாட்டு யானைகளைக் கண்டதும் அதன் கன்னத்தில் மறுபடியும் மதநீர் ஊறியது. (நிகழ் வினவிற்சியணி)

சு॥ ஸப்தச்ச¹த² க்ஷீரகடு ப்ரவாஹம்
அஸஹ்ய மாக்²ராய மத³ம் ததீ²யம் ।
விலங்கி³ தாதே³ாரண தீவ்ர யத்நா:
ஸேநா கஜேந்த்²ரா விமுக¹ா ப²பூ³வு: ॥ 48

(ப-ரை) ஸப்தச்ச¹த² = ஏழிலை வாழையின்; க்ஷீர = பாலைப் போல்; கடு = மணம் நிறைந்து; ப்ரவாஹம் = ஒழுகும்; அஸஹ்யம் = சகிக்கமுடியாத; ததீ²யம் = அந்த யானையின்; மத³ம் = மத நீரை; ஆக்³ராய = முகர்ந்த; விலங்கி³த = அலட்சியப்படுத்தப்பட்ட; ஆதே³ாரண = மாவத்தர்களின்; தீவ்ர = அதிகமான; யத்நா = முயற்சி வீணாக; ஸேந = படையிலுள்ள; க²ஜேந்த்²ரா: = யானைகள்; விமுக¹ா = திரும்பியனவாக; ப²பூ³வு: = ஆயிற்று.

(க-ரை) ஏழிலை வாழையில் வெளிப்படும் பால் போன்று நறு மணமுள்ள அந்த யானையின் மதஜலத்து மணம் வீசவே, அதை முகர்ந்த அவ்வரசனின் யானைகள் யாவும் அதைக் கண்டு சகிக்க முடியாமல் மாவத்தர்களின் கட்டுப்படுத்தும் முயற்சிகளை அலட்சிய படுத்தி அங்கு நில்லாது ஓடின. (நிகழ்வினவிற்சியணி)

சு॥ ஸச்சி¹ந்ந ப²ந்த³ த்³ருத யுக்²ய ஶூந்யம்
ப⁸க்²நாக்ஷ ப்ரயஸ்த ரத²ம் க்ஷணேந ।

